பிஸ்மில்லாஹி.

# சாதுலி நாயகம்.

இஃது

காயற்பட்டணம்

விளக்கு

முகம்மது முகியித்தீன்லெப்பை ஆலிம்காபிலு

அவர்கள் குமாரர்

அகுமது முகியித்தீன்லெப்பை

அவர்கள் குமாரர்

விளக்கு

## முகம்மது முகியித்தீன்லெப்பை

ஹாஜி புலவர் அவர்கள்

இயற்றியது.

யாழ்ப்பாணம்

மு. சுலைமான்லெப்பைப் புலவரவர்களாற்

பரிசோதிக்கப்பட்டது.

ஷை முகம்மது முகியித்தீன் ஹாஜி புலவர்

அவர்களால்

யாழ்ப்பாணம்

ஸ்ரீ "சண்முகநாத" யந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.





1914.

# சாதுலிநாயக படல அட்டவணை.



ஆகப்படலம் ௨0-க்கு, திருவிருத்தம்; ௪௯௪. காப்பு, ௧. ௪௬௫.

# நவரத்தினபுஞ்சம் செய்யுளட்டவணை.

# சாற்றுகவிகள்.

இஃது

யாழ்ப்பாணம் மகா-ா-ா-ஸ்ரீ

செய்கு சு. முகம்மது அசனுலெப்பை

ஆலிம் புலவர் அவர்கள் இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

புகழ்சார்ந்த நெறிமுழுதுந் தனக்குரிய
பரம்பொருளைப் புவனம்யாவுந்
திகழ்தரநற் காரணராச் சிறந்தநபி
பெருமானைத் தெரிக்கும்வல்ல
அகழ்நெறியின் ஆரிபுக டமைப்போற்ற
லவர்சரித மவனிகொள்வான்
இகழ்நிலைமற் றிரிந்துபடப் பரப்புதன்மிக்
கிதந்தருமா லெனவுள்ளோர்ந்து. (க)

இறைவனரு டேக்குமுயர் குத்பாகித்
தரீக்கொன்றை யியற்றுங்கோமான்
குறைவறுசீர் அபுல்ஹசன்ஷா துலிகாதர்
சரிதையினைக் கூறுமன்பர்
கறையென்னப் பொருள்பயக்கு
"நபஹாத்துல் அன்பறினை" நயந்தநூலே
யறைவழித்தாம் ஷாதுலீ நாயகமென்னும்
பிரபந்த மதுவுமின்னும். (உ)

பொருண்மலியு மிறைவேத மெமக்கருளித்
தடுமாற்றம் போக்கும்வல்ல
தெருண்மலிய விரிவுக்கு நபிபெருமான்
றமைப்போற்றுஞ் செய்யுண்மற்றும்
அருண்மனத்தார் தாமேயாய் நீனென்னுஞ்
சுடரதனை யவிப்பான்றன்னும்
இருண்மனத்தார்ச் செருக்குமுயர்
பத்ரிய்யூன் றமைப்புகலு மிசையின்பாவும். (௩)

என்னுயிருக்குயிராக யான்காணுந்
தேசிகர்தம் மியலெஞ்ஞான்றும்
மன்னுறுசீர் கௌதுமுஹ் யித்தீன்றங்
கருணையது மகிழ்ந்துவேண்டும்
பின்னுமது முனுஜாத்தும் ஷாதுலிய்யா
வெனுந்தரீக்கின் பெம்மான்றம்மை
முன்னிலையிற் படுத்திறைபா லுளங்கசிந்து
வேண்டுதல்செய் முனுஜாத்தோடும். (௪)

மதிப்புடையா ரிறைவாஞ்சை யிதம்புனைந்தா
ரதிகாரம் வகித்தார்கீர்த்தி
யுதிப்புடையார் நால்வர்தகை நனிமதித்து
வேண்டுகையி னுரைக்கும்பாவும்
பதிப்பொருளிற் பயப்பாடு மிரப்பினொடு
பாஞ்சாட்டும் பனிக்கிற்காட்டு
மதிப்பெருக்கி னின்னனவு மன்னசில
பதம்பிறவு மகிழ்விற்செய்தார். (௫)

பேரோங்கும் காயனகர் அஹ்மத்
முஹ்யித்தீனும் பிரபுபாலர்
ஏரோங்கு மப்பதியி லுயர்குலத்தைச்
சார்ந்துகனிப் பெய்துந்தக்கார்

சீரோங்கி யச்சமற விளங்குமக்க புரம்ஹஜ்ஜு
செய்தமேலோர்
நேரோங்கு பலகல்வி கேள்விகளான்
மனவண்மை நிலவுஞ்சீலர். (சு)

பெரியார்தந் தகையினைத்தா மென்றறித
லரிதவர்சொற் பிரித்துத்தேர்தற்
குரியாரந் தகையினரே யவர்சொல்லின்
விகற்பமுறி னுணருங்காலைச்
சரியாத லொற்றுமைப்பட் டொரோவழிக்குண்
டற்றன்று தவறேயென்னி
லரியாரே தாமெனினுங் குறையில்லா
ரல்லரந்தவர்க்கும் பண்பே. (எ)

பொறுத்தருளப் போதுமிறை யவர்கோளா
னிடையூறு பொருந்தாவண்ண
நிறுத்தரிலை யவன்போது மாயினுநன் மனமுயற்சி
நிகழும்பேற்றை
யுறுத்துமுறை யானெவரு மாராய்ந்து துணிதல்கட
னுலகத்தென்னு
நிறுத்திடுமுற் பிரமாண மாமிவைக
டழீஇக்கொண்ட நெறியினோடு. (அ)

உலகுமிசை மாந்தரிடை யொற்றுமையுண்
டாம்வழியை யுணர்ந்துதேடல்
கலகமியல் வழிதுணிபி னெடுப்பதினு
முசிதமெனக் கருதுவேற்கு

நலனுறுமிக் கொள்கையது மாறுபடா
தொழுகுமொரு நண்பரானோர்
வலனுறுநன் முகம்மத்முகி யித்தீனா
நாமமது வகித்துளோரே. (௯)

பெருந்தகைய யாழ்ப்பாணந் திகழுமுகம்
மதுமீறான் பெட்பின்பாலர்
அருந்திநனி யிலக்கணமு மிலக்கியமு
மமுதகவி யாற்றும்வல்லார்
பொருந்துபல கலைதேர்ந்து விளங்குசுலை
மான்லெப்பைப் புலவரேறு
திருந்திடமுற் பாடல்கவி வேண்டுவழி
மாற்றுபுமன் சிறப்பித்தாரே. (௰)

பூநறவம் புரைபாக்க ளச்சிடுவான்
வத்தகத்திற் பொலிந்தார்காயன்
மாநகரம் வசித்திடுவோர் ஹபீபுமுகம்
மதுவென்பார் மைந்தரான
நாநலத்தின் செய்யித் அஹ்மதுவோடு
மஹ்மூது நயினார்பாலர்
பாநலந்தேர் முஹ்ம்மத் முஹியித்தீனும்
பொருளீந்தார் பரிந்துமாதோ. (௧௧)



இஃது

தைக்காசாகிபு செய்குமுகம்மது சாலிகு ஒலியுல்லாஅவர்களின்

கலீபாவும் குத்பு நாயக வநுசாதன புராணமுதலிய

பிரபந்தகருத்தாவுமாகிய

யாழ்ப்பாணம்

மகா-ள-ள-ஸ்ரீ-மு. சுலைமான்லெப்பைப் புலவரவர்கள்

இயற்றியது.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வானகமும் புடவிகடன் மலையறுசு
  குருசுமுதல் வகுத்துச்செவ்வி
மானகமா யுடற்குயிரா யுயிர்க்குடலா
  யிடன்கால வரைமற்றின்றித்
தானகமுற் பூர்வீகந் தத்வாதி
  பண்புபெறாஉத் தனிக்குங்கோன்மை
யீனகமின் றியவளிக்கு மொருமுதல்வ
  னருணிலையெஞ் ஞான்றுமேவி. (௧)

தோற்றுமெழு வகைப்படைப்பி னேதுவெனத்
  திகழ்கருவாய்த் தொக்கியுண்மை
யூற்றமிகு பூரணமா நபிமார்கள்
  சிரமணியா யொருமையோங்கு
தேற்றமுறு முயர்தீனின் சேஷ்டரென
  வுளர்ந்துறதி தெளிக்குநீர்மை
யாற்றலெழு மகுமூது நபிபுதல்வி
  மகமகவா யமையப்பெற்றோர். (௨)

மணிதிகழும் பரவைநில னுயிரனைத்
மாணையிடூஉம் வலியமாட்சி
யணிதிகழும் பொருளருளி னுலகநிலை
குலைத்தனுரு வருமைமேயாங்கு
கணிதிகழு முளைபொருவு நெறியுயர்வி
னவநிகழுங் கருத்தர்தம்முட்
பணிதிகழும் வழியொடுறு மபுல்கசன்ஷா
துலியெனுநற் பயனின்மிக்க. (௩)

சீர்சாலுங் குத்பக்குபற் சரிதையுளிற்
சிலநுகர்ந்து சிறக்குமாற்றி
னேர்சாலுஞ் சருக்கமுறை மரபுடைத்தாச்
சொற்பயனு நிகழ்வானுகப்
பேர்சாலு நூலுஞற்றி ஷாதுலிநா
யகமெனும்பேர் பிறங்குநோக்கத்
தார்சாலும் புலவுணர்வி னனுகரண
வியன்பெறுமா றருளியன்று. (௪)

பதிநிவந்த மதமிழித்துப் பதநிவந்த
நியதிகொளப் பாரினித்யங்
கதிநிவந்த தகைபுரிந்த துதிநிவந்த
மறைப்பெருமான் கழற்கென்றுள்ளி
விதிநிவந்த சிலகவியும் விறனிவந்த
பதுரிய்யூன் மேற்றுப்பண்பி
னிதிநிவந்த நாமமொடு மருணிவந்த
மாலிகையு நிலவுங்கீர்த்தி. (௫)

செங்கதிரு மிருசுடரும் வதியளவை
செகமுழுதுஞ் செலுத்தும்வண்மை
பொங்குமதி காரநம்பாற் றிதுசரத
மெனத்தெளிவிற் புகலுமாற்ற

றங்கினரென் னுயிர்க்குயிராம் குதுபுலகு
    தாபிருதாட் டகுதிவேண்டித்
துங்கமுனு ஜாத்தொடுஷா துலிநாதர்
    முனுஜாத்துந தொடர்பல்பாவும். (௬)

இன்னதகை யுளரலர்மற் றைம்பெரியோர்
    மீதுறுநல் லினியகோவை
துன்னுகவி வண்ணமொடு சித்திரகீர்த்
    தனம்பலவும் தொக்குநாம
மன்னுநவ ரத்னபுஞ்ச மெனச்சூட்டி
    யையநனிவழக்கினின்பத்
தங்கிலெயி னகமுவந்து சொன்னிலெயி
    னயநினைந்து தருக்கிற்றந்தார். (௭)

அற்புயர்நற் கலைவலர்வா ழருங்கீர்த்தி
    யெழுங்காய லருமையோங்கு
கற்புயர்மேன் றகைநெறிசேர் அகுமத்முகி
    யித்தீன்கண் மணியிற்கண்டார்
சொற்பெருமை யுளரன்று தொழில்பலவு
    முயல்பயில்வுத் தொகையின்மேவும்
பொற்பின்முகம் மதுமுகியித் தீன்ஹாஜி
    புலவரெனும் புதுநாமத்தோர். (௮)

விரும்புநர்செங் கரமேந்திப் படித்தகமிக்
    குவப்புறுவான் விழைந்துபூவிற்
றரும்பயனி னச்சியற்று நிதியளித்துப்
    பேர்வகித்தார் தகையினவ்வூர்
வரும்பயனின் கபீபுமுகம் மதுமகவாம்
    செய்யிதகு மதுவோடுள்ளம்

பெரும்பயனி னிலகுமுகம் மதுமுகியித்
தீனெனுநற் பிரபுமாதோ. (௬)

சொற்றமுறை யிந்நூலி னக்கரஞ்சொற்
பொருட்சிதைத றொடர்பினீக்கித்
தெற்றெனநன் குறத்திருத்தி வழூப்பலகுற்
றமுந்தடியுஞ் சிறியனென்பாற்
பற்றுதவ நிலவியமிக் குரிமைபெறப்
பார்புகழ்செய் பண்பினுதர்
நற்றவநற் றெருளருளும் புரிகுகவெஞ்
ஞான்றுமென நயக்குமன்றே. (௭)



## கீழக்கரை செ. மு. செய்யிதுமுகம்மது ஆலிம்
### புலவர் அவர்களியற்றியது.

---

பூமேவு பொறிபுலனுக் கடங்காத புனிதபிரான்
பொருவிலாத
கோமேவு மொருபெரிய தனிமுதலாய்
நனியுலகோர் குணத்தினொரு
பாமேவு மொருமூன்று மலமொருவி
நிலைபரமாய் மருவினோர்தந்
தாமேவு மனத்தளவி லமர்ந்தொளிரு
மெமதிறையோன் றுதிமேற்கொண்டே.

பொறிவாயி லைந்தவித்தே புவனமிசை
புகழ்பரவப் புகுந்தார்க்கெல்லாம்
நெறியாக வருமரிய மறைநபியி
னுயர்களபா நிலவும்வாளைப்
பறிபீறிப் பாய்மதினப் பதிபரசு
புரியிரசூல பதமேற்கொண்டும்
அறியாத பெருமறிவை யறையவரும்
வழிக்குரியோர்க் களவின்றன்றே. (உ)

பிறர்வலிய வருவதல்லாற் பிடித்திழுக்குந்
தகைமையது பெரிதும்பூணு
தறநெறியை யருளவரு மபுல்ஹசனுஸ்
ஸாதுலியென் னபிதானத்தார்
முறையணுவும் பிறழாத முதனிலையா
ரிதமுடையார் முரணில்லாத
நறவொழுகுந் திருவடிக்கே சாதுலிநா
யகமெனுநா னவின்றுரம்மா. (ங)

அன்னவரி னடிமருவு மன்பரடிக்
கடிமையென வறையுமேலோர்
கன்னல்செறி கழனிவளம் பரவுமுயர்
வகுதையெனுங் காயலூரார்
முன்னுமுயர் தாளமொடு மிளிர்பவள
ரெத்தினங்கண் முழுதுமொன்றாய்
துன்னுபெரு வர்த்தகத்தின் றொல்லியலி
னல்லியலோர் துகளில்லாரே (௪)

வாழ்வோரைக் கண்டனரால் வயிறுப்பி
வீங்குவதே வளமையான
மாழ்வோரைக் கண்டனரான் மனமொருவித்
தினமகனு மகிமையானோர்
தாழ்வான நிலையுடையோர் தமக்கிரங்கி
யுதவிசெயுந் தரமேற் கொண்டோர்
ஆழ்வாருக் ககமுருகி யனுதினமு
மறிவருளு மன்புள்ளாரே. (௫)

ஒலிமாரின் றிருப்புயமீ தொளிருமுயர்
பதக்கமலை மொருபோதேனு
நிலையாக நிலைநிறுவ திலையாயி
னவர்தகைமை நிலவவென்றும்
பலியாதென் றருளவரும் பதவியினாற்
ரக்தாயின் பதியாய்வந்தோர்
சலியாது நலனுதவு முகியித்தீ
னுதரடி த்லைமேற்கொண்டோர். (௭)

அகலாத பெரும்புகழா ரகுமதுமு
கிய்யித்தீ னவர்களேற்ற
மகவாக வந்துதித்த மகிமையினார்
தகைமையினார் மருவுநல்லோர்

சகவாச மிருதியுள்ளார் தனையடக்குந்
தன்மையினார் தணிவில்லாத
சுகவாசி யினர்திறமை யெடுத்தியம்பப்
பலபனுவ லிடம்பெறுமே. (அ)

வாசியா முயர்பதிக ளடைந்துவரு
மாட்சிமையார் வசைசொல்வார்க்கும்
ஆசியா மொழியருளி யன்னவரி
னகங்களிக்கு மறமேசொல்வார்
யோகியா ரொருபொழுது மறமலதை
முகம்மதாமு கிய்யித்தீனும்
ஹாசியா ரெனுமரிய கவிபலரின்
மகிழ்பரவுங் கணிப்பில்லாரே. (௯)

இன்னபெரி யோர்புகழு மிசைநூலை
மலையினொளி யிலங்கிற்றன்ன
வின்னமற லச்சியற்றி யிசைபுனைந்தா
னிலங்கைமற்று மேனாடெல்லாந்
தன்னயமே கருதாத தன்மையினால்
வண்மையினாற் றகுதிபூண்டோர்
மன்னவரா மினர்க்கினிய செய்யிதகு
மதுநாமம் வளர்சீமானே. (௰)



உ
கூ

மதுரைஜில்லா திருப்புத்தூர் "அருள்வாக்கி" வித்துவதீபம்

# அப்துல்காதிறுப் புலவர் அவர்கள்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடி லடியாசிரிய விருத்தம்.

பூமேவு மருவெனவு மணிமேவு
மொளியெனவும் பொருந்திநாளு
நாமேவு சுவையெனவு முடனமேவு
முயிரெனவு நாகலோகங்
காமேவு புவனமெலாங் காத்தளிக்கு
மொருபொருளாங் கருத்தன்றன்னைப்
பாமேவு முள்ளகத்தும் புறத்துமொரு
படித்தாய்மெய்ப் பரவிமன்னே. (க)

தன்னடக்க மிகம்புரிந்து தன்னறிவைத்
தன்னரசாய்த் தரித்துஞான
நன்னடக்கை வழிப்படுத்திப் பேரின்பக்
காட்சிநிலை நயந்துதேடிப்
பன்னகத்திற் கொடியவிடப பற்றறுத்துத்
தவம்புரிந்து பாரிற்சீர்த்தி
மன்னுமுத்தர் குதுபுலக்ப றபுல்கசன்சா
துலிகோமான் மான்மியத்தை. (உ)

சாதுலிநா யகமெனப்பு ராணநிறீஇ
முனசாத்து பதுரிய்யின்கண்
மீதுசிறப் புறுபாவுஞ் சித்திரப்பாக்
களுங்குதுபு லகுத்தாபின்மேற்

பாதுபெறு முஞ்ஜாத்து முகம்மதுற்
றருள்நயினர் பதுமத்தாண்மேற்
காதலுற்று மனங்கசிந்து தொடுத்தகவி
மலர்மாலைக் கணமீதம்ம. (௧)

இத்தகைய பாவகமுற் றியற்றியநல்
லாசிரிய னிலக்கணத்தைச்
சுத்தமுட னியம்புதுமுன் னூண்முழுது
முணாந்துமறைத் தொடர்புந்தேர்ந்து
தத்துவஞா னம்பயின்று ஷறஉவழி
கடைப்பிடித்துத் தவத்திற்சார்ந்து
முத்திதரு ஹஜ்ஜியற்றி நல்லொழுக்க
வழிநடக்கு முறைமையோனே. (௨)

பூஞ்சோலை மீதளிக ணறவயின்று
பண்ணிசைக்குட புரமாங்காயல்
வாஞ்சாபோ கத்தமர்ந்த புலவர்சிர
கம்பிதஞ்செய் மதுரவாக்யத்
தேஞ்சாறின் பம்பயக்கு மிலக்கணலக்
கியத்தேர்ந்த சேமபூமன்
ஆஞ்சியறத் தவமுஞற்று முகம்மது
முகிய்யித்தீ னறிஞன்மாதோ. (௩)

அதிவீரராமபட்டணம்

## லெ. மு. முகிய்யித்தீன் பக்கீர் புலவரவர்கள்

இயற்றியது.

---

நிலமேற்று வழிக்கதிபர்க் கிறையமர்ந்த பெருமாஞர் நேர்மையார்ந்த, குலமேற்றுந் தவமகிமை குத்புகளிற் சிறந்தகலைக் குன்றாய்த்தோன்று, நலமேற்றும் ஷைகுஅபுல் ஹசனலியென் றிசைநாதர் நவமிக்கோங்கப், புலமேற்றுஞ் சாதுலிநா யகமெனும்பேர்ப் புராணமொன்று புனைந்துமன்னே.

தரம்பெரிய சொற்பொருளுங் கற்பனையுஞ் சுவைமிகுந்து தழைக்குமிந்நூல், வரம்புமிகை யறம்பொருளு மின்பமுடன்

வீடுஞற்றும் வரத்நிற்றந்தோர், பரர்பரையிற் குலமணியும் வர்த்தகமும் வித்துவமும் பல்குநேயம், நிரம்பவருங் காயல்நகர் முகம்மதுமுகியித் தீன் ஹாஜி நெறிசான்றோரே

வனமுயரிப் பிரபந்தக் கொடைவள்ள லெவரெனிலோ வதிநூலாக்யோர், இனமுயருந் தந்தையின்சோ தரர்மகவும் வர்த்தகத்தி லிணையிலாது, மனமுயரு நயத்தினரும் கபிபுமுகம் மதுலெப்பை மகவும்மானோர், தனமுயருஞ் செய்யுதகு மதுலெப்பை யெனுஞ்சுகுணத் தயையுள்ளாரே.

---

வண்ணை வைத்தீசர் ஒருதுறைக்கோவை நூலாசிரியர்

வண்ணைநகர்

ஸ்ரீமான். க. வைத்தியலிங்கம்பிள்ளை அவர்கள்

சொல்லியது.

---

ஆசிரியவிருத்தம்.

பானுமதி தோய்கிசியி லப்புலி யழைத்தநபி
பரிவோங்கு தௌகித்திரர்
பகரரிய வபுல்கச னலிகுதுபு லக்பரருள்
பரவுமபி தானர்மீது
தேனுலவு கவிவாண ரமுதென வருத்தத்
தெவிட்டாத செந்தமிழினாற்
றேமதுர ஈாதுலி நாயக மெனும்பனுவல்
செப்பினு னொப்புயாவிலா
வானுலவு மீசனடி மறவாத சிந்தையான்
வளமேவு காயனகரான்
மன்னுபுக ளகமது முகியித்தீ னுற்றுதவ
மதலைமுக மதுமுகியித்தீன்
தீனுலவு ஹாசியா னதனையச் சேற்றினன்
றிருவோங்கு தனிகர்திலகன்
செய்யுது முகம்மதெனு நன்னுமணி யிணையற்ற
தெவ்வர்மகிழ் சீர்த்தியோனே.





பிஸ்மில்லாஹி

இஃது
அல்குத் புல்அக்குபற்
வல்கௌதுல் அஷ்ஹற்.

# மவுலானா
## அஸ்ஸெய்யிது அபுல்ஹசனி
## அலிய்யிஷ் ஷாதுலிய்யி

நாயகமவர்களின்,
இயற்கை செயற்கையினின்றுஞ் சங்கிரகமாகச்
செய்யப்பட்ட

# சாதுலி நாயகம்,
என்னும் அரிய பேரர்
# புராணகாவியம்.

உற்பவகாண்டம்.

### காப்பு

மலர்மேவு மருவெனவுஞ் சுதைமேவு சலமெனவு
மதியா வண்மைப்
புலன்மேவு மதியெனவே பொறிமேவி யுயிரெனவையின்
புணர்பிற் றோன்றாக்
கலைமேவிக் கருதுவருள் ளகமேவி காட்சிதரு
காரணத்தோ
னிலைமேவி துதலியநன் னெறிமேவச் சந்ததமு
நினைவிற் கொள்வாம்.

# சாதுலி நாயகம்.

## கடவுள் வாழ்த்து.

ஒருமையி னெழுந்த நாடடத் துயர்மொழித் தொகையி னெல்லா, மருமையிற் படைத்துச்சீவ வந்தரங்கத்தின் கோன்மைப், பெருமையிற் புரிந்து வாய்மை பிசகற விளங்கா நிற்குந், திருமயப் பொருளைப்போற்றித் தினந் தினம் வாழ்த்து வாமே. (க)

பிறந்தபல் லுயிர்கட் கெல்லாம் பிறங்கொரு கூலை மின்றித்
துறந்தன வளவிற் றாய்க்குந் தொல்பெரும் பொருளை யுன்னி
யறந்தரு பொறிமூன் ரொன்றி யறபக லிறைஞ்சு மாக்கள்
சிறந்தநல் லின்பந் தேக்குந் திருப்பதி யிருபபோராமே. (உ)

அகத்தன்றி யறியாதின்சா னனைத்துங்கண் ணின்றிக் காணுந்
தகைத்திறன் முதல வேழின் றகுதிமேவணடிய வாங் கிந்து
மகத்துவத்தளிக்கும் வல்ல வல்லபங்களை யெஞ்ஞான்றும்
பகுத்துணர் வுறாத்துஞ் சிந்தைய பரவசங் கொள்ளுமாறே. ()

வேறு.

ஆதிமுனொலொளியாய் பணியாயெழிலாய் மயிலா யருவாயப்
பாதியலாமறு வாஹறுயிராயிரு பார்வையி னுவிணைரா
யோதிய வேதமெலா முணரார் பொரு ளோசையினேர்மைமகு
மூதிருபாதசரோருக நாண்மலர் மூதறிவா னினைவாம். (௩)

வேறு.

ஆதமுதலாம் உலுல்லசுமி யவனைமுந் நூற்றுப்பதின்மூன்
றேதமகலு முறுசல்களை யிறைவ னொருமை விளக்குநவ
நீதரெனமே னுபுவத்தி னியதி வகித்த நபிகடமை
யோதி யுளத்திற் சந்ததமு மொருவா துணர்ந்து புகழ்வாமே.

## வேறு.

வழுமொழி புணரா துலந்திரு வாய்மைத் தடக்கிய வரத்
தபூபக்கரைப், பழுதிலா துயிர்போற் பரவுயிர் புரக்கும்பார்
த்திபருமறு கததாவைச், செழுமறை யெழுதுந் திசுழுது மா
னைச் சிங்கவே றெனுமலிப் புலியைக், கெழுமியமகிழ்வின்வி
ழுமிய பொருளிற் கிளர்தரப் புகழ்ந்து வாழ்த்துதுமால். (சு)

நலந்திகழ் சகுரா சகிதொடுதல்கா நலந்திகழ் சுபைபறப்
துற்றகுமான், குலந்திகழா மிறிவரொடுஹுசனை குசைனையுந்
துதித்தினி தேத்திப், பலந்திகழ் மக்க முஹாஜிரீன் மதினப்
பதியினன் சாறு கடமையும், வலந்திகழ் தருவான் வரன்மு
றை யாக வாழ்த்துது மலர்ப்பதம் வழுத்தி. (எ)

## வேறு.

ஏனுமாமறை யின்பகுப போடுநஞ்
சிலைநனனபி வாய்மை சிறந்தெழுத்
தாலமேவு சதூர்முறைச் சான்றசீர்
நாலி மாம்கணகும் பதம் போற்றுவாம். (அ)

## வேறு.

வல்லவுஞ் பருமான் கொண்டு மலர்ப்பத மவுலி யாக்க
ளெல்லவர் புயத்தும் வைக்கு மிருந்தவக் குதுபாய்த் தோன்று
மலைவிற் பெருமை சான்ற முகியித்தீ னப்துல்காதிர்
வில்லுமி ழெழிலின் பொற்றுள் விழிமிசை யணிவா மன்றே. ()

ஆரணா முறைதேர்ந் தோது மாறிபீ னவர்கட் கெல்லா
பூரணத் திறைவ ரெனனப் புகழணி முதலோனல்கு
மேரணி நாமம் பூண்ட வியலகு மதுல்க பீர்நற்
பேரணி குதுபின பொற்றுள் பெருமையி னிறைஞ்சு கிற்பாம்.

## வேறு.

மஞ்சுறுங் கவிகை நபிமுகம் மதுவை மலர்விழி யினினி
மைப் பொழுது, மெஞ்சலி ஞேக்க மெய்தில னெனின்மா
வெழின் முகலிம் களினிணைத்து, விஞ்சையிற் புகலப்படலை
மெனவே விளம்புநன் மாதவக் குருசி, றஞ்சமென் குத்துபா
மபுல்ஹசனலியின் றுட்டுணை யகத்திருத்துவமால். (கக)

வேறு.

பொருணயந்தருமறைப் போத நீதத்திற்
றெருணிறைந் துயர்தவந் திகழ்ந்து வல்லவன
கருணை சேர்முகம்மது ஹனபி சாதுலி
சரணபங் கயநிதஞ் சரணஞ் செய்குவாம். (கஉ)

வேறு.

காத ஞானங் கமழ் நபி பேரராய்க்
தாது சிந்து தடம்பொழி ஞைகைவாழ்
நாதர் சாகுல் ஹமீதொலி நாண்மலர்ப்
பாத மேத்திப் பணிந்திடு வாமரோ. (கங)

வேறு.

ஆதியருளோங்குமொலி சுலைமான் லெப்பை
ஆலிமா மண்ணாறமை யவர்தம் பேற்றாற்
பூதலத்தி னைந்தருவாய பிறந்து வண்மைப்
புகழ்பொருந்து மொலிமாரிற் புநித மேலி
யேதமற வந்துதித்த சதகத் துல்லா
வெனுநாம வள்ளலொடு மிகுவா ஞன
மூமெதொலிக ளைவரையு மறவாதென்று
முப்பொறியி னிறைஞ்சுதுமா றப்பிலாதே (கச)

வேறு

மாதவஞ் சிறக்குமோர்மை மகத்துவ நிலையின் மன்னி
யேதவ மெறிந் தெந்ஞான்று மிருநவம் புணர்க்கும் வல்ல
மூதறி வுயர்ந்த வண்மை முகம்மது புகாரித் தங்கள்
சீதமென் மலர்ப்பொற்பாதஞ் சிரமிசைச் சூடுவாமே. ( )

ஒருவனதுண்மை தேக்கு முமறொலி யுல்லா தம்மைத்
தருநவமகவாந் தைக்கா சாகிபைத் தருமசேயா
முருகலர்த் தொங்கன்மன்னு முகம்மது சாலிகென்னுந்
தருவையுட்கருத்தி னேத்திச் சந்ததந் துதிப்பா மன்றே. (கரு)

மெய்பெறு நெறியின்வன்மை மேவிய பொருணன்கீந்து
வையக முரைக்குந்தீனின் வழிமுறை யருள்வான்வந்த
செய்யிது முகம்மதுல்பா சியியிதஞ் செழும்பொற்பாத
மையமற் றகலவுள்ளத் தனுதினம் போற்றுகிற்பாம். (கஎ)

வேறு.

மன்னுமாகட லுலகெலா மருவிய லளித்துத்
தன்னுலாவினின் றிலகிய தக்கவ னருளால்
நன்னரிலைக்குறு நாயகர் நனிபுகழ் பெம்மான்
றன்னுகாரண சம்சுத்தீன் மக்கிதா டொழுவாம். (கஅ)

வேறு.

மெய்யராஞ் சரிதையோக மேதகு கிரிகைஞானத்
துய்யராங் காலமூன்று தெளிந்துரை சுகுணரெங்க
ளையராஞ் சமழ்ப்பிலாமெய் யறிவெலா மொருங்குதேக்குஞ்
செய்யரா முகம்மத்துசாலிஹ் சீர்பதஞ் சென்னிசேர்ப்பாம். ()

வேறு.

ஞானமுகளுங் கொடையாலு நெறியாலுங்கை தவத்தைக் களைந்துசிந்து, மனமுகளு மொழுக்குடைய மாதவத்தி னக மலையை மடக்கிநாளுங், கனமுகளுங் கதிவழியைக் கருத்தன்பா லருதினமுங் கலந்ததூயர், தனமுகளு மிஸ்கீன் சாகிபென்று தர் செஞ்சரணந் தலைக்கொள்வாமே. (உ0)

வேறு.

சொல்லும்ம ஆனி மந்திக்கொடு சொகுசாம் பிக்குகு நகுவுடனே, வெல்லு மனத்தா ரெவரெனினு வெருளார் தினமுந் தெருளாளர், நெல்லின் பழனக் காகிர்நகர் நிதியாம் செய்கு தூகுவொலி, யல்லும்பகலு மவர்பாத மணிவாஞ் சிரத்திற் பணிவாமே. (உக)

வேறு.

புக்காதர வுக்காநெறி மிக்கார்புகழ் தக்கார்
எக்காலமும் பக்காவில்மி தக்காரண ரெற்காம்

றுக்கானவர் முக்காலமு வக்காரில ரென்று
மக்காலெப்பை பொற்காலிணை யைக்காவுது மன்றே. ()

வேறு.

அறிவாயுளமது தெளிவாயணிசெறி யாப்பும்பல்வகை கோப்போடு, நெறிசேரறபியன் மொழியாப் பாடல்செய்நேருந்திசை புகழோயாதார், செறியும்பல தொடர்முறை யாமறையொடுஞ் சேரும்பாவகை சாயாதுங், குறியாப் பனுவல்செய் கோமானூ கொலிகுண சாகிபுபதங் கொள்வாமே. (உ௩)

வேறு.

நிரப்பாவளந்து குறைந்திடினு நேரும்பாக்கிற் குறைவுபடா, துரைக்காங்கிதாபு பார்த்துரையா ரோங்குந்தகுதி பாங்குடையார், தரிக்காவுலகுந் தரித்தோம்புந் தகைமையுடையார் தனமுடையார், மரக்கால்செய்யிது முகம்மதொலி மலர்த்தாளென்றுந் துணைத்தாளே. (உ௪)

வேறு.

வரையாதருணய முறையாப்பணிகலை வதியுங்குணமதி தெளியும்படியுள மறையாவையுமன முணர்வாமறிகட லெனவாகி, யுரையாதவகட மவையாவையுமழித் தொருவாதுவலோநற் கருணலயனருளுயர் மாதவநெறி பெறுவான் புவிநிகர் பொறையாளர், தெருளார்விறல்குண ஜெயவான்லெப்பை கனியொருவாது வகையின், மகிழ்மேவியவரு டிருமாமகவென வுலகோதியநலகுணவான்சீர், நராதிபர்நடு நயினாரப்துல்காதிர் செழுமாமலரடி யுளமீதனுதின நவைதீர்தருநய வெழிலாதரவுட யினைவாமே. (உ௫)

வேறு

சீருவியற்று முமறை யுணர் திகழும் காசிம் புலவர் தமை
மாரு புதூருஸ்ஸா முதல வழங்கும செய்குனு வென்னும்
பேரும் பெரிய புலவரை நேர் பிறங்கும் செய்னுத்தீ னெடுமா
வீரூங் கவிஞர் தமை வாழ்த்தி விளங்கும் பனுவல் செய்வாமே.

கடவுள் வாழ்த்து முற்றிற்று.



# பாயிரம்.

வேறு.

அருந்தவந்திருந்து மேன்மை யபுல ஹசன் சாதுலிய்யின்
பொருந்திய நவத்தின் பெற்றிதமுட்சில பொரு விலாது
தருந்தகையுலகினம்மோர் சால்புற வுணர்வான் கூறு
மிருந்தகைவிளக்குங் கோவை யென்பவா லிந்நூன் மாதோ. (க)

காகிறா னூகு லெப்பை கனதவத் தாலிம் செய்த
வாகுயர் நபஹாத்தென்னும் வரிசையின் கிதாபிற் போந்த
பாகுசேர் சரிதந்த முடபல னெழப்பயன் பலவோர்ந்து
சேகரத்தெடுத்துச்சில்ல செந்தமிழ்ப்பனுவல் செய்தேன். (உ)

இரண்டொருமூன்றென் றேது மிலக்கண மிலங்கி யத்திற்
றிரண்டநூற்கலைகளொனறாந் தெளிதராச்சிறியன் பாவம் [யு
விரண்டொதுங்கிய நங்கோமான் விழைவருண்மழைகொண்டுய்
மரண்டகுங்காவ னேடி யாத்தன னிதனை யன்றே. (௩)

ஐவகையெழுத்து மேன வாழியி னகத்துடடேக்கி
மெய்வகைப் புராணஞ் செப்பும் வித்துவக்குழாங்கள் முன்னி
னுய்வகை விளக்கு மென்னா வுயர்நவமணிக ணேரிற்
செய்வகைப் படிகமப்போ திகழ்வ தொத்துளதா மன்னே (௪)

பேரறி வுணர்த்தும் வல்ல பெரும்புல மாக்கள் செய்த
நேரறி புராண முன்பி னிகழுமென் கவிதை நோக்கிற்
பாரறி யரையர் வைகும் பைம்பொன்மா ளிகையின் முன்பி
னோரறி யஞ்சி ருரு முஞற்றுசிற் றில்போன் மன்றே. (௫)

அடிதொறும் வழுக்கள் பல்ல வாயினுங் கலையின் வல்ல
கடிபெறுமபெரியோர் குற்றங் களைந்து தம் பாலிற்கொள்வர்
மிடிபெறு மழுக்கினுள்ளார் மேற்பய னுணரா ராகத்
தடிபெறு மலக்க ணெய்திப யிதறறுத றணிகிலாரே. (௬)

அருமையினெறிகள் கோமா னபுல்ஹசன் சாதுலிய்யின்
பெருமையின்சரித மென்னப் பேணலி னமைந்து முள்ளத்

தொருமையிற் படிப்போர் கேட்போருதவு வோருவப்பிற்கொள்ள
ரிருமையும் பலன்கொண்டுய்யும் வழிநல னெய்துவோரே. (எ)

வேறு.

கார் செறிந்த பொழில் சூழுங் காயல் வாழும்
ஹபீபுமுகம்மது லெப்பை தவத்திற் றோன்றிப்
பேர் செறிந்த விலங்கை வருத் தகத்தின் மிக்க
பிரபலஞ் சேர் செய்யிதகு மது மன்னுன்றம்
மூர் செறிந்த மாமு நயினுன் செய் பேற்று
னுதவுமுகம் மதுமுகியித்தீனு மீந்த
சீர் செறிந்த விருந்தியின் சகாயந் தன்னுற்
றிருவரங் கச்சியற்றி யிந்நூறிகழ்ந்த தம்மா (அ)

ஆண்டகைநற் றிருப்புகழை யரும்பாவாக
வவனிமிசை யியற்றினரு மம்பொனல்கி
வேண்டுமுறை பெறுகுநரும் வலக்கை யேந்தி
விழை நயத்தி னேக்குநரும் விறல்பெற் றோங்கிக்
கூண்ட சுற்றந் தழைத்தோங்கி வாழ்க்கை யோங்கிக்
குடியோங்கிக் குலமோங்கி யாயுளோங்கிப்
பூண்ட சுபுத்திர ரோங்கிச் செல்வ மோங்கிப்
புகழோங்கித் தவமோங்கிப் பொலிக மன்னே. (கூ)

வேறு.

தொழுதகை கபீறு ரபுல் ஹசனலியின் றேல்பெருங் கார
ண நூலே, வழுவறத்திருத்தி வரன் முறை யொழுங்கில் வைய
கம் விளங்குவான் புரிந்த, செழுமலர்த் தடயாழ்ப் பாணந்
னகர்வாழ் தெருளுயர் சுலேயுமான் லெப்பை, யெழுமியற் பய
னினிறையருள் பெருகி யிருமையும் வாழிய மாதோ- (க0)

முதுநபி ஹிஜ்றத்தாயிரத் தொடுமுந் நூற்றிருபதிற்றுன்
பானுண்டி, னதிவித நவஞ்சே ரபுல்ஹசனலியெம் மாண்ட
கை யருர்புகழறைந்தேன், பதியினிற் சிறந்த காயன்மா நகர்
வாழ் பண்பகு மதுமுகி யித்தீன், றிதிதரப் பயந்த முகம்மது
முகியித் தீனெனுஞ் சிறு சுதனன்றே. (கக)

பாயிரம் முற்றிற்று



# நாட்டுப்படலம்.

திங்களையழைத்துப்பேசுந் திருநபியிறசூலுல்லா
சங்கைசேர் மரபிற்றோன்று மபுல்கஹசன் சாதுலிய்யா
மெங்கணன்னயிஞர்வந்த மகுரிபென் றிசைக்குந்தேயம்
பொங்கிய கிமாறத்துற்ற நாட்டணிபுகலுவாமே. (க)

குலந்திகழ் தவத்தின்கோமான் கோதில் வெண்புகழே யன்ன
பொலிந்தெழுவெள்ளைமேகம் பொருதிரையுவரிவீழ்ந்து
சலந்தனையுண்டு மேலிட்டுயர்ந்து தண்படர்ந்துசேணிற்
பொலந்தரு சிகரவெற்பினிடனறப போந்தவன்றே. (உ)

காயத்திலிடர்ந்துமல்குங் கரும்புயற் குலங்களெல்லா
நேயத்திற்சிறந்தாரென்ன நெறிதருங் கருணையோடு
தோயத்தின் கதிர்விட்டொல்காத் தொகுநயன்விளக்குமாறு
மாயத்தின் வறுமையோட்டும் வழியெனப் பொழிந்தமாதோ.()

வேறு.

படர்ந்த வெண்ணுரை பரங்கெழு புற்புதந்தோன்றத்
தொடர்ந்து சுற்றிய முழைஞ்சகந் துருவிய தோய
மடர்ந்தெழுந்து மக்குறிஞ்சியின் கருவுரி யகலா
திடந்தரச் செறிந்தோடி வெஞ்சுரத்தி னெய்தியதே. (ச)

பரலின்வெங் கொடும் பாலையுஞ் சேறெழப்பாய்ந்து
கரவெயிற்றிய ரெயினரும் புலனறக் கடிது
பரவுகானதி புடைபயின் முல்லையிற் படர்ந்தே
விரவு மாயர்களைக்கிய வடர்ந்தது வெள்ளம். (ரு)

புறவமன்னிய தொறுவர் பல்பொருளெலாம் புரட்டி
நறவுசிந்திய மலர்கனி முதல நன்கமைத்தே
யறவுயர்ந்த மாவரம்பை யங்கரும் பிரும்பனசம்
பிறவுமன்னிய மருதத்திற் பெருகி யுற்றதுவே (சு)

கந்தடங்குறு மதங்கொள் வாரண மெனக்கடுகி
முந்துநீத்தம தெங்கணு முனைத்திறன் மூட்ட
வந்து மள்ளர்கடெரிந்தனர் மறித்து வாய்க்காலின்
விந்தையாய்ச்செழும் பழனமல குறுந்தடம் விடுப்பார். ()

பருத்ததிண்புய வுழுநர்கள் பகட்டின மிணக்கித்
திருத்து வண்ணிலச்செய்தொறுஞ் சேறெழவுழுது
கருத்தினுண் மகிழ்வொடு மொருகருத்தனைத்துதித்துப்
பொருத்துஞ் செயமணியெனத் திருப்புதியவித்திடுவார். ()

கண்கொளாதன வுயிரினங் குடம்பையின் கருவா
யெண்கொளாதுயரரும்பிய வெழுந்தன வெழிலின்
மண்கொளுந்தொகை மூசியபாசொளி மருவிப்
பண்கொளுஞ்சிறு நெட்டிதழ்ப்பயிரினம் படர்ந்த. (கூ)

கன்னலங்களுக் கழன்றவெண் பணிகளுங் களுவு
மன்னுவாவ்வளை யுயிர்த்தனபிறவொடு வயங்கன்
மின்னும்வான்கண முதிர்ந்தனவென விளங்கியலிற்
றன்னுதண்பணை யிடந்தொறுந் தொறுந் துளங்கிடுமால்.

கருங்குழற் பிறைநுதற் பசுந்தொடிக் கடைசியர்க
ளொருங்கு கூண்டணியிழையிடை யொசிதர மயிலிற்
பெருங்களைத்தொடர் பறிப்பர் மற்றகற்றுவர் பேற்றிற்
றருங்கதிக்கிணை நாற்றினை நடுவர் பின்றகைய. (கக)

புன்னிலைக்களை தடிதலிற் செழும்பயிர் பூத்துத்
தொன்னிலைக்கிளை யடர்தரப்படர்ந்தெழுந் தோற்றஞ்
சின்னிலைக் கொடுந்தயவரின் குலந்தெறத்தேய்ந்து
நன்னிலைக் கொடைத்தவத்தர் தம்வாழ்க்கையைநண்ணும்.

நன்றிநாயக ரியற்றிய வழிமுறை நடையி
னின்றசாலியினின மெலாங்கருநிறை பணிபோற்
றுன்றுகாட்சியிற் காண்டகுமுதிர்குணத் தொகையாற்
கன்றிடாதபைங் கதிரேனத்தோன்றின கதிர்கள். (௧௩)

கலையிலாத புன்மைய ரிறுமாப்பெனக்கணியா
நிலையினேருற நிமிர்ந்த வெண்கதிர் முதிர்நெறியிற்
சிலையின் மேலுணர் நிறைமனப் பெரியரிற்சிறந்து
தலையெலாம் வணக்கொருநெறிவீழ்ந்தனசால. (௧௪)

தோற்றமுட்களி தொடரிய களமர்கடுணிபிற்
சாற்றிருங் கழனிகடொறுந் தறுகிலாத்தகவி
னேற்றுறுங்கருங்கூன் கருவியி னெழுமகிழ்வான்
மாற்றருந்திருவரியினமரியிடூஉ வகுப்பார். (௧௫)

மருங்கிற்சுற்றிய புள்ளின மள்ளர் வாய்த்தொனியா
லொருங்கயர்ந்துற வாய்ச்சிய ரொள்வளையொலிப்ப
வரிந்துபல்புறம் புடைபுடையணிகொளுமரியைத்
தெரிந்துசும்மையினள்ளுவர்போரினஞ் சேர்ப்பார் (௧௬)

இனந்தரும்பல சிவராசிக ளிதம்படைப்பக்
கனந்தரும்படி குவிந்தநற் போருறை காட்சி
மனந்தெருண்டுலகுடற்றிய வறுமைபின்வாங்க
வனந்தருந்திருப் பொன்மலை வதிந்தெனவயங்கும். (௧௭)

மேரிற்றேற்றிய போரின நிலனிடை வீழ்த்திக்
காரிற்றேற்றிய பகடுகணிரைநிரை கணியா
வேரிற்றேற்றிய விவர்ச்சியின்வளைத்தனர் மிதித்துக்
கூறிற்றேற்றிய வைவொரீஇ நென்மணி குவிப்பார். (௧௮)

புதிய நன்னிறச் செந்நெலின் பொலிபுகழ் விளங்கு
கதியின்மேலவர் செயுலெனக் காலினிற்பிரித்து
நிதியினாகிய மணித்தொகை யீண்டிய நிறைநல்
விதியினாதல ராநியர்க் கருள்வருள் விழைந்தே. (௧௯)

பகுதியாற்றிய நெறியிடை மன்னிய பரிவின்
றகுதிகொண்டன ரொருங்கெடுத்தகக்களிசால
விகுதிமன்னுயர் பாண்டில்கள் விளக்குறப்பரித்துத்
தொகுதி கொண்டணிமனைதொறுங்கூலங்கடொகுப்பார்.

பரந்தபுள்ளினம் பண்ணைவாய்க்கிளை தொறும்படர்ந்து
கரந்ததானியங் களிபெறக் கருதியூணுணர்விற்
றிருந்துகூங்கிளை யோதை விண்டேக்குறச்செழித்து
வருந்திலாச்சுவைவிருந் தெனவயின் வயின் மல்கும். (உக)

கான்களெங்கினு நறுமணம வெடியெழக்கமழு
மூன்களெங்கினுங் களிதருமுயிரின மொதுங்கு
தேன்களெங்கினும் விளரியின் செவ்வழிபாடும்
வான்களெங்கினும் வனமடர்புதிய நீர்வழங்கும். (உஉ)

காய்கனித்திரளேற்றிய கனத்தபண்டிகளுஞ்
சேய்மலர்த்தொகைவகைவகை செறித்தபண்டிகளுந்
தூயபல்சரக்கினம்பல தொகுத்தபண்டிகளும்
வாயன்மாமறு கெண்ணில வணியணி வருமால். (உங)

மெய்யெடுத்தவர் மெய்யலாதொன்றிலை விளம்பல்
பொய்யதொன்றிலைப்பொழில் பயில்பொய்கைமற்றன்றிச்
செய்தொறுஞ்செழுஞ்செம்மையின்வண்மைகடேக்கி
யுய்கொழுந் திருவளர்ந்தெழுந் தோங்கு நன்னாடே. (உச)

வள்ளலென் றிருலோகமும் வாழ்த்தியநாத
ருள்ளமொன்றபுல்ஹுசனவியுற்பவ மோங்கு
தெள்ளிதாகிய புரிநனி சிறக்கிய திகழ்விற்
கொள்ளு மேன்மையிற் குலவிய கிமாறத்தினூடே. (உரு)

நாட்டுப்படலம் முற்றிற்று.



# நகரப்படலம்.

பேரணிந்து பிறங்கியமாதவத், தாரணிந்த
வபுல்ஹசன்சாதுலி, சீரணிந்தெழு சீர்த்திகிமா
றத்தா, பூரணிந்தவெழிற்சில வோதுவாம். (க)

நாதர்தோன்றிட மென்றயர் நன்றிலார், சூதடர்ந்தன
போல்வன தூய்மையி, னேதமற்றிருந் தேகியபாதலம், போத
வாய்ந்தது போன்ற தகழியே. (உ)

ஒன்னலார் வலியோங்கிய நால்வகை, வின்னமேவியதானை
வெருண்டொழிந், தின்னலெய்த வகன்றகழ்ந்தாலெனத், து
ன்னுவண்மை துளங்குமகழியே. (௩)

வேகமன்னர்கள் வெஞ்சினமாய்தர, மாகமேவெழிற்சோ
திமழுக்குறப, பாகமெங்கும் பதாகை துவன்றடர், நாகினெ
ன்றா நிவந்தெழு நாஞ்சிலே. (௪)

பானுவெண்மதி மீனினம் பன்மணி, யூனிலாதொளிறெய்
துயர் கோன்மையிற், றுனுலாவிய தன்மையின் வன்மையா,
லீனமின்றியிருக்கு மரணமே. (௫)

பூமியெங்குமளக்கும் புதுமையின், காமர்மேவுங் கருவி
களாமெனத், தோமிலாவணிமேவிய தொன்மையிற், சேம
மன்னித்திகழ்ந்த தெருக்களே. (௬)

வாசமேமிக வீசுமதுத்துளி, யோசை கூர்தரவுண்டெழி ல்வண்டினம், பாசமேவமிழற்றிய பண்ணொடு, மாசையெட் டுமடர்ந்தன சோலையே. (எ)

பொன்னினுன்மணியாற் பொலிவெய்திய, மின்னுசோதி யிருஞ்சுடர் வெட்குறக், துன்னுமேனிலை வானொடுதோன்று மான், மன்னுவீதி சிறந்தெழு மாடமே. (அ)

ஐம்புலாதி யடக்கியொருவனைத், தம்பமென்ன வணக் குயர்சார்பினல், வெம்புபாதகநூறி மிகுந்தவம், பம்புசீர் மையிற்றோற்று நற்பள்ளியே. (கூ)

கள்ளமேவுவெம்புன்மைகடந்தக, வுள்ளமேவு முயரறி வோங்கிய, தெள்ளுமேன்மறைச் சீர்த்தியிவர்ந்தெனப், பள்ளி யெங்கும் பரனருளோங்குமே. (க0)

பல்விதத்திற்பயின்றன பாடையின், கல்வியேமுதற்கார ணநன்மைக்கென், றெல்விதம்பிறமாற்றியுணர்ந்துற, நல்வி தப்பலசாலைகணண்ணுமே. (கக)

வேதமோதுவர் மெய்த்தவத்தோர்மையின், போதமோ துவர் புன்மைதணந்தக, வீதமோதுவர் நிர்மலமேகிய, வீத மோதுவர் விஞ்சையின்மாக்களே. (கஉ)

வேறு.

வீதிகடோறினும் வென்றிமன்னவர்<br>சீதவெண்மதியொளி திகழும்பான்மையிற்<br>கோதறுபலகலைதெளியுங் கொள்கையி<br>னேதமற்றெண்ணறு தொகையினீண்டுவார். (கங)

அருந்தவக்குழாஅங்களு மரசரீட்டமுந்<br>திருந்தியசெய்கு மாரறிவின்சீர்த்தியிற்<br>றருந்தகைப்பெரு முலமாக்கள்சாலிஹீன்<br>வருந்திலாமனத்தினல் வாழ்க்கைமல்குவார். (கச)

வையகமுழுது நல்வரத்திற்போற்றிய
செய்யிதுமார்களுஞ்சிறந்தமேனெறி
யுய்தவத்தொலிகளு முண்மைமாந்தருஞ்
செய்தவந்திகழிய ஜெயங்கொள்வாரரோ. (கரு)

பாய்மதக்களிறொடுபடரும் வாசியுந்
தூய்மணியிரதமுந் தொகைப்பதாதியுங்
காய்மனத்தலைவருங் கதிருமிழ்ந்தெழு
ஞாயிறின்மறுகணி நடையின்பன்னவே. (கசு)

சத்திரங்கப்பணஞ் சவளநேமியு
மத்திரஞ்சூலமுமயிலு மற்றவுங்
கைத்தலத்தேந்து கற்றோளின்வீரர்கள்
சித்திரக்காடசியிற் றெருக்கள்சூழுவார். (கஎ)

படையணிமுரசொடு மளிக்கும் பைஞ்ஞிழற்
கொடையணிமுரசு நற்கோதைமாமணம்
புடையணிமுரசெழுமோதை பொங்குசீர்க்
கடையணிபொலிபிற கலங்கச்செய்யுமால். (கஅ)

ஆலையினொலியினை யடக்கும்பூஞ்சினைச்
சோலையினொலியதைத் தோற்கச்செய்யுநீள்
வேலையினொலியினை மிகைக்கும்வேதத்தின்
சாலையினொலியெனிற் சாற்றற்பாலதோ. (ககூ)

வல்லவனருள்புனை வள்ளலாகிய
வெல்லவனிகரபுல்ஹச னென்றோதிய
நல்லவர்பிறந்திடு நகரமீதெனிற்
புல்லியவணிபிற புகறற்கில்லையால். (உ0)

நகரப்படலம் முற்றிற்று.





# தலைமுறைப்படலம்.

பரவுமேற்பயன் கொள்ளுநற்பண்புறாஉ
மிரவலோர்கட் களிக்குமிருங்கனந்
தருமலர்க்கை யபுல்ஹசன் சாதுலி
மரபினீர்மை மவுன்றிடுவாமரோ. (க)

வேறு.

தன்னொடுதானும் வல்லொன்றகுமொழிப் பொருடடின்சோதி
மன்னியவாதமேவி மகமகவழியாய்த்தோன்றித்
துன்னியவப்துல்லா நன்னுதரெுகுத்தாமினத்தின்
றென்னகடமைந்துவந்தார் திருநபிமுகம்மதன்றே. (உ)

எங்கணன்னயினுரென் னுமுகம்மதா மிறசூலுல்லா
திங்களின்வதனமுற்ற செவ்வியர்கதீஜாவென்னு
மங்கையைமணந்துபெற்ற மகார்தமுட்பின்னர்வந்தார்
பங்கயமகளின்வாய்ந்த பைந்தொடி பாத்திமாவே. (ங)

பொன்னறுமனையின்மாதும் பொருவுறுக்கற்பினின்ன
மின்னையுண்ணுகர்விற்கொண்டார் விறற்புயத்தபீத்தாலிபின்
மன்னியமகவாய்த்தோன்றி வன்குபிர்க்களையைமாய்க்குங்
கொன்னுனைக்கதிர்வாடசெங்கை யலியெனுங்கோவன்றாரே. ()

அறிமனைவாயிலென்னுமலியொடு பாத்திமாவும்
பொறியொடுஞ்செல்வத்தோடும் பொங்குபேரின்பத்தோடு
நெறியொடும்வாழுங்கால மிருநிதிபென்னவீன்றார்
குறிநிறைபெறுபேறெய்தும் ஹசனொடுஹுசைனையன்றே. (ரு)

பாய்கதிர்பரப்பும்பொன்னம் பதியுடைவருக்கம்பூண்ட
நாயகர்ஹசனென்றோது நன்னிதியனையீன்ற
சேயெனவிளங்கிவந்தார் செகந்தனிபுரக்கும்வணமைக்
காய்கதிர்மகுடம்பூண்ட ஹசனுல்முதன்னவன்றே. (சா)

செழுமதி முகத்தினின்ன செல்வரின் சிறந்த தோன்றன்
முழுமதி முகம்மதின்னோர் முதுதவத் தீன்ற பாலர்
வழுவகல் கலைதீசா விவர்வரத் துதித்த மைந்தர்
விழுமிய தகுதிபூண்ட வேந்தரா முகம்ம தன்றே. (எ)

செவ்விய நெறியினின்ன சீரியர்க் குற்ற செல்வ
ரவ்விய மகற்று மேன்மை யணிநிலை முகம்ம தாகுந்
திவ்விய விவரின் செம்மல் செய்யிது அகுமதென்போர்
கவ்வையி லின்னோர் பெற்ற காதலன் பத்தாலன்றே. (அ)

அரிதுணர் வரிசையின்ன வாண்டகை யருளும் வல்லோ
ருரிசிக்கும் வணக்கம்பூண்ட வறுதரா முவரின் றோன்றல்
பரிசுத்த நிலையினுய்யும் பண்பர் யூசகுவ தாகுங்
கரிசனத் துடைய வின்னோர் கண்மணி யூசுபன்றே. (௯)

தனிமையின் றவத்தின் னோர்தந் தனையராம் குசைப்பிதுள்ள
மினிமையி னிவர்தம் மைந்த ரியல்பெறு காத்தமன்னு
நனைமலர்ப புயத்தார் தந்த நாயகர் குறூமுசென்போ
ரனையவர் பயந்தபுதர ரப்துல்ஜப் பாறென்போரே (௧௦)

ஆதரந் திகழுஞ் சிந்தை யப்துல்ஜப் பாறென்றோதும்
பூதரம் பொருவுந் திண்டோட் புண்ணிய ரீனறபாலர்
மாதலம புரக்கும் வண்மை மகுடமன் னவர்களெல்லாம்
பாதக மகல்வான் போற்று மலர்ப்பதத் தப்துல்லாவே. (௧௧)

கெழுமிய கீர்த்தியோங்குங் ஹிமாறத்தென் றுரைக்குமூரிற்
குழுமிய வொலிகளோரா போறறிய குலவுமேன்மை
விழுமிய பயனினோங்கும் விறற்புயத் தபதுல்லாவா
மெழுமிய ஞதர்வலலோ னிறைமையின் வாழ்ந்துற்றரால். (௧௨)

தலைமுறைப் படலம் முற்றிற்று.

5



# அவதாரப் படலம்.

திருமுறை மறைநெறி செகத்திற் சீர்பெறப்
பெருமுறை நனியருள் சுரந்த னன்னிலை
யருமுறை யுபரபுல் ஹசனெம் மாண்டகை
வருமுறை யறிதக வழுத்து வாமரோ. (௧)

பலபல சிலசெந் தினமும் பண்புயர்
நலனரு ளிர்மையி னுட்டும் பார்வையாற்
குலவிய விறையவன் கொடையி னனய
னிலகிய கருணையே யிருக்குங் கண்ணினர். (௨)

ஆதிதன் னறியுணர் வமைந்து நித்தியஞ்
சீதவெண் மதியெனத் திகழுமுள் ளத்திற்
சோதக னுயிரினங் குறித்த கொள்கையா
லேதமி லாதரு ளிறைக்கு நீதியார். (௩)

நிகரிலா வல்லப நிவந்து தோன்றிய
தொகையெலா மொருப்படத் துலங்கு மாறெனத்
தகுமல ரெழின்மணித் தொடைய ருழ்தரூஉம்
பகல்கெழு மியபருப் பதத்தின் றோளினர். (௪)

தஞ்சமென் றடைநரைத் தாங்கு நேர்மையாற்
பஞ்சமொன் றில்லெனப் படரும் பண்பினாற்
கஞ்சமு மணிபிற கடைப்பட் டொல்கிய
பஞ்சொடு பொருதும் வான்றரு வின்கையினர். (௫)

கற்றவர் மறையவர் கருத்த ராயினர்
முற்றிய வொழுக்குடை மோன நீர்மையர்
சுற்றமு மன்பருந் தொழுஞ்செந் தண்மையி
னற்றவத் தப்துல்லா வென்னு நாமத்தார். (௬)

இன்னநன் னுதரி னில்லின் வாழ்க்கைமேம்
பொன்னெனப் பொலிந்த பொற்கொடி யிப்பூவிடைத்
தென்னுயர் மானனூர் கற்பெலாந் திரண்
டின்னய வுருவெழி லெடுத்த தோகையே. (எ)

ஆய்ந்தன வறிமுறை யரிய மாதவம்
பாய்ந்தன கருத்தொடு பரவு மேனயம்
வாய்ந்தன சுவனமா மாத ரும்புக
ழேய்ந்தனர் பெயர்திரு பாத்தி மாவென்ப. (அ)

கூறிய மேன்குலக் கொடியொ டாண்டகை
யேறிய செல்வத்தோ டின்ப வாழ்வெலாம்
வீறிய தகுதியின் மிகையிற் றுன்னிய
பேறியல் கொளநிதம் பெட்பி னுற்றனர். (கூ)

பிரிந்திடா வாழ்வினிற் பெருமை யோங்கிய
விரிந்திடாத் தலைவரு மேந்து சீருடைச்
சரிந்தபூங் குழலியர் தாமுந் தண்ணடை
விரிந்தல் வாழ்க்கையின் மேவு காலமே. (க0)

நெறிமுறை பிசகிலா நிச்ச யத்தினிற்
குறிமுறை யொலிகளும் குத்பு மார்களு
மறிமுறை நாயக ரலியுஷ் ஷாதுலி
செறிமுறை யனையர் பாற்செனிப்ப தாயினர். (கக)

அருந்தவ முனிவரு மன்பின் மாந்தரு
மிருந்தவத் தமுதரு மியைந்த ஜின்களும்
பெருந்தவச் சுவன மங்கையரும் பெட்பினிற்
றிருந்தகத் துவந்து சோபனஞ் சிறக்கவே. (கஉ)

ஆதிதன் னருட்கடன் மணியென் றம்புவி
மீதுறை மாந்தர்கள் விகசிதாம் புயப்
பாதநித் தியம்புகழ் பண்பி னுதராம்
சாதுலி யனைவயின் றரித்த காலமே. (கங)

எண்ணிறை நவமெலா மிசைந்து தோன்றின
பண்ணிறை வானரும் பணிக்கு மாற்றினிற்
கண்ணகன் புவியிடை கழறற் பாலர்மற்
றுண்ணுகர் விலரெனு மொருமை பூணவே. (கச)

பற்பல காரணம் படருங் கீர்த்தியுஞ்
சொற்பெற வளர்வபோற் றோகை மென்வயின்
கர்ப்பமு நாட்குநாள் வளர்ந்து காப்பினின்
முற்பெற பதின்மதி முதிர்வு கொண்டதே. (கரு)

வேறு

ஆரணப்பொருளா மிறையவனொளியா யகிலமற்றெவைக
ளும்விளங்கு, காரணப்பொருளா முகம்மதுநெயினார் கதிர்மணி
யெனவருகவின்கொள், பூரணநவஞ்சேர் மேனயத்தனையர் பொ
ற்பெழுமுதாரம் வைகியநற், சீரணிகருப்பந் திருவணிநிறைந்து
சிறப்பொடுமிளகி யுற்றதுவே. (கசா)

வையகம்பிறவும் வானகமெவையும் வரிசையிற் போற்றவு
மொலிகள், செய்யகஞ்சிறப்ப வாரிபீனொடுசீர் திகழ்தருமஷாயி
கின் மகிழ்விற், றுய்யகமுவப்பப் பல்லுயிர்தழைப்பச் சுருதி
நேர்முறை பெறுமனையர், மெய்யகம்வருந்த மெல்லிடைதுவள
வியனெழுங்கருப்ப நோயெழுந்த. (கஎ)

இருவிழிபனிப்பத்து வரிதழ்வெளுப்ப விருங்கருங் கூந்த
லுஞ்சோர, வருமுறைதிறம்பக் கால்கரமயர வடிக்கடியுதர்நோ
யுடற்றத், திருமயிலனைய விகுளையரெவருஞ் சேயிழைமாதர்மற்
றெவரும், பொருவகலனையர் வயினடைந்துளந் தேறுதலுறப்
புகன்றருகிருப்ப. (கஅ)

மருங்கிருபுறமுங் குலந்திகழ்மடவார் மருத்துவ மடந்தை
யும்வதிவுற், றொருங்கினிதுவந்தே யிடையிடையினையா துயர்
மகிழ்மொழி நனிபுகலக், கருங்கடற்புவிக்கோர் குத்பெனநிறு
வுங் காரணரபுல் கசனலியென், றிருங்கதியொலிகடுதி யிறைய
வர்மேதினி யுறக்குறி யிலகியதே. (ககூ)

எல்லையி னேவன் மறைதலைபுரியா வானவ ரரம் பையர் மகி
ழ்ந்து, சொல்லொளி பெறுவான மலர் சொரிந்தேத்திச் சுவன
நாடலங் கரித்திறங்கிப், பல்லரும்புகழு நாயகிமனையிற் பண்
புற வடுத்தநங் கவிப்ப, வல்லலில சுப சோபன மிக வழங்க
வபுல்ஹசனலி பிறந்தனரே (உ0)

மருணிலை வதிந்து பொருநெறி தெரியா மானவரொருங்கி
னல்வழி சேப, யருணிலை பெறுவான் பெருணிலை மறையினுநந்த
மயமென விளங்கித், தெருணிலை பெரியபக் குருத்தவ நிலைப்
பத் திருநவந் திகழ்தரவெவனுஞ், மிருணிலை யகற்றுஞ் சுடரெ
னப்பிறந்தா ரெம்மிறை யபுல்கசனலியே. (உக)

ஆதிதன்றொளியி னையைந் துலகெழுந்த வருமறை நகம்
மது நயினார், நீதியிற் பிறந்த மக்க நீக்கெழுந்த நிகழ் ஹிஜ்
றத்துறு வருட, மேத மிலைந்து நூற்று கொண் ணூற்றெழு
யைந்த மூன்றினில் சவ்வான் மதியி, லைதரந்திகழ் திமாறத்
தென்னகரி லபுல்ஹசனலி பிறந்தனரே (உஉ)

முன்னிலைபவரின் முன்னிலைபவரா முதுபுகழ் ஹசன் மர
பினிலே, நன்னிலை மேவுதோன்றலையவந்த நாயகரப்துல்லா
வுருவ, மன்னிலை பாத்திமாவெழினு ருவுமலிந்தன விலக்கணந
தோன்ற, வன்னிய மகல்வான் றிருவுருவென்ன வபுல் ஹசன
லிபிறந்தனரே (உங)

கலைதிகழ்ந் தெழுந்த முழுமதி தோற்குங் கவினொளி விள
ங்கியமுகமு, நிலைதிகழ் கனமு ங்கர்தராக்கருணை வந்தடைந்
திலங்கு நேத்திரமு, மலைதிகழ்புயமு மருவிரிமார்பு ணிதிகழ்
கரங்களும் வனச, மலைகரச் சிறந்த பதங்களும் விளங்க வபுல
ஹசனலி பிறந்தனரே (உச)

மாதர்கடிலத மகழ்ந்தெங்கோன் வரிசையிற்பிறத்தலுந்
திரண்ட, சூதரமொழியார் சோபனமுழங்கச் சுற்றமெ
ழலியர் சூழ்ந்து, சீதமென்மதியாங் குழவியை யேந்தித்திகழ்
நறும் புனிதநீராட்டிக், கோதறு துகிலிற் புலர்த்தின ரணைத்
துத்திருவனை கொழுங் கரங்கொடுத்தார். (உரு)

அன்னையர் வாங்கிப் புதியநல்லமுக மளித்தன ரொருபெரும்பொருளை, மன்னிய மகிழ்விற் புகழ்ந்துத தையரு மவ்வி தருமின்ப வாருதியிற், றன்னிலை மூழ்கி யிருவருள் ளுயிர்போற் றலத்துற நாடது நாள் வளர்ப்ப, முன்னவ னருள் சேரொலிகளுக் கரசாய் முதிர்நிலை யபுல்ஹசனை வளர்த்தார். (உ௬)

உலகமும் பிறவுங் காக்கும் வன்மையினி லுதித்திடு மணியன்னார் தமக்குத் தகையொன் றிலதாய் மேன்மையினிலருங் கருத்தெழுந் தகைமையிற் கனிப்ப, வலகிலாபுகழ் சேர்திருநவம் விளங்கு மலியெனு நாமமுங் கரித்தா, யிலகிய வல்லோன் காவலின் வள்ள லெனப்புற வளர்ந்தனர் மாதோ (உ௭)

அவதாரப் படலம் முற்றிற்று.



## கல்வி பயில் படலம்.

திரு விளங்கு சிறந்த செழுஞ்சுட
ருரு விளங்கு முவாமதி யின்கலை
மரு விளங்கி நிறைந்து வளர்ந்தெனக்
குரு விளங்கி வளர்ந்தனர் கொண்டலே (க)

ஆதிநாத னருமையி னல்லருட்
கோதிலாது குணத்தி னொருங்கெழுந்
தேதுதீர்தர வெய்தி யெழுந்துயர்
போதமொன்றப் பொலிந்து வளர்ந்தனர். (உ)

காக்கு நல்லறி வோங்கிய காரணந்
தேக்கு பான்மையிற் சிந்தை மகிழ்ந்துறப்
பூக்கு மேன்மையம் புண்ணிய நிவர்ந்தமெய்
வாக்கின் மன்னி வளர்ந்து சிறந்ததே. (ந)

இனிய வாய்மையு மின்னருட பார்வையும்
புனிதமுமப் பிறவும் புகழோடு சூழ்ந்
* துனத மேலவர் போற்றி பொருங்குறத்
தனியி லோது துளங்கின ரண்ணலே. (௪)

கதிரி னற்குழ விப்பரு வங்கடந்
ததிவி தத்தனி மைந்தனெ னும்பொயா
துதி மிருந்த வியற்கையிற் றொல்புகழ்
பதிய வாய்ந்த பருவமுற் றாரரோ. (௫)

பெய்யின் மேய வொழிலொடு மேன்குணந்
தூய்ய தன்மை கருணைத் திரம்பதி
பொய்யி லாவுரை யேனைய பொற்பொடு
பெய்து நாதர் விளங்கின ரின்பினே. (௬)

வேறு.

இன்னநற் பான்மையி னெங்கணன்னபி
மன்னிய பேரரின் வந்த நாதர்பாற்
புன்னிலை யகற்றப பொலிந்த மேனுணர்
சொன்னுயர்ந் தெனக்குடி கொண்டு நின்றதே. (௭)

செனித்தவந் நகரிடைச் செல்வ மோங்கிய
தனித்தவோர் ஷெய்கிடந் தகுதி மேம்பொரு
ளினித்தநன் மறைமுழு வியலு மின்பொடு
கனித்தவுட் கனிதரக் கற்கை யுற்றனர். (௮)

பார்ப்பன விழிகளும் பகரு நாவொடு
மேற்பன கந்தமுக் கிசைகொ டண்செவி
யார்ப்பன மெய்யிவை யறியும் பண்பெலா
மேற்பயன் கோடலின் வள்ளன் மேவினர். (௯)

ஒருவன திச்சையே யுவந்து நாட்குநாண்
மருவிய மனத்திடை வளர்ந்த பேரறி

---

* உன்னதம், உனதம் என இடை குறைந்தது.

வொருவுரு திபங்கலி னொருமை யந்துறை
பொருவற வமைந்தனர் புனித நம்பியே. (௧௰)

மனையினும் வெளியினும் வழிகொள் சார்பினு
மினிபொருண் மறைபயி லிடத்துங் கண்டுயில்
புனையினு முணவுறு பொழுது நன்மைசால்
வினையினும் விபுதர்கண் மேவிக் காப்பரால். (௧௧)

வல்லவன் குதுபென வளர்ந்த மேனிலை
சொல்லரும் வரிசையிற் றொகுத்த நாயக
ரல்லினும் பகலினு மருந்தவத் தகை
யில்லினும் வெளியினு மிசைந்து நிற்பரால். (௧௨)

இருமையி னிகழ்ந்தன விகழ்ந்து நன்னிலை
யொருமைமற் றிகழ்தர வுயிரு மற்றவும்
பெருமையிற் படர்கொளும் பேரருட் பொருட்
குருமையி னகம்பெறக் குறித்து நிற்பரால். (௧௩)

எம்மவ ருரையினுக் கெய்திடா நவ
நம்மிறை யுளத்திறை யுணர்வு நாட்குநாட்
செம்மிய புணாத்தலிற் றெருளோ நாடியே
யம்முறுந் தூனிசு நகர மண்மினர் (௧௪)

அரியவிந் நகரிடை யடைந்த நாயகர்
விரியுணர் வுணர்தருங் களத்து மேவியே
தெரிநிலைக் குருபலர் பாலிற் சீர்பெறப்
புரிநிலை யறிபல புணர்கொண் டாரரோ. (௧௫)

நகுவொடு சறுபு நல்லுகத்து நாற்பொரு
டகுவிதம ஆனி மன்கூலுந் தக்கவா
மிகுமகு கூல் ஹிக்குமத்து மெய்ந்நெறிப்
பகுமத புயர்ஹறதீ திவையும் பண்பினே (௧௬)

மறைப் பொருளுறு தபுசீறு மார்க்கமே
முறைப்படு பிக்குஹறு முசூலு மொய்ம்புய

கூறைப்படுபெருயிலு முவக்கு மேனைவுங்
கறைப்படாப்பலரிடங் கற்றிட்டாரரோ ௧௭

நாற்றுறை விளக்கிய நயந்த நூலகமேன்
மேற்றுறைப்படுத்த மெய்வியன்கொண்ணூலவுஞ்
சாற்றிய பலவுலமாக்கள் சார்பினாற்
போற்றிய தெருண்டகம் புணர்கை யுற்றனர். ௧௮

தொகை தொகையறிவகந் தொகுதகொண்டகை
வகை வகை வணக்கத்தி னியதிமனையுப
தகை தரு சிந்தையிற் றருமமேடியே
நிகரறநிறைதலே நிகழ்தலாயினர் ௧௯

எவ்வறி வெவ்விட னிருப்பினிச்சைகூ
யவ்வயி னடைகுவ ரரியசான்றவ
ரொவ்விய நிலைமையி னுணர்த்துஞ்செம்மையா
லவ்வையங் கடலினிற் கருத்தாமைகினர் ௨௰

கல்விபயில்படலம் முற்றிற்று.



# ஸ்ரீதுபெறுபடலம்



எங்களாண்டகை சாதுலி நாயகரியா
பொங்குசெஞ்சுடரென நனிபொலிவிளக்கயலற்
றுங்கமேவிய வொருத்தனைக் கருத்தெழத்துதித்துச்
சங்கையோடுநன்னிலைமையிற் றழங்கியகாலம் (௧)

7

ஒருமைமேவிய வுளத்திடையொருபொருள்வேட்கை
யிருமைமேவிடா தெழுந்தொறுந்தொறுமின்பந்தேக்கி
யருமைமேவியகுருநிலையறிதகு மாசான்
பெருமைமேவிய யாண்டுளரெனப் பிரிந்துணர்வார். (௨)

தெரியுமேவைரொலிக்குழாஅங் களத்திடைத்தெருள்கால்
புரியுமாதவைநதிகழ்நவம் பொலிகுணம்பொருவா
விரியுநற்கலைமேனெறி யொழுக்கநல்வியப்பு
மரியகாட்சியுமகத்திடைத்துலங்குமோராசான். (௩)

சொன்னயத்தொடு பொருணயந்தெருணயந்தொகுக்கு
நன்னயத்துறுமப்துஸ்ஸலாமெனநவிற்று
மன்னநாயகர்பஃறின மருந்தவம்புரிந்து
மன்னவைகினர்பழைக்குலன்றழைக்குமோர்வரையில். (௪)

வரிசைநாயகர் செய்யிதுசாதுலி வள்ளல்
கரிசனத்தொடு பலப்பல நகரெலாங்கடந்து
தெரிசனக்குருயாண்டைய ரோவெனத்தேண்டு
புரிசைசேர் வளவிருக்குதேயத்தினிற்புகுந்தார் (௫)

அன்னநாட்டினிற் செய்குமாரநேகரைச்சந்தித்
தின்னறீர்தரவினியனபுகன்றனரிகந்து
நன்னர்சால் செய்யிதுமதுல்கபீறுநாயகரி
னுன்னுசீடராமபுல்பத்துகெனு முவர்த்தெரிந்தார். (௬)

கண்டுதம்மனங்குளிர்தரக் கனிமொழியமுதம்
விண்டுநாளுடை குத்பினைக்காண்கு வான்விரும்பி
அண்டர்போற்றிய நாயகரவர்முகம்விழித்துத்
திண்டிறல்குத்பெங்கெனத் தேடுகின்றீர்கொல். (௭)

நாடுமன்னவரும்முடைத்தேய நண்ணினரால்
தேடுபான்மையினுங் கடைந்திடினவர்த்தெரிவீர்
நீடுமாமகிழ்வுடனென நிகழ்த்தினரெங்கோன்
வாடிலாநவத்தொடு மகுறிபு திசைவந்தார் (௮)

ஆங்குத்தோன்றிநந்நாயகர்றிதகைமேவித்
தீங்குறுதொருமுதல்வனைத்திருவுளமருவி
யோங்குசீரினில்வதியுழியுணர்த்திடப்பட்டார்
பாங்கினிற்குருவோங்கலிற் படிந்துளரெனவே. (கூ)

தூவத்திறையகர்மஷீசருடனையர்நன்றுமை
நவத்தினப்துஸ்ஸலாடவணுகுதிரெனவுந்
துவத்திறேடருந்தொனியினுலறிதகத்தொடர்ந்தே
பவத்தையோட்டியபதமலர் பெயர்த்தனர்பரிவாய் (க0)

தெரித்தவாற்றினிற் றிருவரைப்புறன்மருவிடலும்
விரித்தசீருடைமேலவர்விண்டுறுசிகரந்
தரித்துநாதனைவணக்குற்றுரெனுமுணர்சாரப்
பரித்தசார்பினிற்படரொருபணிச்சனையடுத்தார் (கக)

ஊறமின்சுனைநதிக்கரைவதிந்துநம்முரவர்
மாறுறுத்தஜ்ஜீதுடைநிய்யத்தின்மருவிக்
கூறுசீர்மையிற்குளித்தனரின்புனல்குடைந்து
வேறிலாதுளத்தொருமையிற் பெருமையேமிகுத்தார். ()

கருதுநீர்மையினுலுவொடுகருத்தனைமுன்னிப்
பொருவிலாக்கொடுமுடிச்சிலம்பேறினர்போந்தார்
திருவினப்துஸ்ஸலாமெனுந் தேசிகர்தெரிந்தே
யரியநாதரையெதிர்கொளவெழுந்தனரன்றே. (கந)

மூதியநாயகரிழிதலு முகிறவழ்வரைமேற்
புதியநாயகரிவர்தலுமிருவரும் பொருந்தித்
திதியினேயகாந்தமன்னயமெனச்சிறப்பக்
கதியின்மல்கியவகத்தொடுவிழிகளுங்களித்த (கச)

மறையுணர்ந்தநற்றேசிகர் வள்ளலைநோக்கி
நறைகொண்மெய்ந்நபி தொடுத்துமகார்வழிநவின்று
முறையிலாதநம்மகஅலிபேயெனக்கூவி
யிறைவனல்லருள் சேரபனமுறுகவெப்போதும் (கரு)

புரியுகின்றமாவணக்கொடு கலைநெறிப்பொலிவு
முரியுநேர்மையின்றமியரி னெனையுவந்துற்றீர்

பிரிவிலா திருமையும் பெறும்வாழ்வினைப்பெரிது
முரியநம்வயினெடுத்தனிருலகெலாமோங்க (கசு)

என்றமேனிமாதவரிசைத்தனுமெங்கோன்
துன்றநேர்மையினொருபொருட்டுதித்தனரிருந்தார்
வென்றிமேவியவாஞ்சையின்விழைவொடுவல்லோ
னென்றதேட்டமேயடிக்கடியொருங்கெழுந்துற்ற (கஎ)

உள்ளகத்துறவுணர்தனு முவப்பொடுமெழில்சேர்
வள்ளலார்தமையழைத்தனர் மருங்குறவிருத்தித்
தெள்ளுநல்லறிவுணர்தர வொருமைமெய்த்தேக்கு
மள்ளுஞானசாகரநெறியைஅத்தன்றளித்தார் (கஅ)

பொறியுமுட்படுபுலன்களுமடக்கியபுகழ்சேர்
நெறியுந்தேட்டமுமானமுமோனமுநிலையுங்
குறியுங்கொள்கையுநியதியுமளவையுங்குணமு
மறியுநீர்மையும் பகுதியினுணர்த்தினரண்ணல். (ககூ)

பின்னுநற்குருஅலியெனப் பேர்சொலிவிளித்து
மன்னுசாதிலாநகரிடை வதிகநம்வல்லோன்
முன்னுசாதுல்லியென வொருநாமமேமொழிவ
னென்னவோதியும் வாய்முகிழ்த்தின்னுமோதுவரால் ( )

ஆரியநன்னகர் தூனிசினடைகுவிராங்குப்
புரிபுமன்னர்தண்டலையுறாஉங்குணதிசைபோவீர்
பிரிவின்மேன்மையின் குதுபெனுமபட்டமாங்கெய்து
முரியநாயகன்கன்மத்தினுவந்தனவெனவே. (உக)

என்றநாதரப்துஸ்ஸலாமசீசவரியம்ப
வென்றிநாயககேட்டனர்மிகமழ்ந்தன்பாய்
நன்றிமேயாடமைந்தனர்செய்பிதகுமதுநாளு
மன்றன்மேந்திருமனத்தடம்பொலிதரமாய்ந்தார். (உஉ)

முரீதுபெறுபடலம் முற்றிற்று.

முதலாவது உற்பவகாண்டம் முடிந்தது.



## இரண்டாவது

# அற்புதகாண்டம்.

### தூனிசுபுக்கபடலம்.

அருளடை விழியின் வள்ள லபுல்ஹசன லியென் றோதுந்
தெருளடை யிறைவர் வல்லோன் றிருநெறி வணக்கம்பூண்டு
மருளடை யாது சிந்தை மௌனநன் னிலையின் மன்னிப்
பொருளடை தவத்திற் பற்றும் புனிதநன் குறுமக் காலம். (௧)

தினந்தின மருவ லாலுட் களியொடு தெருளி னோர்ந்து
வனந்திகழ் சகுப ருனென் வரையினும் பிறவெற் புள்ளு
மனந்தரச் சென்று வைகிச் சமாதியின் மருவி நோன்மை
தனந்தனி கொள்வர் மோலோர் சாரினு மொப்பு வாரால். (௨)

ஊணாசை குடிப்பு மின்றி யுறக்கன்மற் றின்றி நேடும்
வேணவா மிகையி னென்று மேலெழா தநந்த ஞானம்
பேணிய வொருமை துன்னிப் பிறசுப மொழித்துத் தன்மை
காணுயர் துறையிற் காணுக் கருத்தனைக் கருதாநிற்பார். (௩)

அவனன்றி யின்று லென்னு மாதியி னெழுந்த நோக்கத்
தவனமே'பற்றியுள்ள மெழவெழத் தடையின் மன்னும
புவனமு நபுசுமிச்சை போல்வன வடரா தூக்க
நவநித நிலையின் மேவி நாதனை வணங்கா நிற்பார். (௪)

தினமென வாரமென்னத் திங்களே வருட மென்னக்
கனமடை வரையிற் சாரல் வாயினிற காணி லோடைப்
புனனதி மருங்கிற் பற்றும் விரதமே பூண்டா ராக
வனவர தமும்வல் லோனை யணுகுமா றிறைஞ்சா நிற்பார். (௫)

மலமொரீஇ யாசை றேனறு மருவுறா நியதி மேவிப்
புலனொடு பொறியு நான்கு கரணமோ கத்தின்மூல
நலனுறக் களைந்துள் ளோர்மை யுவகையி னுண்மை யொன்றின்
பெலனுறக் குணங்கொண் டுய்யும் பெருந்தவ முயலாநிற்பார். ()

மாதவ மருவு மின்ன ஞான்றிடை யொருநாள வல்லோ
னேதவ மெறிந்த சிந்தை யெம்பிரான் விளித்து நீயிர்
பாதவம் படரு மின்ன பரம்வரை விடுத்து மாந்தர்
காதவ மின்றி வைகுங் களத்திடை வதிமி னன்றே. (௭)

நம்பொருட் டவர்களெல்லா நான்மறை நெறிபெற் றுய்வா
னம்பெரும் புறத்துச் சேர்வ ரெனநமர் நாத ரக்காற்
றம்பமா மிறைவ வென்னை யகற்றுதி சாரா தன்னோர்
தம்புறத் துறவின் வைகச் சத்துவம் படைத்தி லேனே. (௮)

என்றுநந் நயினுரோத விறையவன் பின்னுங் கூவி
யின்றிறம் பிகநது பூவி னிழிகுதி ரும்பால் யாமே
நன்றுய ரீடேற்றத்தைத் துணையென நல்கி யென்று
மொன்றுருப பழிப்பை விட்டுந் துலக்கின னும்மை யென்றான்.

அப்பொழு தவனி யாவு மாளுடை வல்லாய் மாந்தர்
கைப்பொருட் பணத்தி னின்று முண்ணுவான் கலந்திடாம
லொப்புற வெனையெஞ் ஞான்று மோம்புவை யென்றார் நந்தந்
தப்பொழித் தாளும் வள்ளல் சாதுலி நாயகம்மே. (௧0)

அருந்தவத் தலியே யுள்ளத் தஞ்சலிர் யானே மிக்க
தருந்தகைச் சீமான் காண்டிர் தருக்கொடு முன்னுவீரேற்
பெருந்தகை கைபி னின்றுஞ் செலவிடும் பின்னு நாடிற்
றிருந்துமெய்க் கவசச்சேய்ப்பினிருந்தெடுஞ் செலவிற்கென்றே.

பரம்பொருட் கடவுளின்ன பகர்ந்தனன் பகரக்கேட்டு
வரம்பெறு மலியாமெங்கள் வள்ளலு மகிழ்வு கூர்ந்து
திரம்பெறு பிறங்கன் மற்றுந் திகழ்தர விடுத்து நீங்கி
மரம்பெறு காவுஞ்சூழுந் தூனிசுநகரம் வந்தார். (௧௨)

கார்குடைநபிதம் பேரர் கடிகமழ் நகர மேவிச்
சீர்தரு பிலாத்தென் றேதுந் திருத்தகைப் பள்ளி வாயற்
கேர்தர மருங்கினுற்ற மெழில்கிபு லாவினேரிற்
பேர்தர வாயன்மேவு மனையொன்று பெரிது பற்றி. (கந)

வதிந்தொரு பொருளைவேண்டி வணக்கஞ்செய் திருந்தாரிப்பாற்
பதந்தரு நாதரின்ன பண்பினில் வைகுங் காலம்
விதந்த வந்நகரின் வாழ்க்கை மேவினர் பெரியோர்தம்மு
ளிதந்திக ழவரெலாம்வந் தெம்மிறை தம்மைச் சேர்ந்தார். (கச)

அப்பெரி யவர்க டம்மு ளபுல்ஹசன் சக்குலீ சென்னு
முப்பெரி யவருமுண்மை யுறமபூ அப்துல் லாவுஞ்
செப்பருந் தவத்தி னப்துல் அஸீசு ஸெய்த்தூனி யும்மிவ்
வைப்புயர் செய்கபுல் அஸாயி மும்மருவு மேன்மை. (கரு)

ஆரண முறைதேர் செய்கு அபூஅபு துல்லா வென்னும்
பூரணத் திவருமின்னோர் போலுயர் பெரியோரெல்லாங்
காரணத் தெங்கள் கோமான் கமல மெல்லடிகண்காண
மாரண மிலரின் மன்னி வந்தன ரொருங்கு மாதோ. (கசா)

குருமுறை புணர்த்து மின்ன கொற்றவர் யாரு மந்நாட்
பெருமுறை யறிஞர்க் கெல்லாம் பெட்புறுந் தலைவரென்ன
வருமுறை மறையின் வல்லோன் வரிசையி னநந்தமெய்த்த்
திருமுறை யொலிக ளாகத் தெருட்சியிற் சிறந்தாரென்ப. (கள)

தொல்லுண ராரி பீன்க டொகுமஷா யிகுமாரென்னு
மெல்லவர் தமக்கு மேலா யெம்மிறை சாது லிய்யென்
றல்லலில் பெருமை சான்ற வபுல்ஹசனலியென் றேதும்
வல்லவ னருள் சேர்வள்ளல் வதிந்தவ ணிருந்தாரன்றே. (கஅ)

அந்நகர் தனினு மற்றை யயற்பதி யிடங்க ளெங்குந்
துன்னிய கலையின் வல்லார் தொடர் நெறி வணக்கஞ் சான்றோர்
முன்னிலை யொருமை பூண்டார் மாதவந் திகழ்ந்தார் யாருஞ்
சொன்னிலைப் பெருமான் பக்கற் றொகுநிலை பெறுவரன்றே ()

மலைதிகழ்ந் தனைய தோற்றத் தொடுநமர் வள்ள லாங்குக்
கலைதிகழ் மதியின் வைகுங் காரணங் கேட்டா ரெல்லாந்
தொலைதிகழணித்தென்றெண்ணூர் தொகைதொகையீண்டி நாளு
நிலைதிக ழறிவினோடு நேர்மைபெற் றிருப்ப ரன்றே. (௨0)

நன்னெறி பெறுமா றுள்ள நாடுவார் நாட்ட முற்ற
வென்னெறி பெறுமெய் கோமான் விகசித மலர்த்தா ளெய்திப்
பொன்னெறி ஞானாநந்தம் பொலிகடலமுத முண்டு
தன்னெறி களிப்ப வின்பிற் றரம்பெறாஉ வதிவரன்றே. (௨௧)

இறையவ னபிமார்க் கெல்லா மேந்தலா மிறசூ லுல்லா
பெறுமகண் மைந்தர்க் குற்ற பெற்றிசேர் மரபிற் றோற்றித்
தறையெலாம் புகழவந்த சாதுலி நாதரென்ன
முறைமுறை வருவா ரெல்லா முத்தியம் பதம்பெற் றுய்வார். ()

செறிமலர் விருக்கந் தோன்றிச் சேணெலாம் படர்ந்து தண்ண
நறுமலர்க் கனிக டின்னு ஞான்றிடைப் பட்சிசால
மிறைகொளக் குழீஇய போன்றி யாண்டினும் வதிவோரெல்லா
மறையுணர் வள்ளலம்பொன் வாய்மொழியமுதங்கொள்வார். ()

அருமையம் பேறுபெற்ற வபுல்ஹசன லியென் றோதும்
பெருமையி னாதரன்ன பெட்புறு நகரின் மேவி
யிருமையின் மாந்தர்க் கெல்லா மின்பவீ டளிக்கு நீர்மை
திருமயத் திவர்ந்து துன்னித் திசைதிசை பொலிந்தமாதோ. ()

தூனிசுபுக்கபடலம் முற்றிற்று.





# தெரிநிலைவிளக்கியபடலம்.

விரிநிலை விளக்கிய விகசிதாம்புயக்
குருநிலைப் பதநபி குலத்திற் றோன்றிய
சரிநிலை யபுல்ஹச னலியுஷ் ஷாதுலி
தெரிநிலை விளக்கிய திறன்மை செப்புவாம். (௧)

ஆயிரங் கதிர்விடுத் தலர்ந்து மேலெழு
ஞாயிறி னிலகிய நாதர் தம்மருங்
கேயுறு மாந்தர்க ளிலங்கு மாமுகஞ்
சேயுறு மம்புயச் சிறப்பிற் காட்டுமால். (௨)

நிகர்பிற ரறிதகா நீர்மை யெம்மிறை
புகரக னகரிடைப் பொலிவின் வாழ்தரு
தகையுயர் காலத்திற் றருக்கிற் றுன்னிய
மிகையுறு மொருத்தரு மாங்கு மேயினார். (௩)

அன்னவர் தலைமையி லறிவி லாண்மையிற்
சொன்னிலைப் பெருமையிற் றெருக்கும் வன்மையிற்
புன்னிலைக் கபடத்திற் பொருவற் றோங்கிய
முன்னிலை யவரென முதிர்ந்துள் ளாரரோ. (௪)

வகுத்திடு மிவருடை வழங்கு நாமமே
யிகத்துள ரிபுனு புறுவென் றோதுப
தகைத்திற னிறைதரு தரும நாதரைப்
பகைத்தனர் மிகைத்த பொறாமைப் பண்பினே. (௫)

பெரும்பகை தொடுத்தனர் பிரிவி னற்றெரு
ணிரம்பிய கலையுல மாக்க ணோர்வரத்
தரம்பெறு மண்ணல்பாற் றருக்கி னெய்தியே
பரம்பொரு ளறிபல பகர்தன் மேயினார். (௬)

ஆங்கவர் வினவிய வரிய கேள்விகட்
கோங்குநல் விடையெம ரண்ண லோதலுந்
தாங்கொளும் வினைபல வொழித்துத் தம்மிடத்
தேங்கிய விழிகுவ ரெவரு மஞ்சியே. (௭)

நாயகர் மேன்மையு நலனும் வென்றியு
மேய்பெற வெழுந்தொறு மிகும்பொரு மையாற்
காய்சினத் தீயுளங் கருக்கிப் போதவே
யேய்மனத் திபுனு புருவு மெய்த்தரோ. (௮)

தம்மொரு சொற்குளந் தயங்கு மாந்தருட்
செம்மிய வறிவினிற் றெருண்ட தேசிகர்
பம்மிய பலர் வரவழைத்துப் பண்புறு
நம்முயர் நாதர் பாற்புக நவிற்றினார். (௯)

மதிதரு கலைஞர் மாஷாயி கீன்களும்
வதிதரு மிடனிகந் தெழுந்து வண்மைசா
னிதிமலர்ப் பதத்துடை நிமல நாதர் பாற்
கதியொடு மடைந்தன ருளங் கலங்கவே. (௧௦)

சுற்றின ரிருந்தனர் தொகுத்த வாசகம்
பற்றினர் வினவினர் கருத்திற் பான்மதி
முற்றிய தெளிவுற வேத மூதுணர்
நற்றவ நாதரும் விடை நவிற்றினார். (௧௧)

வினவுறு மொழிக்கெலாந் தடையிலாவிடை
நினைவுறு சுருதியி னீர்மை தோன்றவே
சினவுறு மவருளச் செருக்கற் றொல்கியுட்
கனவுறு விழிப்பினிற் கவற்சி கொண்டனர். (௧௨)

வள்ளலைச் செயித்திடும் வகையொன் றின்மை யாற்
கொள்ளருங் கவலையங் கடற் குளித்தன
ரெள்ளள வெனினு மோ ருணர்வி லாமலே
விள்ளரு நெட்டுயிர்ப் புடனு மீண்டனர். (கங)

இனையன பன்முறை யிவரு மேகியே
வினவுறு பொருளெலா மெய்மை யோங்கிய
கனமுறு விடைபெறாஉக் கருத்தழிந்தரோ
மனமடிந் தோய்ந்தனர் வள்ளி யோர்களே. (கச)

வேறு

இவ்வண நிகழ்கா லோர்நா ளிபுனு புருவென் றோது
மவ்விய ரொழுந்தவ் வூரா ளபூசக்க ரிய்யா வென்னுந்
தெவ்வக லரையர் மாட்டுச் சென்றன ரடுத்துத் தாழ்ந்து
செவ்விய ருதர்செய்தி பிணக்குறச் செப்பற் குற்றார். (கரு)

சாதிலா நகரிற் கோகு மேய்க்குமச் சாதி மேவு
மேதிலா னொருவ னும்வா ழிந்நக ரடைந்து தன்னைக்
கோதிலா நபிகள் கோமான் குலத்தவ னெனச்சொற் றன்று
தீதிலா மறையின் வாய்மை சிதையறி வுறுத்தி மன்னே. (கசா)

சீரியர் தம்முண் மேலோ ரெனத்திகழ் பான்மை காட்டி
யாரியர் பலரைத் தன்னோ ராணையி னமைவான் செய்து
வீரிய மாந்த ரெல்லாம் வழிபடு விதமதாகக்
காரியத் திவர்ந்துற்று னங் கருத்தனீ ரறிகவென்றே. (கஎ)

சொற்றது மாற்றங் கேட்டுத் தொன்னக ரிறையுநந்த
நற்றவ வரசைத் தம்பான் மீளிய நவின்றார் விட்ட
வொற்றரு மழைப்ப வோர்நாளுயருல மாக்க ளோடு
கற்றவர்க் கிடரின் வைகும் புருவின்கா தலனுமேவி. (கஅ)

மன்னவர் மன்றிற் சூழ்ந்து மருவின ரிருந்தாரக்கா
னன்னவ வள்ளலும் மாங் கெய்தினர் நவையிலாது
துன்னிய வவையின் ஞான்கர் துலங்கொரு படங்கிட்டன்ன
மன்னரு மிருந்தார் யாரும் வதிந்தனர் குழுமி யன்றே. (ககூ)

ஆங்குறும் பகீஹா தம்முட் சிலரிறை யொலியை நோக்கி
மேங்குல மெவன தென்ன வினவினர் புவனமெல்லா
மோங்கிய கீர்த்திமன்னு முயர்நபி நயினர் பெற்ற
பூங்கொடி பாத்திமாவின் புதல்வர்தம் வழியானென்றார். (உ0)

அம்மரபுளர் நீரென்றற் கறிதகு சான்று நம்பாற்
றம்மெனக் கேட்ப முன்னுந் தலைமுறை சில் சிலாவுஞ்
செம்மைசேர் பிறவத்தாட்சி பலபல தெரிபப வன்னோர்
நம்மதி தவறென்றுள்ளி நடுநடுக்குற்றா ரன்றே (உக)

சிறிதுணர் கொண்டுதேறித் திருமறை யறிவிற் சில்ல
குறியொடு வினவல் கொண்டார்கோடபடுவிடையெங்கோமா
னெறிபெற வளித்தார் பின்னு நியதி மெய்ஞ்ஞான மாதி
யறிபல பல்விடாதங் கருளுறா வினவல் கூர்ந்தார். (உஉ)

மலையெனு முளத்த ரான மஷாயிகு புகஹா மாருந்
தலைதடு மாறுங் கேள்வி சால்புற வினவுந் தோறு
மலைகட லறிவி னண்ண லளிப்ப ருத்தர மொவ்வொன்றா
நிலையுறப் பின்னும் பின்னுங் கேட்பன நிகழ்த்தி யிட்டார் ()

இருளுறு மனத்த னென்னு மிபுனு புறாவின் சொற்கீழ்
மருளுறும் பக்கீகு மார்கள் வாயெலாம் வறந்துவாடித்
தெருளுற முன்னினூறு மடங்குளந் தேறி வல்லோன்
பொருளுறு மொலியின் மேலோ ரிவரெனப் புந்திகூர்ந்தார். ()

எம்மிறை தமக்கு மான்றோர் தமக்குமாங் கிடையீடின்றி
யம்முறை நிகழ்ந்த யாவு மபூசக்க ரிய்யா வென்னுஞ்
செம்மலும் படங்குள் வைகித் திகழிறும் பூதினாழ்ந்தே
யெம்மையா ளிறைவற் போற்றி யின்னண நவிற்றலானார். (உரு)

பேரவை வதிந்தீ ரின்னார் பெரியவ னொலிமார் தம்முட்
சீர்பெறு பதமேன் மன்னுஞ் சிறப்புளர் காண்டிர் நீவிர்
நேர்தரு மஸ்அலாவெத் தனைநிகழ்த் தினுஞ் செயித்தற்
காரதர வியலிர் மேலு மருள்வன விடுத்தி ரென்றே. (உசா)

இன்னசொன் மன்னர் கூற விபுனுபு ருவி னுள்ளந்
துன்னிய திடுக்குட் டொல்கித் துயர்வெளி தோற்றிடாது
முன்னல ருணை யின்ன வமயத்தின முயங்கும் வீதி
தன்னிடை யிவரைச்சார விடுபபிரேற் றறுகாதன்றே. (உஎ)

தூணிசு பரிபாலிக்குந் தொடர்புமை விடுத்து நீங்கு
நானிலம் பரவு மாந்தர் நனியுள ரிவர்பாற் றென்றே
பூனமா மொழியி னேத வுலம்பொரு திண்டோண் மன்னர்
வானமேம் புகழி னுரை மறியலிற் படுத்தினரால். (உஅ)

காவலி னுறத்து மக்காற் கருணையங் கடவுளன்ன
மாவலன் விழித்திப்போதின் வருகுவர் நமது தோழர்
சேவையி னென்று முன்னஞ் செறுநரு மஞ்சும் வல்ல
பாவலர் புகழ நண்பர் தமுட்சிலர் பரிவின் வந்தார். (உகூ)

பருவர லகற்றுங் கோமான் பதமலர் வணங்கி நின்று
மருவலர் தாளுநுங் கோவே மன்னவ ரியற்றுந் துன்பொன்
றிருநிலத் துற்ற தென்ன விருசெவி சுட யாங்கேட்டுத்
திருமதி முகங்கண் டுய்வான் சென்றன மீண்டென்றாரே. (கூ0)

தருமொழி கேட்டுக் கஞ்சத் தண்முக மலர்ந்து முத்த
நகையொளி முறுவ லேன்ற நகுமலர் வாய்விண் டன்ன
தகையினர் விளித்துச் சொல்வர் ஷறகுறு மதபு பேறு
வகையுள னெளிலோ முன்று மதிலெதிர்ப் புறத்து நோக்கி ()

இவ்வழி வரவென் னுள்ள மெண்ணியாங் கியற்று கிற்ப
னவ்வழி வருதல் வேண்டு மாயினும் மடைவ னென்னச்
செவ்விய் கரத்தை நேரிற் றிருப்பி விண்டுரையா முன்ன
மவ்வெயி லனைத்தும் போழ்ந்த யாவரு மறிய வன்றே. (கூஉ)

மீளவு மவரை நோக்கி மிகுமென தன்பர் யார்க்கு
மாளுடை வல்ல நாயன் சலா மறைந் தேனென் றோதிக்
கோளுறு மகுரி புங்கள் கூடவே தொழுவ னீதே
நாளுற வென்று சொற்றே னென்ன் வுரைத்தி ரென்றே. (கூகூ)

ஓதினர் மறந்தும் வள்ள லோதுவர் சஜ்ஜாத் தாவும்
பாதுகென் டிகையுமென்பாற் படுத்துதி ரெனவுஞ் சொற்றூர்
மாதவர் கேட்டுச் சிந்தை மகிழ்ச்சியா யடியைப் போற்றிப்
போதலர் சொரியும் வீதிதொடர்ந்தனர் போயினூரால். (நசு)

மண்டுயர் மகிழ்வின்வந்த மாண்பின ராங்காங் கெய்திக்
கண்டநன் னண்பர்க் கெல்லாங் கருத்தரன் றுரைத்த தோதிக்
கெண்டியும் சஜ்ஜாத்தாவுங் கிளர்கரத் தேந்திவந்தே [ ] தன்றே.
கொண்டன்முன் வைத்துப் போந்தார் குசேசயப பதந்தாழ்ந்

நீரெடுத் தொழுவுஞ் செய்து நிமலநா யகனைப் போற்றி
நேர்தரத் தொழுது வைகி நெறிபெறு கன்ம மெல்லாஞ்
சீர்பெற விகத்தினேயும் பரத்தினுந் திகழ்வ தாகச்
சூரக விறைபால் வேண்டிந் துஆமிக வோதியுற்றூர். (நசு)

வல்லவ ஞெலியாய்வந்த வள்ளலார் கருமமிவ்வா
றெல்வ னென்ன வெங்கு மெழுநவந் துலங்காநிற்ப
வல்லலில சுஹாபேஞோகமிகக் களித்துத் தேறச்
சொல்லிய விதமதாகச் சுகத்தமைந் திருந்தா ரிப்பால் (நஎ)

அந்நக ரரசர்க் குற்ற வரிவைய ளொருத்தி மிக்க
நந்நிலை மனைவியாக வாழ்ந்தன ளுத னேவன்
முன்னிடு விதிவந்தெய்தி மரித்தனண் முயங்கு மன்னர்
தன்னிலை திரிந்து மாழ்கித் தவக்கங் கெண்டினைந்து மன்னே. ()

சிந்தனைத் தெளிவிற் றேறித் திருமனை யடக்குவானற்
கந்தநீ ராட்டிச்சுத்த கபனிடூஉ நறிய தூமம்
விந்தையிற் புகட்டிமஞ்சத் தெடுத்தனர் மேவுந் தானத்
துந்தின ரடக்கி யிட்டா ருயர்நவத் தொன்று சொல்வாம். ()

அம்மனை மெய்யிற்கிட்ட புகறுடை யழலின் பாத்ரந்
தம்முளோர் மறவியுற்றங் கெடுத்திடாத் தன்மையாலே
வெம்மையின் ஞெகிழி யெங்கும் படர்ந்தகம் விளங்கி மேவுஞ்
செம்மையா பரணமாதி தீக்கிரை யாயவன்றே. (சo)

இல்லவ ளிறந்ததோடு மிரணிய மெவையுந் தீவாய்ப்
புல்லிப பட்டுப் போந்த புன்னிலைக் கவலை மன்னர்க்
கெல்லையிலாது பல்கா லெழுந் தெழுந் துடற்று நிற்ப
மல்லலம்புயமுஞ் சோர மயங்கினர் தியங்கி மாதோ. (சக)

கூறெறுக் கவலைதன்னிற் கோமக னிருக் குங்காலை
யேறிய பதவிவைகு மெம்மிறை தம்பி னென்றும்
பேறுயர் பற்றிற் பூண்ட பிறவியன் னவர் நன்றுமந்
தேறிய வபூஷப்துல்லா வெனச்சொலுந் திறல்வரன்றே. (சஉ)

நடந்தன வெவையு முள்ள நன்குணர்ந் தரசை நண்ணி
யுடந்தையி னொருவனுணை யுபமையு மும்மைச் சேர்ந்த
விடந்தரு பெயரை யெல்லா மிபுனுபுறு வென்றோது
மடந்தரு மவர்ஹலாக்கின் மாட்டின ரெழாது மன்னே. (சங)

நனியுணர் வருவான்கூறி நரபதி தம்மைக் கூட்டித்
தனியவ னருள்பெற் றேகும் சாதுலி தூதர் பாதம்
துனியட ராதுவந்து தாழ்ந்தனர் துதித்துப் போற்றிப்
பனிமலர்க் கரமும் யாத்துப் பின்னவர் பகர லுற்றார். (சச)

நன்மையி னெறியி னெம்மை நயத்துடன் பொருததுங் கோவே
சொன்மை யென் முன்னோ னுங்க டொன்னவந்தெரிந்தாரல்லர்
பன்மையின் புந்தியீனம் படர்தரப் புரிந்த செய்கை
புன்மையில் வன்மை யானே பொறுத்துள மிரங்கு கென்றே. ()

கரந்திடாச் சிந்தை தோன்றக் கவன்றுறு மொழியைவல்லோன்
பொருந்து நன்னுதர் கேட்டு பொன்மலர் வாய்விண் டன்னார்
தெரிந்திடச் சொல்வர் நந்தஞ் சோதரர் செயன் மற்றெல்லாம்
விரிந்ததந் நபுசினேயு மிகை பெறு தறிக மன்னே. (சரு)

எவ்விதக் கன்மம்யாவு மிறையவன் லெளகிற் றீட்டு
மவ்விதத் தமையு மன்றி யின்றெனை வருளி யன்னு
றொவ்விய வநுப்பிப்பின்ன ருயர்புகழ் சாதுலிய்யாஞ்
செவ்விய நாதரவ்வூர் வைகினர் சின்னுளன்றே. (சஎ)

மாட்சியி னண்பர் தம்மை மசுரிக்கு திசையிற் செல்வா
ஞட்சியி னனுப்பிப்பின்ன ரம்மனே தனையும் விற்றுத்
தாட்சியில் புருவின் சேய்க்குத் தந்தன மிவ்வூர் முற்று
மீட்சியி ஞள்வா னென்ருேரா ள் விடுத்தகன் றிட்டாரால். ()

ஆதரம் பெருகு மெங்க ளபுல்ஹசன் சாதுலிய்யாம்
பூதரமனைய வளளல் புறப்படுந் தகைமை யன்ன
நீதியினரசர் கேட்டு நிகழ்நெறி மறித்து மன்ருட
டோதலு மிறைநாடுற்ருல் வருதுமென்றுவந்துபோந்தார். (சுகூ)

தெரிநிலைவிளக்கியபடலம் முற்றிற்று.





## செய்குமார்களிடர்நீக்கியபடலம்.



அரியவ னருள்பெற் ருேங்கு மபுல்கசனலியா மெங்கள்
பெரிய நன்ஞதருற்ற பேறுடைத் தூனிசென்று
முரிய வங்கரை நீங்கி யுறுநெறி பலவுநீந்தித்
தெரியுமிஸ் கந்தரிய்யா வெனுந்திருப் பதியிற்புக்கார். (க)

நாயக ராங்குத் தோன்று விடய நன்குணர்ந்து வைகுந்
தூய்தவ செய்குமார்க டொகுதியி னெழுந்து போந்து
மாயிருஞாலம் போற்றும் வள்ளனந் நபிதம்பேர
ராய்மலர்ப் பதத்திற் ருழ்ந்தங் கவர்குறை கூறலுற்ருர் (உ)

வானுல கெவையும் போற்றும் வல்லவ ஞெலியாய் வந்த
தீனிலைநாத மன்னுஞ் செழுநகர் மிசுறை யாளுங்
கோனவர் விதித்த தண்டங் கோட்பெரு தெம்பானீங்கத்
தானவன் புறத்து வேட்டம் புரிகநற் றயையி னென்றே (ங)

மெலிவகல் விருப்பத்தோடு மிகமிக வேண்டு மன்னை
கலைநெறித் தவத்தர் மாட்டுக் கருணையே யிதயந் தேக்கி
மலையொளிர் சுடரிற் றோன்றும் வள்ளலா ரவரைநோக்கி.
நலியலி ரெவையும் போற்று நாதனல் லுதவியுற்றே (ச)

நாளையம்பிசுறு தன்னி னும்பிரயாணஞ் செய்வோ
மீளுறுவழிமை மன்னர் சமுகமெய் விதத்திற் பேசிக்
கோளுறநும்மை நன்கு விடுவிப்பான் கொற்றம் வேண்டி
நீளியபுரிது மென்று வாய்மலர் நிகழ்த்தி யிட்டார். (ரு)

கேட்டலும் செய்குமார்கள் கிலேசமவ் வளவிற்போந்த
பாட்டிசை முரலும்புட்க ளினம்பல குடம்பை சார்ந்த
நீட்டிய கதிரோ னொற்றைச் சிலவியந் தேரினோடு
மீட்டியல் விசைவினோடு மேற்கடல் குதித்திட்டானால் (சு)

நாயகர் தாமுஞ் சூழ்ந்த நண்பரு நவையிலாது
நாயனை வணங்கிப் போற்றி நள்ளிருடியின்று செங்கே
ழாயிரங் கிரணச் சோதி யலர்த்துபு பரிதி வெய்யோன்
காய்கதிர் பரப்பிக் கீழ்பாற் றோன்றினன் கடிதினன்றே. (எ)

வைகறை வணக்கந் தீர்த்து வள்ளலுந் தவத்தோர் தாமுஞ்
செய்கெவ ரெவர்க்குஞ் சொல்லித் திகழுமந்நகர நீந்திப்
பொய்கையம் பழனஞ்சூழ்ந்த பொன்னகர் மிசுறு தன்னில்
வையக மெவையும் போற்ற வந்தனர் மகிழ்ந்து மாதோ. (அ)

பான்மதி புலவிற் றென்னப் பருமணி யிமைக்கும் வீதி
நான்மதி நாதர் சூழ்வோர் நடந்தனர் போந்து வேத
[illegible]ன்மதி யறிஞருக்க நுகர்ந்தனர் தலைவ ரேனோர்
[illegible] யனைய வவ்வூ ரிறையரண் மனையுட் சென்றார். (கூ)

அண்ண[illegible] லொருபா லாளு மமச்சரு மொருபா லோதும்
பண்ணவ ரொருபால் வீரப் பகுப்பின ரொருபான் மார்க்க
நண்ணுவ ரொருபான் மற்று நாராதிப ரொருபால் வைகுங்
கண்ணிய பதியின் வேந்தர் களத்திடை யுற்றார் கோமான். (க0)

விண்ணுல கொருங்கு போற்றும் வியன்பெறு மிறையை வீயு
மண்ணுல காளுமன்ன மன்னவர் நோக்கி நம்பா
லெண்ணிய வடையுங்கன்ம மேதென மதியா வாக்கிற்
புண்ணெழு கருத்தி னொல்கப் புன்மையிற் கேட்டாரன்றே. ()

சீரினிஸ்க் கந்தரிய்யா செய்குமா ரவர்கட் கும்மா
னேரிடரகற்று விபா ணிகழ்த்திட நேர்ந்தே னென்ன
வீரிய மனத்தினர் விளம்பநும் மிடரைத் தீர்ப்பான்
பாரிடத் தொருநற்பாதை முன்னரிற் பார்த்தி ரென்றே. (கஉ)

உரைத்தனர் வெகுள லோடு மோதிய மன்னர் பின்னுந்
தரைத்தலம் புகழும் வள்ளல் சாதுலி வதன நோக்கிப்
புரத்துறு நும்மைப் பற்றி யிபுனு புறுவெற் கோதுஞ்
சிரத்தையின் மொழியொன் றின்னே காண்மெனச் செப்பியன்றே.

எள்ளலி னழுந்தும் புந்தி யிபுனு புறுவென் றோதும்
வள்ளியர் முன்னர் நந்தம் வள்ளலைக் குறித்து வீணிற்
கள்ளமா யெழுதி விட்ட கடிதமொன் றங்கை யேந்தி
யுள்ளபே ரவைஞரெல்லா முணர்தர வாசித்தாரால். (கச)

பாசுரப் பொருள்யா வென்னி லின்னன பண்பி னொத்த
னேசுறு குழுக்களோடிவ் வெழினகர் புகுந்தீங் குற்ற
மாசனர் பிணங்கு மாறு வல்வினை வருத்தி மீண்டுந்
தாசர்கள் சூழ வாங்குந் தகுதியின் வருகின் றனால். (கரு)

காரிய முணர்த்தென் வாய்மை கவனத்தி னெடுமென்றேயா
மாரிய ரெழுதிவிட்ட படிறுரை யலியா மெங்கள்
சீரிய வள்ளலாரின் றிருச்செவி புகுதா முன்னம்
வேரிய மலர்த்தார் வேந்தின் முகம்விழித் திதனைச்சொற்றார். ()

சங்கையிற் புகலு மன்ன சைகுமார் கன்ம மாட்சி
தங்கிய வுமது கன்மஞ் சாருமெங் கன்ம மெல்லா
நுங்கர வயத்து மன்றே நுண்மொழி நிகழ்த்தி யிட்ட
நங்கர வயத்து மன்றே நாயகன் வயத்தா மென்றே. (கள)

மறைபொருட் புதைவின் வார்த்தைமவுன்றனரெழுந்தாரப்போ
திறையுந்தம் மாவிநீத்தா ரெனவுட றடித்து வீழ்ந்து
மறாவுரை பகாரா தொன்றாங் கரணங்கண் மருவிடாது
பொறிபுலனின்றி யாங்குக் கிடந்தனர் புதுமை யோங்க. (கஅ)

அவரது சபையின் வைகு மமச்சரும் செய்குமாருந்
தவறுறு வுலமா வேனோர் திடுக்கொடு தாங்கித் தூக்கி
நவமுறப் பார்த்தா ரற்ப வுயிர்ப்பு நண்ணிட லிலாதாற்
பவமெது விளைந்த தென்னப் பரிதபித் திளைந்துதேறி. (கசு)

வல்லவ னொலியென் றெண்ணு துருமொழி வகுத்த தாலிவ்
வல்லலிங் கடுத்த தென்ன வவையுள ரெழுந்து வல்லே
மல்லலம் புவனம் போற்றும் வள்ளலார் பதத்திற்றுழ்ந்து
சொல்லினர் கருமந் தன்னைத் துணைவிழி மாரி சிந்த (உ0)

ஆண்டகை யளியுண் மேவி யாங்கடைந் தருகு பற்றி
வேண்டகை யிறைதம் மெய்யின் மேலவ னருளை யுன்னி
நீண்டகை யதனுன் மெல்ல நீவினர் நீவுமக்காற்
பூண்டகை யாவி பூப்பப் புதுமையி னெழுந்தா ரன்றே. (உக)

எழுந்தன ரெவருங் காண வெம்மிறை மலர்ப் பாதத்தில்
விழுந்தனர் முத்தியங்கை விழிமிசைப் புனைந்து போற்றி
தொழுந்தகை யாகநின்று தொன்மறை யவன்பா லெற்கா
யழுந்திய துனூ செய்வீ ரெம் மண்ணலென் றண்ணல் சொற்றே.

மன்னுமிஸ்க் கந்த ரிய்யா மஷாயிகு மார்க டம்மை
வென்னயம் பெறுமா றின்று விடுக்குதிர் கவர்ந்த பண்டம்
பொன்னையுங் கொடுத்தி ரென்னப் பொலிநகர்த் தலைவர்காணச்
சொன்னய முடங்க லொன்றுந் தொகுநயத் தெழுதி விட்டார்.

விடுதலைப் பத்ர மோர்ந்த வேந்துடைத் தலைவ ரக்காற்
கடுகியன் னவரைவல்லே காப்புறு மீட்சி செய்து
நெடுபொருட் பண்ட மெல்லா மேற்றிட வளிப்பப்பெற்றே
நடுமொரு நவத்தி னெங்க ளுதரைப் புகழ்ந்து வாழ்ந்தார். ()

பெரும்பதி மிசுறி னோங்கும் பேறுடைப் பெரியோ ரெல்லாம்
விரும்பிய வள்ளல் பாலின் மிகமிக வடைந்து வல்லோ
னரும்பிய வொலியென் றஞ்சி யஞ்சியுள் ளருமை பூண்டு
திரும்புறு தமைவா னாக செய்குசா துலிபங் குற்றார். (உரு)

செய்குமார்களிடர்நீக்கியபடலம்
முற்றிற்று



# கச்சுயாத்திரைப்படலம்.

கருங்குயி னிழற்று முகம்மது நபியின் மரபினிற் கவினொடு தோன்றிப், பெருங்கன தவத்திற் றிருந்திய விளங்கும் பேறுடையபுல் ஹசனலியென், றொருங்குல கெவையும் போற்றுநந் நயினா ருடையவன் மனையிடைப் புக்குத், தருங்கதி கச்சு செய்ததும்பிறவுந் தருக்கொடு முரைக்குது மாதோ (க)

வேறு

மாமறைப் பொருளுட்டேக்கி வரிசையின் முறைபோ லுள்ளந்
தோமறு சீவசாட்சி துலங்கிய வுணர்வினோடு
மாமுறை மொழியான் மெய்யா லடர்வினை வணக்கமாதி
தாமுறப் புரிந்துமீகை நோன்மையுந் தறுகாதன்றே (உ)

நாளிடை யீடிலாது நனிதொடர்ப் பொறிமூன் றொன்றிக்
கோளிடை யாதுசிந்தைக் குணிப்பினாற் கணிப்பின்மேவி
[illegible]டை யவனைத்தேண்டு மாசையி னைந்தினைய
யீறுடை கச்சுசெய்யுங் கருத்தது மிகைத்ததன்றே. (ங)

[illegible]ரண முணர்த்தும் வாய்மை யபுல்ஹசனலிதஞ் சிந்தைப்
பூரண நினைவுண்மேலும் புணர்புற வொருநாள் வண்மைக்
காரணி யெயிலிற்சூழ்ந்து கருதலர்க் கமையா வென்றிச்
சீரணி நகரநின்றுஞ் சிறப்பொடு மெழுந்தா ரன்றே. (ச)

வெளிக்கணிற் பாதை கொள்ளும் விடுதிகட்கியைந்தசீரின்
களிக்கரும் பிறக்கா வென்னுங் களத்துயர் படங்குசேர்ப்ப
வளிக்குநேர் வினைகளாற்று மவர்க்குறப் பணித்துச்செந்தேன்
றுளிக்குமொண் சோலைசூழ்ந்த தொன்னகர்விடுக்கலானார். (௫)

விதிபெறு கச்சு செய்வான் விழைந்தன ரண்ணலென்னப்
பதிபெறு சிலருமேவும்பாங்கர் மற்றெவருஞ்சூழ்ந்து
கதிபொடு தொடர்ந்து செலலக் கடிகமழ் மனைகளெல்லாம்
விதுவெழு மழகிற்காட்டு மேனக ரெவருமுற்றார். (௬)

சேணுறு கிழக்கின் மன்னுஞ் சீனமென்னகரை யாளுந்
தாணுறு மரசன் வெம்போர்த் தானையோ டெழுந்து வன்மை
வேணுறு மிசுறு மற்றை விறற்புரி கவர்வானாக
மாணுற வருகின்றானென் றொருமொழி மன்னர்கேட்டார் (எ)

பல்பல தேயத்துற்றோர் பண்பொடு கச்சுசெய்ய
மல்பல வழக்கின் முன்போல் வரும்வழித் துணையினேக
வெல்பல சேனைவீரர் மிசுறரசனுப்புந் தொன்மைச்
சொல்பலன் கொளவிடாது தொகுத்தன ரமருக்கன்றே. (அ)

அன்னநல் வருடகச்சி யாத்திரை வருவாரெல்லா
மன்னயப் பேறுகொள்ளு மக்கமா நகரேகாது
தென்னுயர் காளி யிஸ்ஸுத் தீனெனு மகிபரந்நா
ளுன்னிய பத்துவா வென்றோர் கட்டளை யுறுத்தினாரால். (௯)

இவ்விதத் தடையால் வந்தோ ரெவர்களு மஞ்சி யொல்கி
யவ்வருடத்தின் கச்சுக் கேகிடா தகல்வ தானார்
பவ்வமொத் தனையசூழ்வோ ரொடுமெமர் பண்பினாதர்
செவ்விய லொடுமெஞ்ஞான்றே சேர்ந்தனர் சிறப்பினன்றே. (௧0)

அட்டதிக்கெவையும் போற்று மபுல்கச னலியென்றோது
மட்டறு புகழின் வள்ளல் வளநகர் மிசுறினெய்திப்
பெட்டுற வமைந்தாரக்காற் பிரிவொடு காளியிட்ட
கட்டளை யதனையுள்ளங் களிபெறக் கேட்டாரன்றே. (௧௧)

அச்சக றணையிலாதா ரொருமறை விதியினைய
கச்சினுக் கெழாது போதக் கடிநகர் காளிசெய்க
நிச்சய பத்துவா வோர்ந்து நெறிபெறு முறையினெங்கோன்
விச்சையின் சிலரைக்கூவி விளக்கின ரிதனையன்றே. (கஉ)

இன்னன பயனினுட்ப மியற்றிய முபுத்திதம்மோ
டென்னையு மொருநற்றானத் திருக்கையிற் சந்திப்பெய்து
மன்னிலை புரிமினென்ன வவர்வழிபார்த்து ஜம்ஆத்
தென்னுறு குத்துபாப்பின் னர்ச்சேர்த்தன ரிருவர் தம்மை. ( )

சாமிகுல்அஸ்க றென்னுந் தகுதிசேர் பள்ளிதன்னி
லேமமார் முபுத்தியோடு மெம்மிறை வைகிமன்னுந்
தோமறு பெரியோர்வேதத் தொகுபொருடெருண்டசான்றோர்
கோமுறைத் தலைவரேனோர் குழீஇய பேரவையினன்றே. (கச)

நிகரகல் கலையின் மாண்ட முபுத்திநேர் வதனநோக்கி
மகிதல மனைத்து மோரே யெட்டுற வைத்துச் செலும்
புகரறு வல்லோனாணை பொருத்திய வயத்தி னன்னான்
றகைதரு மச்சமேவுந் தாரையிற் சேறுங் கொல்லோ. (கரு)

அன்னவற் குறுத்துநந்த மாஞ்ஞை யின்னனவென் றெற்குப்
பன்னுதி ரென்ன நந்தம் பார்த்திபர் வினைய தோர்ந்தே
யிங்கிலை யவர் நம்மாலிங் கியற்றுகட்டளையை விட்டு
முன்னிய பெயர்ந்திட்டாரென் றோதினர்முபுத்தியன்றே. (கசு)

மீண்டு நம்மிறைவர் தீந்தேன் றுளிமலர் வாய்விண்டோதுங்
காண்டகாப் பொருளினாணை காசினி முழுது மொன்றாய்த்
தாண்டிய கடக்குமன்னர் தம்முள்யான் வைகுமென்ன
வீண்டிய புகழினேதி யியம்புவர் பின்னு மன்றே. (கஎ)

தொடர்ந்துறு குழுக்கள்யாருந் தொகுதியினடக்குந்தாரை
'யடர்ந்துறு வினையின்யாது மஞ்சுறி னஞ்சலில்லாப்
படர்ந்துறு மொருநற்றானம் படுத்துவல் காப்பினென்னக்
கடந்துறு மொழியினேதிக் கருதிய வுரைப்பர் மாதோ. (கஅ)

கடவுணல் லருளின் மன்னுங் காரிய கருத்தாவென்ற
வடவினில் வதிந்தோராயின வனிடத்தின்ன பண்பிற்
றொடர்புற விருத்தல்வேண்டுஞ் சோதரீ ரிவணினேதுந்
திடமுறு மொழிமற்றெல்லாந் தெரிகுவிர் பின்னரன்றே. (கக)

அருந்தவம் புனைந்தவள்ள லபுல்கச னலியாநந்தம்
பெருந்தவ நாதர்கூற முபுத்தியும் பிறருங் கேட்டுத்
திருந்தகத் திறம்பூதெய்தித் திருவிறை யவனைப்போற்றி
யிருந்தவத் தண்ணல் பொற்று ளிணைமலர் முகந்துற்றாரால். ()

கச்சுயாத்திரைப் படலம்

முற்றிற்று.



# கள்வர்வழிகொள் படலம்.

சீர்மிகுத்த சிறந்த மறைப்பொரு
ளார்நவத்தி னபுல் கசன் சாதுலி
சார்தரத்தசு காபுகள் சூழவே
யேர்கொண் மக்க நகருக் கெழுந்தனர். (க)

கண்டிவர்ந்த கருத்தி னொருத்தனைத்
தொண்டின் மேவிய தொல்கலை யோர்களு ம்
பண்டுபோலப் பயன்பெறு நற்செயன்
மண்டு சீர்மையின் மன்னி யெழுந்தனர். (உ)

வண்மை மேவு மசாயிகு மார்களு
முண்மை மேவு முயருல மாக்களும்
பண்மை மேவு பக்கிறுகளும் பிற
திண்மை மேந்திறத் தோரு மெழுந்தனர். (ங)

சேணெழுந்த செழுந்தரு வண்டினம்
பாண்மிழற்றும் பதிமிசு றைவிடுத்
தாணையந் தலி சாதுலி யண்ணலும்
பூணுசிந்தைப் புனிதரும் போயினர். (ச)

தொல்லரண்பிற வீக்குந் துவசங்க
ணலலரன்பெறு நாயகர் நமமிறை
யில்லரண்கொண் டெழுந்தனா வென்றியின்
சொல்லரண்கொண் மெனத்தொடர்ந்தாமொல். (ரு)

தக்கவாழ்வி னபுல் கசன் சாதுலி
மக்கமேகும் வழித் தொழிற் களவர்கள்
தொக்கான் னெறி தோற்றுவர் காண்மெனப்
பக்கமெங்கும் பறக்கும்வெண் கேதனம். (சா)

ஓதவோதை யுடைத்து மிகைத்தெழும்
வேதவோதை யுறும்பதி மேவிய
சீதசோமன் றிகழ்நெடு நாஞ்சிலு
மாதரத்தின கழ் யு நீந்தினர். (எ)

தகுதிமேவிய சாதுலி யண்ணலும்
பகுதிமேவிய பண்பின் குழாங்களுந்
தகுதியோடு சொலும் பிறுக்காவெனு
நகுதலத்திடை நண்ணி வதிந்தனர். (அ)

அன்னதானத் தமைந்துறு பாசறை
மன்னுயாவு மறுத்னத் தேயெடுத்
தின்னறீர வெழுந்தன ரேந்தலும்
பன்னுநற்றவத் தோர்களும் பண்பினே. (கூ)

நொச்சியந் தலம்விட்டு நுகர்ந்ததே
னிச்சையோடுண்டி ரைத்தடர் வண்டின
நச்சிநாளும் விழைந்தெழு நன்னிழற்
பொச்சையாவுங் கடந்தனர் போயினர் (க0)

கொடுங் கண்வேங்கையுங் கோளரிக்கூட்டமு
நெடுங் கரக்களிறுந் நிசிப்பங்கிசேர்
விடுங் குரற்குல வெண்கு மிருத்தடர்
படுங் கழைப் பழுவம்பல நீந்தினர். (கக)

வானளந்த தருக்கண் மலிந்தொளிர்
மீனளந்தட ருச்சியின் வெற்பினந்
தேனளந்த விருற்செழு மாமதி
கானளந்த கரைகளு நீந்தினர். (கஉ)

தன்றுணைத்தவ சாதுலி நாதரும்
வென்றிமேவி விழைந்தகுழுக்களும்
வன்றிறத்து வழிகடந் தேகுங்கான்
மின்றருஞ்சுடர் மேற்கட லோடினன் (கங)

அங்கொர் தானத் தரும்படங் கிடடதிற்
றங்கியோர் மையிற் றக்கவனைத் தொழூ
திங்கிதத்தி னிராவுண வின்பொடு
பொங்குசீரின யின்றிறை போற்றினர் (கச)

காரிருட்குலங் கான்வரை மேவிவா
ளூர்தரச்செழு மஞ்சிறைப் புட்குலம்
சீரினங்கு செறிந்த குடம்பையிற்
பார்கொளப் புகுந்துட்படர் கொண்டவே. (கரு)

வள்ளியோர் தவத்தோர் வரத்தோரென
வுள்ளமொன்று முணர் சிறிதின்றியே
கொள்ளை கொள்ளக் கொலைசெய்ய வஞ்சுறாக்
கள்ளரேழ் கடற் காட்சியிற் றோன்றினர். (கசா)

சொட்டைவேல் கவர்ச்சூலம் வெங்கூரசி
பட்டயங்கணை யாதிய பல்படை
தொட்டகையின ராகத் தொனித்தடர்
மட்டிலாத வலிமையி னீண்டினர். (கஎ)

வன்கண் வஞ்சமும் வம்புறு செய்கையும்
புன்கணும் பிறவும் பொதிந்தோருரு
வின்குழுக்களென் றேவருஞ் சொற்றகை
முன்கொளுங் கொடுமை முதிர்ந்தோர்களே. (கஅ)

தெறுசினத்தின் பதவித்திருடர்க
ளறுசின் மேநயத் தாண்டகையுந்தொடர்
பெறுதவத்தரும் பெட்பினமைந்துறு
நறியபாசறை நண்ணி வளைந்தனர். (க௯)

கான்கொள வாழ்க்கையின் கள்ளர்கணள்ளிரு
ளூன்கொளுங்கருத் தோடடருவ்வழி
வான்கொளும்பெரு மால்வரையாங்கர
னான்குபானு நவத்தினெழுந்தவே. (உ0)

கல்லதோ கரும்பொற்கவி னாஞ்சிலோ
தொல்லையேதெனச் சுற்றியசோரர்க
ளல்லெலாம்பல பாகமு மார்ந்தரோ
மல்லெழுங்கட மோய்ந்தனர் மாழ்கியே. (உக)

ஒன்றுமுள்ள முணர்ந்தறி பான்மைமற்
றின்றியேதடு மாறியினைந்தினைந்
தன்றிராமுழுதும் மலைந்தொல்கலின்
வென்றிகாட்ட வெளுத்தகுணக்கரோ. (உஉ)

நங்கணுகயர் சாதுலி நாண்மலர்ப்
பொங்ககத்துட் புதுநவ மெய்தலென்
றிங்கிவர்க்குணர் வுட்டு மியானெனத்
துங்கஞாயிறு கீட்டிசை தோற்றினான். (உ௩)

புறத்திற்காப்பிற் பொலிந்து வளைந்தநீ
டிறத்தின் வல்லரணுந் தெரியாதுற
மறத்தின் வந்தடர் வன்கணர்யாவரு
மறத்தினாதரைக் கண்டனரஞ்சினார். (உச)

இன்னநாத றிறையவ னல்லரு
ளுன்னுமேலவரென் னத்தூணுக்கியே
முன்னுநீர்மையின் மூசும்வினைதெறப்
பொன்னம்பாதத்தில் வீழ்ந்தனர் போற்றியே. ()

கரவினைத்தொழில் யாவுங்கரப்புற
பெரியன்பாலிற் பவப்பிழைமேயகிய
பரியுநற்றவு பாப்பரிவிற்புரிந்
தூரியபண்பெழு முண்மையராயினர். (உசு)

அண்ணலங்கரந் தொட்டகமேகழைந்
துண்ணயந்த வுரியரி னுயவர்
பண்ணெனும் பயிலும்பதி போயினர்
விண்ணெலாம்புகழ் மேவிவிளங்கவே. (உஎ)

வாவிசூழ் வகுதைப்பதிவாழ்க்கையின்
மேவுசெய்யிதகுமதின் மேனயம்
பாவும்வண்மை படர்புகழ்நாயக
ரோவிலாத வுவகையி னேங்கினர் (உஅ)

கள்வர்வழிகோள்படலம்

முற்றிற்று.





# கச்சுசெய்துவந்த படலம்.



திரிவழிப் பொருட்கவர் திருடர்நல்வழி
யிரிதரா தெடுத்துத்தந் திசையினெய்தபின்
புரிதவ நாதரும் புனிதமாந்தரு
முரிதலி லருநெறி முயன்று போயினர். (க)

வனசரங்கிரிசரம் வகுத்தபஃறிணை
யினனெழு வெம்மையி னியைந்த தீச்சுரம்
புனமுத லெவைகளும் பொருந்த நீந்தியே
மனமகிழ் வினியமக் காவில்வந்தனர் (உ

இணையிலானமரர்களியற்று மாமணை
மணமுறுந் திருக்ககு பாவில்வந்தரோ
குணமுயர் நியபத்துங் குறித்துவண்மையிற்
கணமுட னுடையிஹறாமுங் கட்டியே. (ங)

ஆளுடை நாயகனருமை துன்னிய
நாளுடை பைத்துல்லா நாபபண்ணைகுறக்
கோளுடை யொருமைசேர் குணத்தினெஞ்சிடா
மீளுடை வலம்புரிந் தார்விளங்கவே. (ச)

பிறநடை யெவைகளும் பிசகிலாமலே
யறநெறி விதியொடு மாங்கங் கெய்தியுட்
பொறைதரு புனிதமே பொருந்துமாறதாச்
சிறவுயர் கஜ்ஜது செய்திட்டாரரோ (ரு)

ஆதிதன்னருளெலா மடையுமத்தலத்
தேதமிலா விதிமுறையி னேய்ந்தன
வாதரத் தபுல்கச னலியென்றோதிய
நீதியினயகர் நெறியினுற்றினர். (சா)

கூடிய மேலவ ரெவருங் கொள்கையிற்
பாடிய முறையொடு பயன்கொள் செய்கையுந்
தேடிய நினைவொடு புரிந்துசெம்மையி
னடியி னழுக்கற வாயினரரோ. (எ)

அருள்புனை கஜ்ஜினை யாற்றியாவரும்
பொருள்புனை நீர்மையிற் புநீதநன்னகர்
மருள்புனை யின்மையில் விடுத்துவண்மைசேர்
தெருள்புனை யுளத்தொடுந் திரும்பலாயினர். (அ)

வரைநெறியிடங்களும் வானளாவிய
மரநிரைவனங்களும் வன்சுரத்தொடு
புரைதருதலங்களும் பொருவிலேனவு
மரைமலர்ப பதத்திறை மகிழ்வினீந்தினர் (கூ)

பலபலதலங்களும் பரிவினிந்தியே
யலகறுபுகழினம் மருமதாண்டகை
யிலகிய வைகிய வெங்கு மோங்கிய
நலனருண் மதீனமாநகரம் வந்தனர் (க0)

பெருமறைமுகம்மது நபிதம் பீடமேந்
திருமுறையுயர்றவு லாவிற் சேர்ந்தவர்
குருமுறை தரும் வலிபாறத்துங் கோட்பெற
பரிவொடு புரிந்துபாத் திகாவுமோதினர். (கக)

அருணபி பெயரரா யகில மோஙகிய
வருண நேரபுல் ஹஸனலி யெம்மாண்டண்க
பொருணிறை மனத்தொடு புனித மோங்கிய
விருமையும் பயனற்ரும் பீடத்தெய்தினர். (கஉ)

முத்தொளி நாதர்பீடத்து முன்புறீ
யித்தல மேத்திய வெங்க ளையகர்
கைத்தலம் வயினிட னிணைத்துக காஞ்மலர்ப்
புத்தமு தொழுகும்வாய் மலர்ந்து பொற்பினே. ()

அந்தமிலான் றிருவருளி னோங்கிய
வெந்தையே நும்வயி னிறையவன் சலாம்
சொந்தமுமென் முதுகு வென்னிந்துயகற்
சிந்தையி னுகர்வொடு செப்பினரரோ. (கச)

முதுமையின் மொழிந்து வாங் [illegible]
புதுமையி னந்நபி புனிதவங்கரக் [illegible]
கதிர்[illegible]
நிதியெனப் பீடமே னிவப்ப நீட்டியே. (கரு)

உயர்த்திமன் சமிக்கையிற் பிரதியுத்தரம்
பயிர்ப்பற வருளினர் பரிவி னுள்ளமே
சயத்துறக் களித்தன ரலியுஸ் சாதுலி
வியக்குநல் பாத்திஹா விளைவினைதினர். (கரு)

அகத்தெழு நோக்கொடு மங்குலிப் பொருண்
முகத்தெழு நோக்கினன் முகந்து முத்தியே
யிகத்தினும பரத்தினு மிருமை யெய்துவான்
மிகுத்தமேற் பதம்பெறூஉ வெளியின் மீண்டனர். ()

கலைமுழு தேறிய கதிர்செய் யிந்தைவான்
றொலைதவழ் மீன்கணஞ் சூழ்ந்த பான்மையின்
விலைகொளு பணியென விளங்கும் வள்ளலை
மலைவிலாத் தவத்தினர் மருங்கு சுற்றினர் (கஅ)

வேறு

அரியதவஞ்சே ரபுல்ஹசனுல் அலியென்றோதுமாண்டகையுந்
தெரியுங்குழுக்களெல்லோருந் திருமா மதீனம் விட்டெழுந்து
விரியுமலர்பூஞ் சோலைகளும் விளங்குஞ் சிகரமால்வரையுந்
திரியும்விலங்குபல நிறையும் வனமுங்கடந்து சென்றனரால். ()

இடங்கருவைவு நீணதியுமெதிர் வெங்கரிவீழ் மடுக்களொடு
நடுங்குங்குளிரி னோடைகளு நாறுமுயிர்பபின் விடப்பாந்தள்
படங்கொணிழ லினுழல்சிகரி பதுங்கும்விடர் வெம்பாலையுநற்
றிடங்கொள்பாடி முதலெவையுங் கடந்தாரெங் கோனுடனெவரும். (உ0)

படரும்இடங்க ளிவைகளொடு பாதைபலவு நனிநீந்திச்
சுடர்செய்மணிகண் மிளிர்வாவி சூழும்பிறக்கா வெனுஞ்சீறூர்
தோடர்வினெய்திப் படங்கமைத்துத் தோன்றலுடன் பல்லோருற்று
ரடர்விற்சிலர் களவண்வதி யாதடைந்தா மிசுறுமாநகரில். ()

பரிசினிவணுஞ் சோலைதொறும் படருமுளைகக ளலர்த்திநறும்
பிரசமருந்தி ஞிமிறினங்கள் பெரியோனெலி சாதுலியிறைவ
ருரவர்தமைப் புன்கரவர் வினையுறுதும் புரந்தும் பவமொழிய
விரவினவமொன் றுறுத்திவந்தா ரெனுமாமொழியி னிசைக்குமரோ. (உஉ)

தாவுந்துவச மணிமாடஞ் சாருஞ்செழுமஞ் சிறைப்புறவு
கூவுங்குரலின் ஞேற்றமெங்கள் குதுபுநாதர் சாதுலியாங்
கோவுங்குழூக் கடமைக்காப்பக்கோட்டையியற்றிச்சோரர்வினை
போவுமுறையு முஞற்றிவந்தா ருலகிரறிமி னெனல்போலும். ()

திருடர்தமையும் வழிப்படுத்திச் சிறந்தகச்சும் புரிந்திறையோ
னருடங்கியநன் னபிநயினு ரளித்தபிரதி மொழிகேட்டும்
பொருடங்கியலின் மீண்டநமர் புனிதர்த்தெரிவான்போதிரென
வருடிவீசுங் கதலிகைக்கள் வயங்குமாடத் தாடுமரோ. (உச)

சொல்லுந்தரத்தி னுளவாகத் தோன்றனிலைமை நவநிலைமை
யில்லையெனவான் றேருரைத்தா லேழையெவ்வா றுரைப்பேனுல்
வெல்லு மிறைவ விகபரத்தும் வேண்டும்பதவி நயமருளிப்
புல்லும்பவமபோக் கிப்புரப்பைப் புனிதநாதர் பொருட்டானே.

கச்சு செய்துவந்த படலம் முற்றிற்று.

---

# கருபத்துல்லாவைக்காண்பித்தபடலம்.

---

வரிசைமேவிய செய்யிது சாதுலி வள்ளல்
பிரிசமேவிய விஸ்ஸூத்தீ னுதியர் பிறங்குங்
கரிசனத்தொடு வண்மைசேர் கருபத் துலலாவைத்
தெரிசனத்துற வருளிய திருநவந் தெரிப்பாம். (க)

ஆங்குத் தோன்றிய மாந்தர்களரு நவமெல்லாம்
பாங்கினூரவர்க் கிசைத்தனர் பண்புணர்ந் தவரி
ஞேங்குசீருடை யிஸ்ஸூத்தீன் முபுத்தியுள் விழைந்தே
தீங்குறுது ஹஜ்ஜாஜுக டெரிகுவா னெழுந்தார். (உ)

பெட்பினன்னவர் வதியு நற்றலம் பிறக்காவிற்
றட்பமோட டைந்தனர் முபுத்தியுந் தணப்பின்றி
நுட்பமேவிய நாதரைத் தெரிபொறி நுகர்வா
னட்பினோங்கிய சார்பினி னயந்தடுத் தனரால். (௩)

சான்றசீருடை முபுத்திபைத் தகைபெற விளித்தே
யான்றநாயக ரபுல்ஹசன் சாதுலி யருள்வர்
கான்ற மெய்யொளி வீசியகருத்த னற்றாதாய்த்
தோன்று மெந்தையா முகம்மது நபியெனுந் தோன்றல்.

அன்னநாயக ரியறரு சமயமார தப்பைத்
துன்னு சீர்மையிற் பேணுறுதிருந் திடிற்றெடர
மன்னுமாவற பாவுடை நாளினின் மாந்த
ரின்னயம் பெறுவான் றெருத்திவ ணழைந்தன்றே. (௫)

பரிவின் மக்கமா நகரிடைப் பயனொடு புகுந்தன்
றெருவிடாதற பாவினி லுந்துவ லென்ன
விரியுநூலுணர் முபுத்தியு மேலவன் றனைக்கொள
டரியவிம்மொழி யுண்மைகொண் டேனென வறைந்தார். ()

சிறிதமைந்திருந் தண்ணல ரவர்செழும் வதனங்
குறியினோக்கி மெய்ச் சான்றருட் குணம்பெறத் தெரிவிர்
முறிவிலாக் கருபாவிதோ முன்னுற லென்ன
வறிவினேறிய முபுத்தியு மியாவரு மண்மி (எ)

பரந்த நீள்விழி பரப்பின ரலர்த்தினர் பார்த்தார்
கரந்திடா துயர் மக்கமுங் கருபத் துல்லாவும்
விரிந்த சீர்தரு ஹறத்தொடு விளக்கலின் விளங்கிச்
சரிந்திடாச் சமுகத் திருந்தெனத் தரிசித்தார். (அ)

கண்டியாவரும் புதுமையிற் றளும்பினர் கனித்து
மண்டுசீர்பேறு மாதவ நாயகர் மலர்த்தாள்
விண்டுபோற்றினர் வணங்கினர் விழைவொடு புகழ்ந்தார்
பண்டிறைஞ் சுருதிப்பொருண் முபுத்தியும் பகர்வார். (௯)

ஆதிநாயக னருள்பெறு மண்ணலிவ் வடியேன்
பூதலத்துற வதிதரு காறுநற் புகலிற்
கோதறுந்திருக் குருவென நுந்தமைக் குறித்தேன்
பேதமற்றகற் றிடுகவப் பெருமையி னென்று. (௧0)

இன்ன மாமொழி யிஸ்ஹாக்கீ னியம்பலு மெங்கோ
னன்னர் நாயக னுடிறு மிஃதுறு நலத்திற்
றுன்னு சோதர ராமெனச் சொற்றகை யேற்றுத்
தென்னு லாம்பொழின் மிசறினிற் சேர்த்தன ரெவரும். ( )

கூறுமிஸ்ஹாக்கீன் றன்மையிற் சிலகூறிப் பிசைப்பாந்
தேறு நாளின்முன் சூபியாக் கனின்வழி தெருண்டு
மாறுரைத்துநங் கைவசக் திருக்குபா வரிசைப்
பேறுறும்ஷரீ அத்தெனும் பெருநெறி யன்று. (௧௨)

பிறிதி னுள்ளன வெவையவை முழுவதும் பிசகி
னுறையி யில்லவர் நிகழ்வன பொய்ம்மையி னுறுத்திச்
சறுகி நின்றன காண்குதி ரெனநனி சாற்றி
யறுதி வாய்மையி னவரவ ரறிதக வின்னார். (௧௩)

இன்ன தன்மையி னியலறி புணர்செய்குல் லிசுலா
மென்று மிஸ்ஹாக்கீ னெங்களு யகர்வழி யெடுத்த
பின்னர் பல்பொழு தவையினும் பெரியவ ரிடத்து
நன்னர் மேவுதங் கொள்கையை நவிற்றுவர் மாதோ. (௧௪)

நந்த நாயக ரபுல்ஹசன் சாதுலி நறிய
கந்த மாமலர்க் கைதொடூஉக் கருமங்க ளுணர்ந்த
வந்த ஞான்றுதொட் டருமறை புணரிசு லாமின்
சொந்த மாமுடி பெவையவை தொகுத்தன னெனவே. ( )

வள்ள லாமபி சாதுலி மகுறபி னெழுந்து
தெள்ளு சீரொடு மிசுறெனு நகரிடைச் சேர்ந்து
வள்ளி யோர்முத லெவரையும் வல்லவன் வழியிற்
கொள்ளு மேன்மையின் வம்மெனக் கூவின ரந்நாள். (௧௬)

குணக்கொ டுங்குடக் கிடையுள ரெவர்களுங் கூண்டன்
றிணக்க முற்றவைப் பொடுதலை சாய்த்தன ரிதயம்
வணக்கு மாறொரு வல்லவன் வழிநய முழுதும்
பிணக்கி லாதுமே னெறிபெறா உப் பெருமையி னன்றே. ( )

வரிசை யாயவந் நாளினில் வள்ளலார் வைகும்
பிரிச மாரவை யினில்வரு குவர்பெரும் பேற்றி
னுரிசை மேவிய விஸ்ஸாத்தீ னவரொடு முண்மைத்
தெரிச னத்தக்கி குந்திக ழப்துல்அ லீமும். (கஅ)

கருத்த ராமிபு னுஸ்ஸலா ஹிபுனுஹா கிபுவும்
பொருத்து நல்லிமா மிபுன்உரூ பூறுமேம் புகழின்
றிருத்து மின்னவர் போற்பெரி யோரெனத் திகழு
மருத்த மேயினு ரருந்தவந் திருந்தவன் புறவே. (க௯)

குழுமு மேலவர் யாவருங் கொண்டலார் குயிற்றும்
விழும மேம்பொரு ளந்தரங் கத்தறி மிகையிற்
பழுதி லாதுயர் பான்மையிற் கேட்டுளம் பதித்துத்
தொழுந யத்திடை யிடிலா தமைகுவர் தொடர்பின் ( )

சொல்லு மின்னவர் யாவருந் தோன்று மக்கால
மெல்ல வன்னெழுந் தடையிடை யெழுமுல மாக்கள்
பல்ல ருள்ளுமேன் றலைமையிற் பயன்பெறு மவராய்ப்
புல்லு நற்றவத் தகையினிற் பொலிந்தன ரென்ப. (உக)

அண்ணலாகிய நாயக ரபுல்கச னலியின்
பண்ணுலாவிய காரணம் பயன்பெறும் படியே
யெண்ணுலாப்பெரு நூல்களி னியைந்த வெண்ணிறந்த
விண்ணுலாவிய சிறப்பினிற் றொல்புவி வியப்ப. (உஉ)

சிறியன் யான்சொலி னெத்தனையென்று செப்பிடுவேன்
செறிநவக் கட்டறனி லொருதிவலையைத் தெரிந்து
மறியுமாறுரைத் தெடுத்தன விடயத்தி னண்ண
னறியமேனய நிலைசில் நவிற்றுது மாதோ. (உ௩)

கருபத்துல்லாவைக் காண்பித்தபடலம் முற்றிற்று.



# மேனவப் படலம்.

சுருதி வாய்மை துலங்கவே, பருதி நேர்கலை பண்புறக்
கருதி யோதிய காதையால், வருதி றங்கள் வகுக்குமே. (க)

கொச்சை யற்ற குணுதிப, ரிச்சை யுற்றன ரில்மெலாம்
பச்சை யுற்றுப் படித்தவாக், கச்சை கட்டினர் காலமே. (உ)

குருவி ளேதங் கொளுந்தகை, மருவி நான்கு மதப்புறத்
தருநி சர்க்கர சாதுலி, யிருப யன்பெற வேற்றரோ. (ங)

துதிணு வேற்றனர் தொல்புவி, பதிணு வில்மும் பதிந்துற
சுதிணு வானனர் சூட்சியோ, ரதின யத்துற வாயிஞர். (ச)

கற்ற வித்தை கணக்கிலாப், பற்றி னுற்றுப் படித்தவோர்
குற்ற மெட்டிணை கூறெணு, நற்றவத்தினன் ஞுதரே. (ரு)

நந்தி நாதர் நயத்தினிற், சிந்தி னேருறு செம்மலார்
பந்தி ஞானப் படிகளி, லுந்தி யேறின ருண்மையார். (சு)

சென்ற வீடுகள் சென்றிலா, ரொன்ற நின்ற வொலிகளுந்
துன்ற மேவிய சூட்சியி, னன்று நின்றில வாண்மையே. (எ)

செய்ய பாதை செழிப்புறத், துய்ய நாதன் றணையினம்
மையர் சேர்ந்தோ ரளவிளா, மெய்ய ராயினர் மேவியே. (அ)

கோடி கோடி குழூஉமொலி, நாடி நாடிய நாட்டத்தி
ஞடி போலக மாயினர், வீடின் மேய விளங்கிஞர். (கூ)

மாசடா தருண் மாண்பினிக், காசடா தக ணத்தினை
யாசடா தறுவா கின்முன், பூசடா திறை பொருத்திஞன். ()

மாசனத் திரண் மன்னின, வாசனத் தறு வாகின்முன்
பாசன மிரு பாலினுங், கூசன மறக் கூட்டினேன். (கக)

என்று நாத ரியம்பிட, வன்று துன்னினரவ்வுழிக்
கன்று காட்சி கருத்துற, நின்று நேர்மை நிலைத்தனர். (கஉ)

வேறு

மல்லலம் புவிதொழு திறைஞ்சு மாநவம்
புல்லிய சாதுலி புனிதர் தம்மையோ
ரெல்லையி னொலியென விறைவ னூக்கிப்பின்
பல்லொலி நுதலணி பதத்தர் நீரொன்றூன். (கங)

நழுவிலாக் கலைதெளி நாதர் தம்முரீத்
தெழுபதி னுயிர ரினிது சூழ்வர
முழுமதி தவழுமா மிசுறென் னூரது
தழுவிடச் சென்றனர் தாட்சி கொள்ளவே. (கச)

மன்பதை யுயிரெலா மருவுஞ் சாதுலி
தன்பதத் துலகெலாந் தங்கும் வல்லலை
யின்பகத் தறிந்தபோ லெவரு மில்லென
வன்பகத் தஹியுத்தீன் குறைவுறைந்தனர். (கரு)

பல்வகைத் தாதுவின் பயன் படுத்திடா
வில்வகை மலக்கூத்தி னெய்து மாண்டகை
நல்வகை யப்பாசுல் முறாசி நாயகர்
சொல்வகை யபூமதீ னென்னுந் தோன்றலே. (கசு)

அறாசினிற் கண்டன ரவரை நோக்கியே
யுறமக்கா மில்மெவை யுரைத்தி ரென்றலும்
பெறுமில்மு மெழுபதிற் றொன்று பேணியா
னுறமக் காநாலே ழப்தா லுயர்நிலே. (கஎ)

தலைமைய ரென்றலுந் தக்க சாதுலி
நிலைமையை நிகழ்த்துதிர் நீவிரென் றனர்
புலமையர் முந்தினர் பொலியு நாற்பதா
முலைவிலா வில்முக ளுன்னி யேறினர். (கஅ)

வாக்கினில் பகுறல்லா யுஹாத் தவரென
பாக்கனீ யறப்பயீ னில்மெனப் பகர்ந்
தாக்கநாயகர் ஹைஹாத் ஹைஹாத் தவரெனப்
பூக்குமன் னவர்புகழ்ந் திதுபு கன்றனர். (ககூ)

சரிதையுங் கிரிகைநல் யோகஞ் சாற்றிடுந்
தருமியன் ஞானமுஞ் சாருஞ் சாதுவி
யருமையி னருமைய ராதிபா லடுத்
துரிமையி னின்றன ருவப்புத் துன்றியே. (உ0)

ஒன்றிய நாதரை யுலகம் வாழ்த்துறச்
சென்றிடு மாண்மையிற் சிறந்த சாதுவி
துன்றிய வொலிகளுந் தூர மென்றனர்
நின்றிடு மபூமதீன் நிமல நாதரே. (உக)

மன்னெறி னூங்குபு மன்னு மாநபி
தென்னிலங் கிடுந்திருச் செவ்விய பேரரைப்
பன்னில மாக்களும் பதிந்தொ லிகளா
யன்னிலை சாதுவிக் கன்ப ராயினர். (உஉ)

பெறுநய மிணைந்துறு பெட்பி னுயக
ருறுபவர் தெளிதகைக் யுவப்பின் ஞானநூல்
மறிதிரைக் கடலென மவுல மாமனத்
துறுகளிப் பெய்திநல் லுறுதி கொள்வரே. (உ௩)

அறம்பொரு ளின்பவீ டளிக்குஞ் சாதுவி
நிறம்பெற நின்றிடு நீதிமன் னரைக்
கறைபற மன்னினர் கணக்கி லாதவர்
திறம்பெறு முயர்குத் பெனத் திகழ்ந்துமே. (உச)

பற்பல சிந்தனை போக்கும் பார்த்திப
ரற்புதக் கடவுளை யருமை நாதரை
நற்பயன் சேர்ந்துற நாளு நாடியே
முற்பயன் சேர்ந்தனர் முதன்மை யோங்கியே. (உரு)

கடல்புவி யுலகெலாங் காக்குஞ் சாதுவி
யடல்வலி யாண்மைய ரவர்த ரீக்கினி
திடமுட னுவந்தொரு தடவை சேர்பவர்
கடையெழு மொலியெனக் கழறி னாரரோ. (உசா)

மக்கமு மதீனமு மன்னு கிந்தியும்
பக்கெழு மிசுறியும் பயன்கொள் சாவியுந்
தக்கநல் மகுரிப்பு சாமி றாமிகள்
ஹக்கனுக் குரியநன் னுதர் காண்வழி (உஎ)

புக்கினர் பூத்தனர் புளகித் தொன்றியே
மிக்கநன் னெறியினின்மேவி மேவிடாத்
தெக்கணத் தவர்புகழ்ந் தேத்துஞ் சாதுலி
யுக்கிரத் தொலிதொழு முண்மை யண்ணலே (உஅ)

மேனவப் படலம் முற்றிற்று.



# குருநிலைப் படலம்.

பெருநிலைதிரியா நவநிதம்பயினும் பேறருளொலிகளினிலைத்த, வொருநிலைமுதிர்ந்த வபுல்கசனலியென் றேதியநாதர்மெய் வல்லோன், றிருநிலைநெறிபெற் றுயர்தவந்திருந்தித் தேசிகர்தாமெனப்புகலுங், குருநிலைவரன்மா முறைத்தொடர் பவரைக் கூறுது மறிதகக்கேண்மோ. (க)

புகழணிவள்ள லபுல்கசனலிதம் புனிதசற்குருவென வந்தோர், திகழணியப்துஸ் ஸலாமசிசென்னுந் தேசிகரிவர் குருவானோர், நிகழ்தவசெய்சப் துற்றகுமானுல் ஹசனியாநிருமலரிவர்தந், தருநவக்குருவாம் குதுபுறப்பானி தகியுத்தீனுல் புகைரியே. (உ)

பருதியிற்றுலங்கு மிவர்குருகுதுபு பகுறுத்தீனிவர்குரு நெறிசேர், சுருதிநற்பொருடேர்ந் தருந்தவம்புரியுஞ் சுகுணராநூறுத்தீனிவர்தங், கருதியகுருவாம் தாசுத்தீனிவர்தங் கனதவக்குரு நெறிமுறைசேர், தருநிகர்க்கரத்தா ரெனவுலகேத்தும் சம்சுத்தீன்முகம்மதென்பவரே. (ங)

செககலர்புகழு மிவர்குரு செய்னுத்தீனெனு மாதவரிவரி, னருதவக்குருவாம் குதுபபூ இஸ்ஹாக் குல்பிசுரிய் யெனுநாதர், மிருநவத்திவரின் குருமறைபயிலு மேன்மையின் குதுபபுல் காசிம், அருமதுல்மறுவா னிப்பெனவிளங்கு மருந்தவநாதர்தா மன்றே. (௪)

சான்றவரிவரின் குருவெழிற்றகைசேர் செய்குசகீ தெனுந் தரும, னான்றவைத்திவர்கங் குருகுதுபுலகம் வழுத்திய வெலீல் கருவானீ, யேன்றவரிவர்தங் குருஅபூமுகம்ம தெனப்புகல்பாது குஸ்சுஊதா, மான்றவர்புகழு மிவர்குருகுதுபு ஜாபிறென்றருளு மாதவரே (௫)

அணிபெறுஞ் சுருதிப் பொருணணி யுணர்ந்த வாண்டகை யிவர்குரு வாமேனோர், மணிமுடியரசர் தினந்தினம்பரவு மலர்ப்பதந் தலியெனும் புலியின், கணிதவத் துதித்து வனப்பினின் முதிர்ந்த சுசனெனுங் கண்மணி யனையார், தணிவிலாப் புகழி னிவர்குரு விவரென் றுணர்தரு தன்மையிற் சாற்றும். (௬)

உலகமுமுலகத் துள்ளவையனைத்து மொருங்கொடு படை யுணற்சேந்தி, னலகிலாப்புகழி னணிசிறந்தகிலை மாளுடையவன ருள் பூணைந்து, மிலகியநபிமா ரெவர்க்குமோரிறையா யிருமையுந் தாமெனத் தோன்றிப், பலகலை தமக்கோர் நாதரின்வந்த பார்த்திபர் முகம்மது நபியே. (௭)

இன்னநற் குருக்களெவர்கட்குங் குருவா மிவர்கடம் பெரும்பொருட டகுறை, மனனுமிப்புவனத் திடைவருபாவம் பகைபிணி மிடைமுத லகற்றி, முன்னிய வீமான் மனத்தடநிரப்பி மூவிடத் தினுமிடர் தடிந்து, பொன்னகர் புகுத்தி வைத்தருள்புரிவை புகழெலா முறுமொரு பொருளே. (௮)

காரணக்குருக்க ளிவர்களும்வாழக் கதியருட் குருக்களும் வாழ, வாரணக்குருக்க ளெவர்களும்வாழ வபுல்கசன் சாதுலி வாழப், பூரணத்தவஞ்சே ரொலிகளும்வாழப் புகழிசுலா நெறி வாழச், சீரணிமுஸ்லிம் குலமெலாம்வாழத் திகழ்கலைவலரும் வாழியவே. (௯)

குருநிலைப் படலம் முற்றிற்று.





# கலிபாக்கள் படலம்.

நெறிபெற் றுயர்நேர் மையர்தம் கலிபா
செறிநற் றவமார் திகழ்தூ யவரென்
றறியுற் றவகத் துயர்மாட் சிமையார்
முறைசொற் குணவப் பாசுல் முறாசி. (க)

அருமைப் பொருளாண் டகைநல் லொலிதம்
பெருமைக் குறுபெட் பினராம் கலிபா
மருண்மத் தகமாய்த் துனுசிங் கமெனுங்
குருமைக் குயர்யா கூத்துல அறுசி (உ)

நன்னேர் மையர்நா யகர்தம் கலிபா
பன்னேர் மைபயிற் றியபான் மையினார்
மன்னேர் மைவளங் கிடுமா தவத்திற்
சென்னேர் மைசிகா புத்தீ னொலியே. (ங)

திணிதோ ளர்சிகா புத்தீன் கலிபா
வணிமா தவராண் டகைநல் லொலியாங்
கணியா தகருத் தினர்காட் சியரென்
மணிபோன் றமகத் தவபுல் லஹுயே. (ச)

கனமே வியகா ரணரா மிவரின்
மனமே வியமா தவமார் கலிபா
தினமே புகழ்சேர் நயசெய் கையுளார்
கனமே யமுகம் மதெனும் ஹனபி. (ரு)

வேறு

இந்த மாதவர் வரவினைக் குறித்துநம் மிறைவர்
தந்த காரணம் பலவவற் றுட்சில தரவே
நந்தி டாமன நாடின ஞயக னருளா
லந்த மேவிய லவாக்கிஹா மருங்கிதா பறைந்த. (சு)

ஏந்தும் வாழுயர் நாணிகழ்ந் தெய்திய பின்னர்
சொந்த மாயவென் வழிதனைத் துலங்குறச் செய்வ
ரிந்த நாயக ரபூபக்கர் மரபினி னெழில்சேர்
தந்தை தாய்சிறு வயதினிற் றக்கநன் முறையாய். (எ)

மிக்க நன்னகர் மிசுறிடை வருகுவார் மெலிந்த
தக்க பால்யர்தௌ பாநிலை கொண்டவர் தகுதிப்
பக்க மேவிய பாரெலாம் பரவிய புகழின்
முக்கிய நாமத்தின் முகம்மது ஹனபி சாதுலியே. (அ)

எனந வின்றன ரபுல்ஹச னலியெனு மிறைவர்
கனந வம்பெறு மாண்டகை காசினி விடுத்த
பினர்வ ரந்தரு பெட்பினர் நூற்றொடு நாற்பா
னனவ ருடத்தி னகிலமீ தழகொடு முதித்தார். (கூ)

தனைக டற்புவி மீதினிற் காளைசேர் வயதிற்
றினமு மென்னிடந் திகழ்குது பாணியாக் குபுரு
மனமு வந்திட வந்துபோ மென்பதை வகுத்து
நனைம லர்ச்செழு நாவினா னவின்றன ரன்றே. (க0)

நந்த நாயகர் நாற்பது வருடமும் மாசம்
பந்த மார்குது புயர்குபு ருநிலை பதிந்தார்
கந்த மேவிய நபியுரை யபூபக்கர் கையாற்
சந்த நேர்தலைப் பாகொளு மேந்தல் சாதுலியே (கக)

இக்கு மாமொழி நாதர்கல் வத்தெழு வருடம்
புக்கி யங்கிருந் தெழுந்திலாப் புனிதவக் காலம்
ஹக்கன் வாய்மையங் கெழுவச ரீரியிற் கணித்துப்
பக்க மாரவன் றெழுந்துறா மவர்க்கது பகர்ந்தார் (கஉ)

பங்க மின்றிநா னூறுபே ரொலிகளாய்ப் பதிந்து
[illegible]ங்க மேன்மையங் கதத்திருந் தெழுந்தனர் துளங்கத்
தங்கு மேன்மைசேர் நபிசபைக் கேறிப்பே றுற்றுச்
சங்கை யோங்கினர் முகம்மது ஹனபிசா துலியே. (கங)

செய்வ கைக்கெழி றரும்புகழ்ச் செழுமலர்ப் பதத்தி
னுய்வ னந்திகழ் சாமுறா முயர்வள மிசுறாங்
கைவ கைக்கணி கண்டனர் காட்சியின் பெற்றி
பெய்ம னத்தினர் பெட்புறுந் தகைமை பேசுவதோ. (௧௪)

சொன்ன யத்தினர் துலங்கெழிற் கபுறினைத் தொடர்ந்து
பன்ன யம்பெற துவா விரநதிடிற் பரிவுடனே
யிந்நி லத்தினி னெளிதிற்கை கூடுமென் றிறைவர்
தந்ந யந்தர வறைந்தன ரண்ணல் சாதுலிமே. (௧௫)

மண்ணா கத்தனை மாட்டிலே கிட்டென மவன்றூர்
கண்ணா கன்றவிப் புவிதொழுங் காரணக் கடவுள்
விண்ணா கத்தவர் விளக்குற விளக்கிய பெருமா
னண்ணா லாண்டகைக் கன்புறும் ஹனபிசா துலியே (௧௬)

பன்ம லர்தரும் பாதையி னொருவரைப் பகைமாய்
சன்ம னத்தவ னவாபொருட் கவர்ந்திடக் கருதி
யிந்நி லத்தினில் வீழ்த்தின னீர்தகை கொண்டான்
சொன்ன யத்தினர் தூய்புகழ் நாமத்தைச் சொரிந்தார். (௧௭)

கத்தன் பாணினை யொன்றிய கல்வத்தி னிருந்து
சுத்த மேவிய பதக்குற டெறிந்தனர் தொடர்ந்து
சித்தெ னப்பறந் தவன்முக நெஞ்சையுஞ் சிதைத்து
மித்த ரைக்கணின் வீழ்த்தின வீழ்ந்திவ னிறந்தான். (௧௮)

காக்கு நாயகர் கபுசினைக் காணிக்கை யுடனே
பூக்க வைத்தனர் புகழ்ந்தனர் புண்ணியர் பதத்தி
னோக்கி னின்றவர் நோக்கமைத் தாயின நுவன்று
வாக்கொ டுள்ளமெய் வழிகொள நெறிகொடு வந்தார். (௧௯)

வல்ல நாயகன் வாக்கெழும் வரிசையின் புறக்கா
னல்ல வற்றிடு பத்தினு லாயிரங் கோடி
சொல்லுஞ் சேர்ஹூறு பொன்றிற்குச் சூழ்வினை யறிவ
னில்ல கத்தினி லிறையருட் கொண்டுநா னென்றூர். (௨௦)

ஒறுத்த சிந்தனை யுலகினி னுய்வகை தனக்குச்
செறித்த சிந்தனை தினங்கொளுந் துன்பமுந் தெறித்துப்
பறித்த கன்றிடப் பார்த்திபர் பாதமென் மலரை
நிறுத்த கத்தினி னிலைகொள வாக்கின னிதமே. (உக)

குருத்துந் திந்தெனக் குளிர்முக நாயகர் பதத்தை
யிருத்தெஞ் ஞான்றினு மெனகங் கொண்டன னெழுதித்
திருத்து மாறினறித் தெளித்தனன் சீர்பெற நாடிப்
பொருத்து மேதகைப் புண்ணியர் புகழினிற் சிலவே. (உஉ)

அண்ண லாண்டகை யபுல்ஹசன் சாதுலி யவர்தம்
பண்ணி வார்ந்தமேம் புகழ்குல பாக்களின் பயனுற்
கண்ண சனறவிப் புவியொடு மறுமையுங் காப்பை
யெண்ணி நின்றவெந் தமையெலா மிறைபறைய பொருளே.()

கலீபாக்கள் படலம் முற்றிற்று.



## ருமைதர் தறுகாப்படலம்.

பாந்த ளுரைத்துப் பற்பல பேசும் பயகாம்பர்
சாந்த சுபுத்திர பௌத்திர ரெங்கள் சாதுலியை
யாய்ந்து தெளிந்தே யகநிறை கொள்வோர்க் கவமேது
காந்து மனத்திற் கவலை தணிந்து கதிகொள்வார் (க)

நற்பய னேங்கு மெம்மிற சூல்தந் நயமுள்ளார்
சிற்பயன் சேருஞ் செம்மல் தரீக்கைச் சேர்வோர்க்கு
பற்பயன் மூழு மெய்துறு மென்றும் பரிவுள்ளோர்
தற்பரன் பாலிற் சார்புக வஞ்சாத் தகைமைத்தார். (உ)

இறையுரை போல குமைதரின் மேவ விளைபுற்று
நறைகமழ் நாதர் சிலரொடு கருவி நனிகொண்டே
யுறையிடங் காட்டத் தூயவர் தோன்றி யுரைசெய்யக்
கறைய கலாதி சமூக மமைந்து கபுறுற்றார். (௩)

நிருணய வயது மறுபது மூன்று நிலைத்துற்ற
தருணம னாதி தக்கான் விரும்பத் தணப்பில்லா
ரருணமெய் நாத ரகலாக் காட்சி யறிவோடு
வருண முறைந்த சுவன மடைந்தார் வழியோடே. (௪)

மாயாச் சோதி மணிவிளக் கன்னார் மாட்டுற்றுத்
தோயா ராருஞ் சுழன்று மயங்கித் துயரெய்திக்
காயா நெஞ்சிற் கவலை மிகுத்துக் கலக்குற்றார்
வாயால் வண்மை புகழ்தற் கரிய வள்ளற்காய். (௫)

செய்ய மனத்தினையக மகற்றுந் திறலாளர்
வையக நீதத் தண்ணல் முரீதீன்கண் மல்கிக்
கையை நெரித்து மையகொ வென்னக் கரைந்துற்றார்
துய்யமெய் நாதர் தம்மை யிழந்த துயரானே. (௬)

வேறு

ஆளு நாயக ரடங்கிட முனமிலை யருளடை மனுப்பாலர்
தாளும் பட்சிகள் விலங்கின மூர்வன சூழ்தரத் தழைத்துற்று
நாளும் வாழ்ந்தன பழூவங்க ணகரென நாயகர் பொருட்டாலே
நீளுமா நரர் துன்றின ரரசரு நெறிகொள நிலைத்தாரே. (௭)

புரிசை சூழ்ந்தன பொற்பதி நிகர்த்தன பொலிவுறு மணிமாட
நிரைசெய் துற்றன நெருங்கினவாவண நீண்மறுகிடந் தோறுங்
கரிசனத் தொழின் மானவர் வாணிபர் கணக்கிலர் செழிப்போடு
முரிசைசேர் பொருளொடு மொழிசேர் பொருளுரிமையி னிறுப்பாரே. ()

பண்ட மாற்றுவர் பண்டியிற் செறித்தவர் பதிபுக மனமுன்னிக்
கொண்ட னாயகர் தரிசனை புரிந்துபின் குறித்ததக் கணையோடு
மண்டு சீர்செறி யினியன பொருள்பல வளங்குவ ரருளேற்றுக்
கொண்டு தந்திசை யேகுவர் வருகுவர் தினந்தினங் குழூவாக.()

வேறு

செறிவிடை வளைகரு முதிர்தரு மணியொடு செங்கரும்பின
முத்து, நிறைவிடக் குவளைமென் மலரொடுபவளமுநிரைத்தபோற்
செஞ்சாலி, நறுமலர்த் துடவைகள் புடைதரு குமைதரிந் நாளி
லப் பதியென்ன, வுறாமிடத் தமைந்தது நெறியரு ளபுல்ஹச
னுறைதரு பொருட்டாலே. (க0)

ஆடைபட்டின மலிபூண்டகு மணிபல வாவணக் கடை
வீதி, வாடைபன் மலர்செறி பூவணை யூடலின் வகைதெளி மட
மாது, ரேடலர் புயவரை தழுவிய பினரவ ரிசைத்திடு மொழி
யோம்பி, யாடவர் தொடர்கொடு வாங்கி யளித்திடு மணிவள
நகரன்றே. (கக)

குத்துபுக ளக்பர் கோமா னொலிகளிற் சிமான் குணப்
பூமான், நத்துநற் றவமே நயம்வளர்த் துறுநன் னிதிகலை மக
னென்னிப், பத்திகொ ளத்தல நனிசிறந் தோங்கின பாங்குயர்
மறையாளர், கத்தன தருபெற் றுறுமபுல் ஹசனலி கருதிய
தகைபாலார் (கஉ)

வேறு

மஞ்சடை துஞ்சா மேருவை யொத்த மகளிர் செறிந்த மணி
மாடங், கிஞ்சுக மோது மறைமொழி யதனைக் கேட்டயர் நெஞ்
சிற் கிரகித்து, வஞ்ச மகற்றி வகையொழு கிப்பின் வானவர்
போற்றுந் தறுகாவிற், றஞ்சநீ ரென்று சாற்றி வணங்கிச் சார்
புற நின்றே தகைகொள்வார். (கங)

கோதம் பிறங்கு சாமிபஃ ருனியங் கொள்ளுவர் விற்பார்
கம்பலையு, மேதகு மரையர் பரிகளி ரெட்டை மேவு மினம்பல்
கம்பலையுங், காதள வோடுங் கண்ணுடை மகளிர் காலணை தண்
டைபல் கம்பலையும், பூதலஞ் சுற்றுங் கடலொலி மாய்த்துப்
பொலிவுறும் குமைத ருவன்றே. (கச)

மஜ்மா குலாபு விஸ்தம்பு ருஜா மலிவிலை யத்தர் புனு
கோடு, கஷ்மீர் புட்டாகை வேலைத் தொப்பி காணரும் விலையுயர்

நாசூக்கு, ஐஸ்வரியத்தின் குமைதருவாழு மாண்டகை யபுல்
ஹசன் பொருட்டாலே, தசனமணிந்த முடிபுனை மிசுறுதராதிப
ராஜு நகரன்றே. (௪௫)

வேறு

காலமூன்றையு மறிகுநர் கடற்புவி கணக்கிடு நுஜூமாளா
ரோலமாமறை வாயின ராரிய ருளந்தெளி கொடைமன்னர்
பாலநேமியர் படைசெறி கரத்தினர் பல்பொருட் சம்பன்னர்
வாலசூரியன் மிளிர்தரு குமைதரு வளநகர் வதிவாரால். (௧௬)

வருடந்தோறினும்விழுவினில் வாஞ்சையர்வகைசெறிமறமன்னர்
தருவினைருறு தக்கணைப் பொருள்பல தகுதியி னளிப்பாராற்
சருவுவேல்விழி மடந்தையர் சிசுவொடு தக்கணை நனிசேர்த்து
மரியநாதர்கந் தூரிபல் சிறப்பொடு மருமையிற் செய்வாரே. ( )

வேறு

மேனிலைக்கதவ நிலைப்படி யெவணு நித்தில மிளிறுபன் மணியும்
பானிலவெறிப்ப விரசித மலையைப் படிவர வமராற் கடைந்து
தானிலைத்துறக்கமனைய துபிறங்கித்தரணியிற்றோற்றிடுமாற்ற
ஞனிலைக்குரியநாயகர்புகழைநடிப்பபோன்றிலங்குமென்றறுகா.

வேறு

விளரியரிகண் முருகமைந்துண்வெளிற்று கமுகுமிடறொசிய
வளருமுசுதன் கடுவனொடு மகடுவகலா துறத்தாண்டும்
பழமைநபிதம் முறையோடு பாங்கினுமம் பொறிதறுகா
முளரித்தடாக குமைதருறு மொய்ம்புநிறைந்த வபுல்ஹசனே.

கவரிகுஞ்சஞ் சாந்தாற்றி கால்செய்வட்டம் விருதோடு
மவிருங்குடையுங் கேதனமு மலங்கலணியுந் திண்டோளர்
நவுரிபம்மை தவில்பலவு நாட்டுங்கொம்பு தக்கையுடன்
பவுரிப்பரியின் வந்து தினம் பணியுந்தறுகா வாயலன்றே. (௨௦)

வென்றிநெறியிற் சிறந்தவரும் வேந்துபாலர் தங்குழுவு
மன்றுகருணை யரிகள்சுமை யானகிழங்கு கறியோடு [யிருத்தி
துன்றுதெருக்க டொறுஞ்சமைத்துத் தொகுதியொடுபே ரவை
நன்றிபயப்பக் கந்தூரி நாடியளிக்குந் தறுகாவே. (௨௧)

உண்டுகளிப்பர் சிலர்சிலரோ டுடேவாரிக் கொடுபோவர்
மண்டுபிணிக ளுர்ந்துசிரந் துளக்கிமலர்க்கை வாரிநின்று
சொண்டலனைய தக்கணையுங் கூடவழங்கக் குவிப்பர்சிலர்
விண்டுதூபரந் தீரவென வேண்டுதுவாவு மிரப்பர்களே. (உஉ)

பண்டுவினைக ளுர்ந்தவரும் பாடிப்பணுவல் செய்தவருங்
கண்டுகாணுக் காட்சிதனைக் கருத்திற்கண்டு மகிழ்குநரு
மிண்டுவருட முற்சாக விழைவுவேண்டி நிற்பவருங்
கொண்டநதர்கள் கொடுப்பவுண்டு குலவுமறுகு திரிகுவரே. ()

கூடமறுகு பொழுதறியாக் குவியுந்தனத்தார் செறியும்பரி
வேடமணிந்த வெயிற்புறத்து வேரியகழிக் கரையோரம்
பாடமணிமுக் கனிகளொடு பருகவயிலும் விருந்தினர்க்குச்
சோடசவுப சாரமெலாஞ் தொகுக்குங்குமைதர் தறுகாவே. ()

வேறு.

கிஞ்சுக மொஞ்சு மின்சொ லரம்பைக் கிளர்வானோர்
புன்சொ லகற்றும் புண்ணியர் போற்றிப் புளகித்து
மெஞ்ச லிலாது வேண்டுவவேண்டி யெழில் பூத்துத்
தஞ்சநீ ரென்று சாற்றுபு சாற்றிச் சால்கொள்வார். (உரு)

தண்ணடை யாளர் கொன்னணி மின்னார் தம்மோடு
மண்ணெழி னூங்கு மைந்தர் மருங்கு மலிவெய்த
புண்ணெழு துன்ப மின்ன லுறாது புரிவீரென்
றண்ணல் பொற்றறுகா சொன்னம் பன்னிதியு மளிப்பாரே. ()

குறிஞ்சி நிலத்தா ரகிலொடு கறியுங் குணமேவு
நிறஞ்செய் கோட்டங் குங்கும மறைக ணிறுவிப்பா
ரறஞ்செய் நாதர் சாவியத் திக்குறு மணிகொள்வார்
திறஞ்சேர்ந் தொன்று பவங்களி ரீஇய நெறிகொள்வார். (உஎ)

பன்னில மாக்க ளென்னி வளைந்து பரிவோடு
மின்ன விலாக்கை விரல்பல சேர்த்து விரைகுற்றுத்
தென்னிலை ஹல்க்கா சேர்த்துபு சேர்ந்து தெளிவித்து
நன்னிலை திக்குறு நயம்பெற நாளு முடிப்பாரே. (உஅ)

துறக்கி சருமிக் கிபுத்தியர் றாமிக் கிளைபல்லர்
நறைக்கணி மிசுரி மஃறிபு கிந்தி நயஜாவா
நிறக்கணிப் பில்லா ரினர்பல பாடை நிகழ்த்துற்றுத்
துறக்க நிகர்த்த சாலியா முற்றுந் தொழுவாரே. (உகூ)

அக்கண மேலோர் புக்கி வணங்கி யருளெய்தி
மிக்கொலி பக்க லிருளைய ரோடுமெலி வெய்தா
புக்கி துவாவு மிக்க விரந்து புளகித்துத்
தக்கணை யென்கொல் சாற்றுத லெம்மாற்றகை மைத்தோ. ()

வேறு

அம்பக மலரு மணிவிரன் மலரு மானகம் மியர்செயும் வரி
சைச், செம்பொனி னிழைத்த கம்பிபொற்றகடு செழுமலர்ப் பா
தகேசாதி, தம்பநீரென்று தரணிபற் பொருளுந் தணப்பிலர்
கொடுவந்து குவிப்ப, நம்பிக்கை ஞான நாதர்பொற் றறுகா நனி
,பணி விடையர்கட் செறிந்தே. (நக)

குறையகனீதக் குரவர்கள் கூண்டு கொளும்விலைக் குறிப்பு
மே பதிந்து, மறைகருங்கூல நிறைதரவாக்கி யதின்மிஞ்சு நாண
யம் பலவுங், கறையகல் கரும்பொற் பேழையுட் படுத்திக் களிப்
பொடு மனோஜர்கைத் தூறப்பை, நிறைதருஞ்செல்வ முறைகென
வளித்து நிகழ்த்திடு நாயகர் தறுகா. (நஉ)

கருமுகிற்கவிகை நடிமரபுதித்துக் ககன்முக டெழுந்தசெஞ்
சுடரின், வருமபுல் ஹசன்சாதுலியரு ணெறியின் மருவிய சோ
தர முறைகொண், டருமையின் செய்யி தகுமதுமன்பிறு முகம்
மது முகியித்தீ, னிருமையின் பயன்பெற் றுரிமையின் வாழ்வா
னின்னய னருளிறை யவனே. (நந)

குமைதர் தறுகாப்படலம் முற்றிற்று.





# நாயகர் மகத்துவப் படலம்.

* ஹாசிலொலிக லொதுங்குந் தலங் கருணை1யசுறு றுகுந்தலம்
காசின்Bமலக்கூத் தாகுந்தலங் காணு?முல்கு ஹகாயிக்கெனும்
வாசிமேயறிப் பிரசித்தவகைக ளுரைத்து வழங்குந்தலம்
மாசிலாத மணிவிளக்கா மௌனநாதர் திருப்பாலே. (க)

அறிவுக்கறிவை யாகுந்தல மானவறிவு முறைந்ததலங்
குறியின்விளங்கி யறியவகைக் குன்றேயனைய வுயருந்தலஞ்
செறியுமொலிக ளுவக்குந்தலஞ் சிறப்பாயுறுதி பகருந்தல
நெறிநற்றவத்தா ருணருந்தல நிமலநாதர் திருத்தலமே. (உ)

வாக்குமனமு மொருவழியாய் வந்திப்பவர்க்குச் சொந்தத்தலந்
தேக்குமறிவை யுண்பவர்க்குத் தெவிட்டாதுறைந்த தெள்ளமுதங்
காக்குங்கருணை நிறைந்ததலங் காணுஞ்0சுகூதை விளக்குந்தலம்
பூக்குநாத னருள்சுரந்த புனிதரலிசா துலிமாடே. (ங)

சித்தின்வித்தை கற்றுநயஞ் சேரும்லாகிர் பாத்தினையும்
பத்திப்பிரிந்துப் பகுத்துணரும் பதியாமெவர்க்கும்பதியானோர்
நத்துமுலகின் மாயைவழி நாளேபிரித்துத் தெளித்துவயக்
கத்தனருள்சேர் காமிலெனுங் காமில்முகம்மி லபுல்ஹசனே. (ச)

---

* ஹாசில், சுத்தம்.

1 அசுறு, அகமியம்.

B மலக்கூத்து, மலக்குகளின்தானம்.

? முல்கு, தத்துவம்.

0 சுகூது, கடவுள் தெரிசனே.

வரிசைநிலைத்த நாசூத்தில் வளர்ந்தநிலையா மலக்கூத்திற்
பிரிசமுயரும் ஜபறாத்திற் பேணுந்தலைமாம் லாகூத்திற்
பரிசினிவர்ந்து குணமேழும் பரத்தினிறாத்தித் தாமாகித்
தெரிசனத்தினுலகமெலாம் புரக்குந்திறன்மை யென்னென்கோ

ஓங்கலனைய வொலிகளுத லொளிறும் பதத்தா ருவர்மாட்டுப்
பாங்கினேறு மகாம்கள்புகழ் பகர்ந்தாரெவருஞ் சென்றிலரா
ஞன்கு மதுக பிழாம்களொடு நண்ணுந்திறலார் சாதுலியை
தாங்கு தினமுங் காணமனத் தடத்துட் பூத்த தண்ணளியே.

ஆன 8 முல்கி A மில்ஹாமு மரிய J வஞசி ருனவெலாந்
தானமனத்தி னுட்படுத்துந் தகைய ரோங்கு தாழ்த்தவின
ஞன விறம்பூ தியகரண வண்ணவலியாம் சாதுலியை
வானும் புவியும்படைத்தவிறை வகுத்தானெம்மருய்யவென்றே.

வேறு.

பூவக நறைக ளுண்டு புள்ளினந் தாவி யேறுங்
காவக குமைதர் நாதக் கருத்தரின் பதந்தொட் டிந்தக்
கோவகத் துற்ற செய்ய நபிகுத்து பிவர்கள் பாத
நாவகத் திருத்திநாளு நாட்டின னிலைமைக் கன்றே. (அ)

கோதுமை வாங்கி வந்து கொளும்விலை கொடுக்க வக்கா
லேதுற வுளுத்தல்வேண்டா மெற்கென வறைய முன்னர்க்
கோதறக் கொணரு மன்னோர் கொழுமுகஞ் சாம்பிநிற்ப
வாதரத்துடனே லாப மளித்தவர் பொருட்டினனே. (கூ)

ஆயிரந் திருகம் லைப மதிற்பெற வளித்த வள்ளல்
காய்தலில் கச்சுக் கென்னக் கைபபொருட் சிலவோ டுற்ற
தூயவர் பொருளை வாங்கித் தோற்றிநின் றிரந்தோர்க் கீந்த
வாய்மனப் பொருளாய் வந்த வாண்டகை யருளினனே. (க0)

---

8 முல்கிம், நற்கருமங்களுதிப்பாகிறது.

A இல்காம், உதிப்பைக்கொடுத்தல்

J அஞசிர், பூதியம்.

ஆதிதன் கருணை வள்ள லருமது நபிதம் பேரர்
நீதியிற் சிறந்தார் போற்று நிமலராம் சாது வியயி
ஞோதிய தரீக்கி னுற்ற வுத்தமர் குறைக ணீக்கிப்
பேதியாக் காக்கும் வல்ல பெரியவ னருளே வாழி. (கக)

தலைமையிற் சிறந்த செய்கு சீரியர் தாமும் வாழி
நிலைமையி னெம்ம னோர்க ணிலைத்திட விசுலாம் வாழி
புலமையிற் சிறந்தோர் போற்றும் புண்ணியர் சலவாத் தோதி
யுலைவிலா துள்ளம் பூத்த வுண்மையர் வாழி வாழி.

மனமதிற் கவலை நீக்கு மாண்பினர் புகழைப்பாடித்
தனதென வுவந்து கேட்போர் தழைத்திட நிதமும் வாழி
கனமுற மனனஞ் செய்து கவல்குநர் தாமும் வாழி
யினனபி சபாஅத் தீண்டி டேற்றமே தழைக்க ஆமீன். (கஙு)

மேதகை யமரர் நால்வர் விண்ணிழிந் தறிவு கேட்ப
வார்த்தை விளக்கம் போன்ற வறிவெலாம் விளக்கி வைத்த
தீதகல் பெம்மான் செய்யி தபுல்கசன் பொருட்டாச் செய்து
மாதரத் தளித்த பாவிக் கருள்செய்வா யாறகிமே. (கச)

நாயகர் மகத்துவப்படலம்




ஆகக்கூடிய படலம் 20-க்கு

கூடிய திருவிருத்தம், 464.

காப்பு - 1. ஆக - 465.





பிஸ்மில்லாஹி



# நவரத்தின புஞ்சம்.



## நபிநாயகம் அவர்கள்பேரிற் பதிகம்.

### காப்பு

வெண் சேந்துறை.

தற்பரன் வல்ல ஞாபக னிறையை
யிற்பெற வோதி யிறைஞ்சுது மற்றே.

கார்குடை நிழலிட்ட சுந்தர் பொற்று
ளோதலுற் றிறைஞ்சன் புவக்கு மனமே.

கட்டளைக் கலிப்பா.

முந்த வாதிமுன் னூலொளி வானவர் மூவுலகிற்குங் கார ணமானவர், தந்தைபாதந் தனிலுதன்மேயவர் தக்கமாநபிமா ருக்குநாயகர், சுந்த ரரப்துல் லாதவத் தூயவர் தோகையாமி னத்தீன்றருடாயகர், நந்து லாந்தட மக்க முதித்தவர் நம்மு டைநபீ நாதர் முகம்மதே. (க)

நேசமெங்குந் திருமறை தந்தவர் தீன்விளங்கச் செகதல
ம் வந்தவர், பூசலின்குபி ரோரை வதைத்தவர் புகலுயர்ஞானத்
தறிவை விதைத்தவர், வீசுசெங்கதிர்த் திங்கள் வகிர்ந்தவர் வி
ருந்துணைக் குறையாது பகிர்ந்தவர், நாசமுங்கு செறுநர்ச் சி
தைத்தவர் நம்முடைநபி நாதர் முகம்மதே. (௨)

காத மான்மதம் வீசிப மெய்யினர் கத்தனைத்தின மூந்
தொழுகையினர், சீதநீர்வெஞ் சுரத்தில் வருந்தினர் தீய காபி
ரறுங்கை பொருந்தினர், காது வெம்புலி யோடுரை யாடினர்
கருத ரும்வெற்றி வாகையுஞ் சூடினர், நாத னோடு நயந்துற
வாடினர் நம்முடை நபி நாதர் முகம்மதே. (௩)

ஆதியைத் தெரி வானறு சேறினர் ஆசுசுபிற வோடுரை
கூறினர், பாத சேவடி பூமி படாதவர் பாவயாவை யொர்போ
தும டாதவர், வேதமுற்றிக் கனிந்தசெவ் வாயினர் விரிநிலத்
துயி ருக்குயிராயினர், நாத வாரிக் கடலகம் போற்றினர் நம
முடை நபி நாதர் முகம்மதே. (௪)

அஞ்சு மாறமெங் கட்டு விதித்தவர் அரும் பொருட்பர
னென்றுந் துதித்தவர், மஞ்சு வெண்குடை நிழல் கவித்தவர்
மாசி லாமணி யாபுற்ப வித்தவர், மிஞ்சு வேறு மதத்தைத் தடு
த்தவர், வேடன் மான்பிணை யாகவிடுத்தவர், நஞ்சை நல்லமு
தாகப புசித்தவர் நம்முடை நபி நாதர் முகம்மதே. (௫)

தேக நீழ றெரித விலாதவர் தினமு நல்வழி பாடுறு மாத
வர், சோக மோடுரை பேசுநல் வாய்மையர் தோஷம் யாவுந்
தொடுத்த மெய்ப்பான்மையர், தோகைமாகதிஜாமகிழ் காத
லர் சூரவீர ரலிக்குயர் மாதுலர், நாகமேமு நடந்துசெல் கார
ணர் நம்முடை நபி நாதர்முகம்மதே. (௬)

ஆலமெங்கும் பொருள்பெற நின்றவர் அபுஜகின்முதலோ
ர்களை வென்றவர், மேலுயர்ந்த பொலம்பதிக் காட்சியர் மேதி
னிப்பொரு ளங்கையிற் காட்சியர், மாலிகந்தவர்க் கோரருள்
வீட்டினர் மாசுணத்தின் கடுவிட மீட்டினர், நாலுவேதப் பொ
ருண்முடிபானவர், நம்முடை நபி நாதர் முகம்மதே. (௭)

செம்பொன் மேனிற் சிறந்த புயத்தினர் திருவை வென்ற செழுங்கை நயத்தினர், உம்பரும்புக ழும்பொற் பதத்தினர் ஒன்றுமொப்புரை யாநல் விதத்தினர், சம்பிர மப்பொழின் மாமதி னத்தினர் தற்பரப் பொரு ளிற்கவ னத்தினர், நம்பினோர்க் கருள் செய்யுமனத்தினர் நம்முடை நபிநாதர் முகம்மதே. (அ)

ஆவி தோறும் விதந்தெழு சூட்சியர் அகம் புறம் பிறவும் பெறு மீட்சியர், பாவை யாய்த்தசையை வர வாக்கினர் பாந்தளோடும் பகர்ந்தநல் வாக்கினர், சாவி லானுக் குவந்தமெய்த் தூதுவர் சறகினுடபொரு ளாய்ந்தெமக் கோதுவர், நாவலோர் புகழ்தற்கரி தானவர் நம்முடை நபி நாதர் முகம்மதே. (௯)

வெற்றிசேரபூ பக்கர்மருகனார் வீராமு மறுக்குமருகனார், கற்ற நல்லுது மானுக்கு மாமனார் கன்னி யாசியத் தைப்புனை தாமனார், பற்றலாரும் பணிந்தசொன் மேதையார்பாவை பாத்திமத்தைத்தரு தாதையார், நற்றவர்க்கு நலந்தரு மோகையார் நம்முடை நபி நாதர் முகம்மதே. (௰)

நபிநாயகம் அவர்கள்பேரிற் பதிகம் முற்றிற்று.



## மேற்படி நாயகம்பேரில் நேரிசை வெண்பா.

அங்கா தனத்திருந் தாலநபி தம்மைமனத்
தங்கா தனத்திருத்தி யாய்ந்தக்காற்—கொங்கார்
குழலரம்பை யார்தோட் குலவியணைந் தேநா
மிளமையினோ டின்புற லாமே. (௧)

ஆரன்பர்க் காரணரா மாதிநபி யையமனத்தி
னாரம்பக் காரணரென் றுய்நினைத்தாற்—கோரம்பார்
கொஞ்சவினை யாவொழிந்த கொஞ்சநல மாமிகுந்த
வஞ்சமறவே விழுந்த வாம். (௨)

ஞான மணிவிளக்காய் ஞாலமெலா மீடேற்ற
மோன முடனுதித்த முன்னவரே—யீனமற
விவ்வுலகர் நும்வழியி னேறுது கீழுறுவ
ரெவ்வழியீ டேறுவர்க ளே. (௩)

கத்தூரி வாடை கமழுங் கதிர்மேனி
வித்துருமத் தாரைநிதம் வேண்டுவையேற்—கொத்தூரும்
பூங்குழலாய் பொன்னுலகம் போய்ப்புகுவை யன்றிமய
லீங்குழலா யுண்மையிதென் றெண். (ச)

தப்பிதமொன் றில்லாத் தயாளகுண மதனை
டொப்பிநடக்கும்மனத்தி னுண்மையெலாந்-துப்பிதழாய்
தோற்றிடு மன்னோர்வாக்காற் றொல்புவியோர்தா மதித்தங்
கேற்றிடுவாரென்றே நீயெண் (ரு)

வளஞ்செறியு மக்கநகர் வாழ்முகம்ம தாரை
யுளஞ்செறிய வோதி யுணர்ந்தக்காற்—களஞ்செறியும்
வஞ்சனை சூதெல்லாம் வழிபொருவிச் சஞ்சலமற்
றஞ்சுதலி லாவா றி. (சு)

## குறள் வெண்பா.

வான்மதியைத் தானழைத்த வள்ளலி றசூல்பதத்தை
நான்மதித்தே னென்னகத்து ணன்கு. (எ)

பாவலர்கள் போற்றும் பதியா முகம்மதுவை
நாவலரப் போற்றுதுமே நாம். (அ)

## இதுவும் மேற்படி நாயகம்பேரில்

### கட்டளைக்கலித்துறை

வான்றிகழும் புகழ் வாலறிவி ரெரி வன்சுரத்துக்
கான்றிகழ் கை விரலானுண்பவர்க்குக் கனசலத்தைத்
தேன்றிகழ் மக்க வராதிபரே முறை தேக்களித்திர்
தீன்றிகழ் நேர்வழி யானுய்யு மாறரு டேசிகரே. (க)

மெய்புகழாதிக் குறை நபிமார்களின் மேதகையீர்
உய்புகழாயிவண் வந்துதித்தீ ரெம ருய்தரவே
செய்புகழ் நாயக நும்பதந் தந்தென் சிறுமையறப்
பெய்புகழும்பெற வாதரிப்பீரிப் பெருநிலத்தே. (உ)

பேரறிவாய் நிறைந்தோ ரெழிலோ யுமைப் பேணிமறை
போரறியா தொரு வேடனீமானிலே யோதவைத்தீர்
சோரறிவாய்த் துன்புறு மானினைப் பிணைசொல்லி நின்றீ
ராரறிவாலுமை போதறியாதென்னை யாளுமினே. (௯)

முற்றிற்று.

இவை

## அறியவிதியான இருபத்தைந்து நபிமார்களின் நாமங்கள். கவி.

சீலபோத நாதமேவிச் சேருமா சகன்றெரீ இக்
காலமூன்று நிர்ணயக் கருத்தினேர் படுத்திய
வாலகூாய கிரணமேமதை வழியினுற் றகங்களித்
தோலவாருதிக்கணே ருவந்து தேர்ந்த வுண்மையர். (௧)

அண்ணலாத மரியவிதுரீ சாகுநாகு கூத்தொடு
நண்ணும் சாலி கிபுருகீம் நயன்கொள் லூத்தொ டிசுமாயீல்
கண்ணுமிசுஹாக் யகுகூ போடுகருணை யூசுப்ஐயூபு
அண்ணும் சுஐபு ஹாறான்மூசா அல் யசகு துல்கிபுலியே.

கருணை தாவூக் சுலையுமானற் கனதிபூண்ட யூனூசு
அருணை சகரிய்யா வெஹியா வானஈசா அகுமதே
வருணமென்னு மிருபத்தைந்து வரிசைநபிக ளறியவே
தருணவிதியெனறுணர்ந்து ஈமான் சங்கையோடுகொண்மினே.

### நபிகள்நாயகம் தலைமுறைநாமம். கவி.

அதுனான்முவத் நிஜாறு முளரி யரியவில்யாஸ் முத்ரிக்கா
துதி குசைமத்தொடு கிறை துலங்கு நுழரி மாலிக்கு
குதிசேர் பிஃறு காலிபோடு கருணை லுவையு கருபு வும்
வதியு முற்றத் தொடுகிலாபு வயங்கொள் குசையப்துல் முனைப்.

சீர்சேர் ஹாசிம் அப்துல்முத்தலிபு திகழுமப்துல் லாபெறுங்
கார்செறிந்த கையரான காத்திம்நபி முகம்மதே
யேர்செறிந்த தலைமுறைப்பே ரிருபத்தொன்று மியம்பினேன்
பார்செறிந்த நீதநாதர் பத்திகொள்ளுமுத்தியே. (௫)

முற்றிற்று.

இஃது,

பதுரிய்யின் சஹாபாக்கள் பேரிற் பாடியன

வெண்பா.

நன்றிபயக்கு நயம்பயக்கு நானிலத்திற்
றுன்றுவினை நீக்குந் துயரகற்று—மன்றல்கமழ்
நாயகரா நம்மிறசூ னன்பர்பது ரீன்நாம
மோய்தலிலா தோதியுணர்ந் தோர்க்கு. (க)

விருத்தம்.

ஆதிநாதனரு டோனமகு மூதராலநபி தம்மொடு
சோதிநேமமறை யோதுமவ்வுளி தொடர்ந்தமேதகை யணிந்து
நீதிமன்னரபூபக்கரும்புகழ் நிறுத்துமுமறுமுதுமானுமே [ளார்
காதுவேலரசர் மூடிக ளிடறுவயக் காவலா ரலியுல்லாவுமே.

சொன்னயத்திறைவர் சகுது வுங்கனதி சோர்வுறுதருள் சயீதுவு, மின்னிலந்துதி சுபைறும் வென்றிபுனை யேந்துசீருடைதல் ஹாவும்வெங், கன்மனத்தவர் கலங்குவாவு பரி காரணந்திகழும் ஆமிறும், பன்னயக்கொள மகிழ்ந்து வல்லமறை பண்பிஞேதுமிவ ரோடுமே. (உ)

மாமறைக்கணணி மாட்சியிற்சுனுவு மாறிடாதஒள புதவுசேய், பூமறைக்கனிகொள் காயெனத்திகழும் புண்யரப்துற்றகுமானொடு, மேமநேமமுறை யோய்விலாதபுக ழேந்தலன்றமுவர் நால்வருஞ், சேமநன்னபிசொற் சேரும்பதுறினமர் செய்யுமற்றவரைச் செப்புவாம் (ச)

வாவுவெம்பரியின் கருபுவருளியநல் வாகைபூணும் உபைதத்தொடு, காவல் சேரபியறுக்கமருளுநெறிகாரணிந்தகரஅறுக்சமு, நாவிஞதரின்எசீதுபெற்றதிரு நாதரானசுதர் அசுகதுந், தாவுகேதன ஹபீபு தந்துதவு சங்கை மைந்தரெனும் அனசுமே. (ரு)

கனதிபருவிய மஆூதிளம்புதல்வர் கதியின் வெம்பரிகொள் அனசுவு, மனதிஞெத்த விறல்ஹனசத்தோடுநய மல்குநீதர் ம வுலா றசூல், வனசமாவதன ரருளுமன்னிலே வயங்குவான்புகழ் குஜ்னசொடுங், தினகரன்வெளி படர்ந்துவந்தமுறை சேரலார்வ ரையி னேகவே (சு)

கவுலிமைந்தரெனும் அவுசியோடுமுயர் தாபித்தீன்றசுதர் கௌசுமே, யுவரிமறையுணரும் அவுசியருள்புதல்வ ரோங்கனே ர்யுப வியாசுவும், கவுசனத்துடை புகைறவுக்குரிய காரணத் துடையி யாசொடும், பவுரி சப்பரி புஜைரியருளியநல் பாங்கு மன்னிய புஜைரியும். (எ)

வேறு.

வஃகாத்திபுனுத குலபத்தும் வயங்கொள்வற்ருஹ் மகுறாறு
மெஃகாத்தீர ராம்அம்று மேவுமகனர் பசுபசத்தும்
பஃகாபிசு ..பினு பருஃ பகரும் சஃது வருள்பசீர்,
மஃகாக்கருணை றபாகருளு மைந்தர் புகழார் பிலாலன்றே (அ)

தமீமின்மவுலா கிருசவருஞ் சாற்றுந்தமீமி பனீஙனமி
தமீமி யிபுனி யுஆரவருஞ் சங்கைதாப்பித்திபு வக்குறம், அமீ
னென்றேத்துந் தாப்பித்தரு ளருமை மகவாந் .தகுலபத்து,
முமீனென்றுரைக்குங் காலிதருண் முழுமாமறைநேர் தாப்பி
துவே. (கூ)

தாப்பித்திபுனு கஸ்சானும் சங்கை யம்றுதரும் தாப்பித்,
ஆப்பித்தென்னும்தகுலபத்தும் அணிசேர்மகவாம்காத்திபுவும்,
கோப்பினுடைய தகுலபத்தும் குணஞ்சேர்மகவாங் கனமத்து
வும், யாப்பி னணிசேர் அம்றுதவு தகவின் மகவாம் தகுலப
த்தே. (கo)

நாட்டும்புகழ்சேர் அம்ரிபெறு நயன்கொள்புதல்வ ராம்து
கபி, சூட்டுங்கருணை அப்துல்லா தோன்றல்ஜாபிறிபுனிறப்பாப்,
காட்டும் ஜாபிறப்துல்லா கணிசேர்நயத்தா ராம்அம்றுந், தோ
ட்டாரணியும்சகுலியரு டோன்றல் ஜெப்பாற் மாதவரே. (கக)

சபதி யதீகின் சுபைரியியா சினிபஹம்ஸா முத்தலிபு
விபுதர்காரிது புனனசு வியங்கொள் காரீத்திபுன வுசு
பபதியவுசி ருபிகுவும் பயன்கொள்காரீத் காத்திபுவு
நபுதிர் காரித்அபீகசுமா நலன்சேர் காரித்அபீகசுமா. (கஉ)

அவுசிமகாது காரித்தரு ளரிய கசுமா காரித்துவும்
தவுசிகாரீ தறுபசத்துந் தகைசேர் காரீத் தறுபசத்து
முவரிகாரி திபுனுகைசு மோங்கு காரிதிபுனு கைசும்
பவுரிபரியார்சுருக்கத்தருள் பயன்கொள்நகுமான் காரிதுவே.

காரித்துபுனு நகுமானும் காத்திபுபுனு பல்தஅத்தும்
பாரின் பலன்சேர் அம்றுதவும் பண்பார்காத்திபு சூப்பாபும்
மாரிஹபீபினசு வதுவுமான கருமாகுங் குறைத்து
காரார் காரி தருள்குசையு கனஞ்சேர் ஹம்சத் ஹிம்யரன்றே.

காரிதிபுனு செய்தென்போர் காலிதிபுனு புகைறவரும்
பாரின் கைசு பெறுகாலித் பகரும் கப்பா பிபுனறத்து
மாரிகப்பாப் உத்து பத்துவுமருவும் குபைபி மகன் ஹிசாபி
வாரிகிதாசி கதாத்ததுவும் வயங்கொள்குருசி சிம்மத்துவே.

நெரிவாள் குறைமி பாநிக்கிய்யு நிவரும் கல்லாத் ருபியிய்யு
மரிவாள் கல்லாத்திபுனு சுவைத் தானகல்லா திபுனம்ரி
யுரிவாள் கல்லாத் திபுன்கைசு மோங்குகைசு பெறுகலீதி.
பரிவாளதீயு வருள் கலீபத் பாங்காம் குனைசி குதாபத்துவே.

கவ்வாத்திபுனு சுபைரி றளீஇ கலங்கொண் கவுலி யபீகவுலி
மவ்வா தகுவா னுபைதத்தொடு மயங்கா சிமா ஊப்தின்அம்ரி
யொவ்வாக்காபிர்படைவெல்லு மொளிவாள் ருசிதுமுவல்லாவுந்
தெவ்வார்மயங்கும் வாவுபரி திடனுர் றபீகு காரிதுவே. (கஎ)

ருபிகிபுனு உம்சதத்து ருபிகிபுனு மாலிக்கொடு
ருபிகிபுனு முவல்லாவும் ருபிகிபுனு யெஸீதவரும்
ருபிகருளும் றிபுவிய்யும் ருபிகிபுனு இயாசவரும்
ருபிறபீயத்தபு நக்தம் றத்தில் றுகைலத் தகுலபத்தே. (கஅ)

சீராரிபா அத் ரிபாஅத்வுந் திகழும்ரிபா அத் ரிபாஅத்வும், நேரார்சியாது சியாது சியாத் நிகழுஞ் சைய்து சைய்தவருங், காரார் கத்தாபருள் சைதும் கருணை முசெய்யின் மகன்சைது, பாராள் முவல்லா மகன்சைதும் பாங்காம் வதியத் தருள் செய்மே. (கசு)

சாலிம் மௌலா அபீகுதைபத் சாலிம் உமைறு சாயிப் உதுமான், நாலிம்சுருக்கத் சுருக்கத்துவு நயன்சேர் சகுதின் சகுதும், பாலின சைதம தருள் சகுதும் பாங்காம் நாத ரவர்சகிதாம், காலின் முனைகொள் சகுத்சகுது கலினப்பரியின்சகுத் சகுதே. (உ0)

சீரார் சகுலி யருள் சகுதும் செறியு முபாதத் மகன் சகுதுங், காரார் உபைது பெறுஞ் சகுதுங் கருணை யுதுமான் பெறுஞ் சகுது, நேரார் மகாது மகன்சகுது நேரும் சுபியா னிபுன்பிசுரி, தாரா புயத்து சல்மாவுஞ் சங்கை சல்மா சல்மாவும். (உக)

சுலைமு சிமாக்கு சினானி சினன் சொல்லும் சகுலு சகுல் சகுலு, மலையா கைசு மகன் சகுலு மணியாம் சகுலு சுகைலோடு, கலைசேர் சவாது சவாதவருங் காணுங்கறுமலத்துஸ்சுஜாகு, நிலைசேர் சரீக்கு சரீகின் சைபி நிகழ்த்துஞ் சுகைபு சுபுவானே.

கருணைலஸ்காக்குலஸ்காக்கு காட்டும் லம்றத்துப் பைலு, மருண துபைலி துபைலிதுலைப் பாகும் லகீரி யாசிமுவுங், தருவா மாசிம்புனு யதீத் தணியா மாசிம் உக்கைறு, பரியார் கைசு மகனுசு பாங்காம் ஆக்கி லவர் சகிதே. (உங)

ஆமிறிபுனு உமையித்துவு மான ஆமிறிபுன் பக்ரி
ஆமிறிபுனு சகுதவரு மண்ணல் ஆமிர் றபீஆவும்
ஆமிறிபுனு சல்மாவும் ஆமிறிபுனு புகைறுவும்
ஆமிறிபுனு மகுலத்துவும் ஆமிறிபுனு யெசீதுவுமே. (உச)

கனதியாயித் தபாஅத்துவுங்காட்டுமுப்பாத் உபாதாவும்
சினவு தகுலப் அப்துல்லா செம்மல் சுஜபரு ளபதுல்லா
வனச சருசரு ளப்துல்லா வாகைசத்தரு ளப்துல்லா
முனைசெய் குமையரு ளப்துல்லா மோனறபீசுரு ளப்துல்லா.

வண்மை றபாஅத் தப்துல்லா வயங்கொள் செய்தரு ளப்துல்லா, கண்மை சுருக்கத் தப்துல்லா கருணை சல்மத் தப்துல்லா, நுண்மை சகுலரு ளப்துல்லா நுதிவாள் சுகைகரு ளப்துல்லா, உண்மை சரீக்கரு ளப்துல்லா ஒதுந்தாரீக் கப்துல்லா.

எண்ணும் ஆமிறப்துல்லா இலங்குமுயையரு ளப்துல்லா
கண்ணுமுனுபரு ளப்துல்லா கனதி உறுபத் தப்துல்லா
பண்ணு ருமறரு ளப்துல்லா பலன்சே ருமறரு ளப்துல்லா
தண்ணார் சலீத்தி யுறுகைசு தகைசேர் சுலைமு காரிதன்றே.

அருணகைசு அப்துல்லா அவர்தம் மகவாங் காரிதுவுங்
கருணைநாத ரப்துல்லா கதிசேர்கைசு சைபிய்யுந்
தருநற்ககுபரு ளப்துல்லா சங்கை மகுறமத் தப்துல்லா
பரியார் மஸ்ஊ தப்துல்லா பாங்கா மழுயூனப்துல்லா. (உஅ)

அண்ணல் சலீத்து சுலைமு சுலைம் அருமைகைசு மகன் சுலைமு
அண்ணு நுகுமான் அப்துல்லா அப்துறப்பி இபுனு ஹக்கி
வண்ணசப்ரி யப்துற்றகுமான் மருவும்கசுகா சப்துல்லா
எண்ணுமவுசி ஆமிறுவு மேந்தலுபைதி யவுசுவுமே. (உகூ)

கருதுமுபைது உபைது உபைத் கருணைபுபைத் காரிது சகிதே
யருமை உத்துபா உத்துபாவோ டானஉத்துபத்உபாத்தாவும்
தருநல் உதுமான் அசுவானும் சங்கை அதிய்யி இசுமத்துவும்
மருவும் இசுமத் உசைமத்துவு மன்னுமதியத் உக்குபாவே. ()

செய்ய உக்குபா உக்குபாவுஞ் சேரும்உக்குபா உக்காசத்
துய்யும் உமாறத் உமாறத்துவு மோங்கும் உமாறத் அம்றேடு
மையா அம்றும் அம்றுநய வணிகொ ளம்றும் அம்றுதிரு
மெய்யர் சுருக்கத் தருளம்று மேவும் அம்று அம்ெருடுமே. ()

கலைசேர்கைசு மகன்அம்று கருணை மஹூது மகன்அம்று
முலைவாளுநைமறு உமைறொடுமே யோங்கும்உமைறுஉமைறுதிரு
மலையாம் உமறு அபீவக்கா சானநாத ரவர்சகீதாய்
நிலைசேரிறைவன் ஹறனுறத்தி னிறவும் வாழ்க்கை யெய்தினரே

மகிமைநாதர் பாக்கிரியு மதியாம் பறுவகூ கதாதாவும்
சுகிதகுதாமா குதாபத்துவுஞ் சூரர்கைசு கைசவரு
மகலாகைசுகரு பிறொடு மான கருபு வுபைது றளீ
தகுதி மாலிக்கு மாலிக்குவுந் தகைசேர் மாலிக்கு மாலிக்குவே.

வீரர்மாலிக்கு மாலிக்குவும் விளங்கு மாலிக்கு மாலிக்குவுஞ்
சூரர் முபச்சிரி முசத்திரியுஞ் சுரிகை முகர்ரிசி முகுரிசியும்
பாராளமுகம்மதுமசுலமத்தும் பாங்காமித்துலாஸ் மிறத்ததீயு
நேரார்மிஸ்தகி மஸ்வூது நிகழ்த்து மஸ்வூதுமஸ்வூதும். (௩௪)

அணியுமஸ்வூது மஸ்வூது மாக்க மசுவபி மஆத்ஜபனும்
பணியா மஆது மஆதவரும் பாங்கா மஆது மஆத்தொடுமே
கணியா மகுபறு மகுபறுவுங் காட்டுமுவத்தபி யத்தபியுந்
தணுவாமுவத்தபி மகு பலியுந் தாங்கு மகுமரி மகுனியுமே.

வயவர்முஅவ்வதி முஅவ்விதியு மதிசேர் மிகுதார் முலைலிபுமே
நயன்கொள் முன்திர் முன்திறுவு நாட்டுமுன்தி ரிவர்சகீதே
பயன்கொள்நபரி நுகுமானும் பதியா நுகுமா னுகுமானும்
கயன்கொள் நுகுமா னுகுமானுங் கருணை நுகுமானுகுமானே.

தணுவார் நுகுமா னப்வுலியுந் தன்மைவாக்கிது வக்தத்துவும்
கணியார் வதியத் தும்வஹபுங் கரண வஹபும் காணிபிய்யும்
மணியாம் குபைலி கிலாபவரு மானவெசீது யசீதவருந்
துணிவாம்பரியார் யசீதவருந் தோற்றும்வாகை யெசீதன்றே.

அன்ன யசீது யசீதவரு மணியாமகுவறு யூட்ஐபூம்
மன்னும் கப்பத்து மபிகபீபு மருவும் குதைபத் அபுல்ஹசனுந்
துன்னும்கன்னத்து காரிசத்துந் துலங்கு குசைமத்துகல்லாதும்
பன்னும்தாவூது சானத்துவும் பயன்கொள்சைறத்துசல்மாவே.

கருணை சலீத்து சினான் செய்கின் காட்டுஞ் சிறமத்துலையாஜ்ஜி
யருணதல்கா அபியகிலு மானகதாத்தா அபீகு றைசி
தருநல் ஹபுசத்து லுபானத்துவுந் தகுதிமகுசிய் மிறத்ததியும்
வருநல் மஸ்ஊது அபில்லைகதம் வலிமீசேர் யஷ்ஷர் முலைலன்றே

சவறத்திபுனு பாத்திக்குவுஞ் சாற்றுமின்ன தவத்தருடன்
புவனம்போற்றும் புனிதர்களும் பொங்குஞ் சிற்ற மீக்கொண்டு
மவசமுற்ற பகைவருயி ரழிய வனந்தன் படிகுழியத்
துவசஞ் செறிந்த துன்னார்மெய்ச் சோரிசொரியப்பொருனரே.

வேறு.

வண்டனபுஜகில் துன்று பரியுடன் வந்துகூடு நரராயிரர் விண்டமாதவர் முந்நூற்றி யொருபது மேலுமூன்றென விளம்பினர், மண்டலம் புகழ்செய் மக்கமுள்ளவர்கள் மருவுமொன்பஃதி னால்வரே, யண்டுமற்றவ ரன்சாரி மார்களென ஆய்ந்தநாலின ரறைந்தனர். (சக)

மகுடவர்த்தனர் புவிபடைத்தனர் மலிசிங்காசன ராதியர்
பகுதிமன்னிய விருதினத்தினர் பரிகள் யானை யிரதத்தினர்
நகுபடைக்கையர் திணிபுயத்தினர் நனிகொடாள்வலியுடையவர்
பகைடை மெய்ப்பொடு படர்தலுற்றனர் பகைவர் பதரினின் மன்னியே. (சஉ)

விண்டலத்துமுக டதிர்தரப் பறைகொள் வேகவெம்பரி கடாவியே, யண்டரும் படைகை கொண்டடர்ந்துபொரு கின்றபோது ஷகிதானவர், மண்டலத்தினுயர் மக்கத்தாரறுவர் மாமதீனவர்க ளெண்மராய், கண்டகண்டதிசை சென்றுசென்று பொருகருதலாருயிரை மாய்த்தனர். (சங)

துங்கமேன்மைநபி யங்கைமண்கொடு துளங்க வோர்பிடி யெறிந்தனர், வங்கமே குகையி னுருகுமாறென வயங்கொள் சேனைபி னிடைந்துபுன், பங்கமேவுசண வயவர்மாண்டனர் பருந்து கூளி நரி நாயுணச், சிங்கமேயவர் செறிந்தடர்ந்தவினை செப்பலாங்கொலரி தாயதே. (சச)

னாவுமாவல னபூஜகின்னுயிரை வவ்விஞ ரிபுனு மஸ்வூதுந்
தாவுசேதனை வொலீது மாளநனி தாக்கிஞ ரலியுல்லாவுமே
பாவிபென்னுமுமரூவொ டுத்துபகது பகையன்சைபத் துமரூவு
மே, யாவலோடுபொரு தாவிமாய்ந்தனர்க ளரியமாதவர்கைவா
ளினல் (சரு)

பம்பைதூந்துமி தடாரி யோதையொடு பகைஞர்மெய்க்கு
றைக ளாடவே, கமபிதத்தினைமர் நபிக ளயகர்தங் கனதிபூ
ண்டவசு காபுமார், தும்மையம்புயனி லுழினை மாற்றினர் துல
ங்குவாகைபணி மாடசியால், பம்பு வென்றியொடு நாதனல்லு
தவி படருமாறுவெளி யேறினர். (சசு)

வடவையக்கினியொ டெதிர்கிழக்கினிடை வந்தவக்கினி
தணந்தபோற், றடவரைப்புய முகாஜிரீன்களொடுந் தக்கவாய்
மைய ரன்சாருெடு, மடபனபுஜசகிலு மடையலார்களும் வலிந்
து பூசலிட நாசமாய்ப், படியி னோர்தினமு நகையினே மொழி
யும் படிகுறைந்தவர் பறந்தனர். (சஎ)

வேறு

உலகினிலை யில்வாழ்க்கை நெகிழ்த்தொருவ னுறுதினிலை
யோருஞ்சிந்தை, யுலையினெடு வாட்படைகொண் டுயிரையொ
ரு பொருட்டாக்காச் சுகதாவென்னு, மலையினுயர் மாண்புடை
ய பதுரிய்யீன் றிருப்புகழை வகுத்துக்கூறின், அலையினெழுந்
துன்பமிடை யடராம லகன்றிடுமிவ்வகிலமீதே. (சஅ)

பூவகத்தின் மறைவழியி னபிநயினர் பொரும்படைகொ
ண் டடர்ந்தபூச, ருவகத்திற் றழீஇய நிலைத்தகுதியுடை மு
ஹாஜிரீ னன்சாறென்னுங், கோவகத்திற் ஜெயவாகை பொரு
துபுனை பதுரீன்கள் கொண்டநாமம், பாவகத்தின் பயன்பெற
நன்மொழித்திரளாப் பாடினனுட் பரிவுகூர்ந்தே. (சகூ)

முற்றிற்று.



# அறிவிப்பு.

இகுவான்களே!

நமது நாயகம் முகம்மதுநபி சல்லல்லாகு அலைகிவசல்லமவர்கள் திருமருங்கெய்தி அபூஜகில் முதலாகிய துஷ்ட காபிரீன்களை "பதுர்" என்னும் மலையின்கண்ணெதிர்த்து நாசப்படுத்தி வெற்றிமாலை பூண்பானெழுந்தருளிய முஹாஜிரீன்கள் அன்சாரீன்கள் என்றுசொல்லப்பட்ட திருநாயகமார்களாகிய சஹாபாக்களின் அரிய பெரிய நாமங்களைச் செந்தமிழ்ப் பாவினமாக விச்சிறிய னியற்றியுள்ளேன்.

ஷெ நாயகமார்களாகிய "பதுரிய்யீன்" களின் திருநாமங்களைப் படித்து வருவதிலும் எழுதிவைத்திருப்பதிலு மனேகானேகபாயிதாக்க ளிருக்கின்றனவென உலமாக்கள் கூறுகின்றார்கள்.

இன்னும் அவுலியாக்களிலனேகர் அப்பேர் அந்நாமம் ஓதுவதுகொண்டு ஒலித்தனங் கிடைக்கப் பெற்றார்கள். மட்டிலாத வியாதியஸ்தர்களும் அந்நாமத்தின் பொருட்டால் சுகஸ்திதியிலானார்கள்.

இன்னும் அந்நாமங்களை வேண்டுமான கருமத்தின் நாட்டத்தைக்குறித்து ஓதிவந்தாலும், எழுதிவைத்திருந்தாலும் அந்நாட்டத்தை அல்லாகுத்தஆலா நிறைவேற்றி வைக்கின்றான் நோயாளர்களின் சிரசில் அந்நாமங்களையோதி யூதினால் எளிதில் அந்நோயாளர்கள் சுவாத்தியமடைகின்றார்கள். அன்றி அஜல்முடுகினும் லேசுகிடைக்கும்.

இனி தூஆ கேட்கும்போது அந்நாமங்களை போதினால் சங்கமின்றி ஷ்டூலாகும். அல்லாகுத்த ஆலாவுடைய றகுதூம், பறக்கத்தும் பிழைபொறுத்தலும், அவனதுபொருத்தமும அந்நாமஙகளை ஓதுபவர்களைச்சூழ்ந்துகொள்ளும் சபரானிகள் அந்நாமங்களை ஓதிப புறப்படடாலும் அல்லது எழுதி சரக்குச் சாமான்களோடு வைத்துக்கொண்டாலும் திருட்டுமுதலான தீங்குகள் வராமலும் காக்கபபடுவார்கள் வீடுகளில் எழுதிவையபபடுகொண்டும் கள்வர் அக்கினிமுதலிய தீங்குகளும் அணுகமாடடா எழுதி வைக்கப்படட வீட்டில் திருடர்கள்வந்தால் "பதுரிய்யீன்" களின் படையாயுத ஆரம்பங்கேட்கப்படடவர்களாக விரண்டோடுவார்கள்.

இன்னும கடலில் கப்பலில் ஓதிக்கொண்டாலும் அபாயங்களணுகாது காக்கபபடுவார்கள். இன்னும் உயிருக்கும் பொருளுக்கும் இந்நாமங்கள் காவலாகவிருக்கும்.

இன்னும அந்நாமங்களை ஓதுபவர்களுக்கும் எழுதிக்கொள்பவர்களுக்கும் பலாய், முசீபத்து, நோய், நோம்பலம் அணுகாமலிருப்பதுடனே அல்லாகுத்த ஆலாவுடைய திருவுளப்பொருத்தமுமுண்டாகும். இன்னும் எண்ணிறந்தபிரயோசனங்களுமிருக்கின்றன அவற்றைப் பெருநூல்களில் காண்க



அல்குத் புற்றப்பானிய்யி, வல்கௌதுஸ் ஸமாதானிய்யி,
முகியித்தீன் அப்துல்காதிறுல் ஜைலானிய்யி நாயகமவர்கள் பேரின்

# முனாஜாத்து

## காப்பு.

### வெண்பா

முத்திதரு ஞான முகியித்தீ னாண்டகைமேல்
நகதுமுனா ஜாத்து நவிற்றற்குத்—தத்துவத்தி
னாக்குமொரு சொற்பயனா லாலமெல் லாம்படைத்துக்
காக்குமொரு மெய்ப்பொருளே காப்பு

### இன்னிசை

பொன்மலிந்த பூவிற் புகழ்மலிந்த காரணனா
முன்மலிந்து பின்னு முடிவிலாப் பூரணனாத்
தென்மலிந்து காணாத் திகழ்ந்தோன் றிருவருளிற்
கொன்மலிந்து தோன்றுங் குதுபுமுகி யித்தீனே (௧)

ஆரணத்தி னுட்பொருளா மாலநபி தம்மகளார்
பூரணத்தி ருமகவின் பொற்பார் மரபுதித்து
வாரணத்தின் வையம் வழுத்தவடங் காதியற்றுங்
காரணத்தி னாயகமே கௌதுமுகி யித்தீனே (௨)

வணமிகுத்த தாய்வயிற்றுள் வான்மறைமுப் பானியனு
மணமிகுத்து ணார்ந்துமொரு வல்லோன ருள்புனைந்தும்
பணமிகுத்த ரவ்வெடுத்த பாரினொலி மார்க்கரசாய்க்
குணமிகுத்து வந்துதித்த கோஜாமுகி யித்தீனே. (௩)

கோட்படுவி னைப்பவங்கள் கொட்பறவொ துக்கிவெமை
யாட்படுத்த வந்தபெரு மற்புதத்தா னீர்தாமே
னாட்படுமுக் காலமெலா நண்ணுமொலி மாரெழிலின்
றேட்படும லர்ப்பதத்தின் றேன்றன்முகி யித்தீனே. (௪)

வானவர்க்கும் பல்ல வகைவகைய ஜின்களுக்குந்
தீனவர்க்கு மாகவொரு செய்கெனச்செ சுத்தோங்கித்
தானவற்குத் தோழருமிழ் தண்மதுவுண் டண்மியபன்
பானவர்க் கறிவுணர்த்தும் வண்மைமுகி யித்தீனே. (ரு)

சித்தத் தெளிவுஞ் செயனலனு நன்றாகக்
கத்த னுணர்வுங் கனத்தபவ நீங்குதலும்
பத்தி நிலையும் பரிபூர ணத்தறிவு
முத்தி நெறியு முயக்குமுகி யித்தீனே. (சா)

வன்மத் திறனும் வழிவினைப் பிறழ்வானுங்
கன்மத் திறனுங் கடுங்கொழிற் குணத்தானுஞ்
சென்மத் தினூழ்வினையிற் சேர்ந்து புறந்தோன்று
முன்மத் தநோயெனைவிட் டோட்டுமுகி யித்தீனே. (எ)

முன்னகம் பராவி வருத்துகின்ற முப்பிணியா
லென்னக மெலிந்துடற்று தேகவரந் தாருமையா
பொன்னகக் கடமிவர்ந்து போந்துகள மாட்டுநெடும்
பன்னகத்தொ டோதியசௌ பாக்யமுகி யித்தீனே. (அ)

மைந்தனென்று வேண்டிவந்த வந்தித னக்கிரங்கி
ஐந்திரு மகவளித்த வாண்டகையு நீர்தாமே
நொந்துடற் பிணியா னெசிந்திடையும் பாவியென்முன்
வந்தருட்க ணோக்கிடுவீர் வள்ளன்முகி யித்தீனே. (கூ)

சுந்தரச்சி றாமிதனைத் தூக்குமய லைத்தடிந்து
தந்தைக ரத்தழைத்துத் தந்தகுரு நீர்தாமே
பந்தமுறு நோயதனாற் பாதிக்கப்ப டாதிருக்கச்
சந்ததமுந் தாட்டுணையைத் தாருமுகி யித்தீனே. (க0)

உப்புவரி யாழ்ந்தோ னொருபானீ ராண்டதற்பின்
கப்பலொடு வரச்செய் காரணக்குரு நீரே
யெப்பவமு மெப்பிணியு மெப்பிழையு மெப்பழுது
மெப்பொழு துஞ்சாரா திரங்குமுகி யித்தீனே. (கக)

பொய்ச்சூதும் வஞ்சகமும் பொன்றும் பொறுமைகளுங்
கைச்சூதுங் காமியமுங் காணு கற்றுமையா
மைச்சூதெ திந்ததவ வள்ளல்செய்கு ஹம்மாதின்
கைச்சூகை மாற்றுமப்துல் காதிர்முகி யித்தீனே. (கஉ)

தென்றுடி பற்றியின்ன செய்கினுக் கிரங்குகெனச்
சென்றுடு கன்பலியின் றேற்றநெறி போற்றுவித்தீர்
பொன்றுடி லன்பாற் பொருந்துறவெற் காநாளே
மன்றுடு வீரொலிகண் மன்னர்முகி யித்தீனே. (கங)

கொண்டாட்டஞ் செய்தெங் குருவெனவே தேடிவந்து
தொண்டாட்டஞ் செய்து தொடர்ந்தே னெக்காலுமையா
திண்டாட்ட மின்றியுங்கள் சீரடியி ரண்டுமென்றுங்
கண்டாட்டங் கொள்ளவென்முன் காட்டுமுகி யித்தீனே. (கச)

பொய்யெடுத்த பூவுலகிற் போந்துபவ மேசுமந்து
மெய்யெடுத்த பாவியிறை மெய்யறியா துய்குவனோ
மையெடுத்த தீமையொடு வந்தமய லேப்புடைத்த
கையெடுத்துக் காருமெங்கள் கவுதுமுகி யித்தீனே. (கரு)

தொல்லுலகின் முன்னெடுபின் னுந்தொடர்பிற் றேன்றிநயன்
சொல்லுமொலி மார்கட்கெல்லாம் சுல்த்தானு வந்துதித்து
நல்லநெறி யொன்றருளி நாடினரைக் கைதூக்கி
வெல்லும்பத மேற்றுவிக்கும் வேந்தர்முகி யித்தீனே. (கசு)

சோதனையின் வந்தவிரு தொல்லறிஞர் மாய்ந்துபொன்னூர்
போதனைய வாயனின்று போதாதகற் றுவித்து
நாதனுரை யாலவர்க ணந்திடத் துயிர்த்துமது
பாதமுணர் வானுணர்த்தும் பாக்கியமுகி யித்தீனே. (கஎ)

நுண்ணறிவின் வெல்லவந்த நூறுபுக்க ஹாக்களுணர்
கண்ணறிவின் மாய்த்துமதி காட்டிவிடை யூட்டிவைத்த
வண்ணறிமெய்ஞ் ஞான வரோதையரே பாவியெற்கு
மெண்ணறிவு றுத்துமென்று மேந்தன்முகி யித்தீனே. (கஅ)

பொற்கலைவாங் கன்ன பொறாமையினான் மன்னன்விட்ட
கற்கியொடு கோமகனுங் காலாட் களும்வெளிக்கண்
ணிற்க வுறுத்துநெறி நீதாற்பு தாவடிமை
சொற்கிரங் கியாளுநிதந் தோன்றன்முகி யித்தீனே. (௧௯)

பொற்பதம் புயஞ்சுமக்கப் போதேனென் றோதினர்தம்
மற்புயத் தரிப்பறழ்க்கால் வைகுமென வாய்மலர்ந்த
வற்புதத் தர்நீதாமென் றாலமெல்லா மோலமிடு
நற்பதத் திறையகமா நாதர்முகி யித்தீனே. (௨௰)

மருள்பொருந்தும் பாவியென்றன் மாயவினை நீங்குமென
அருள்பொருந்தும் பாதநித மாயிரந்த ரம்பணிந்தேன்
றெருள்பொருந்து முங்கடிருச் சித்தத்தி ரங்கிவல்லோன்
பொருள்பொருந்து மேல்பாற் புகுத்துமுகி யித்தீனே. (௨௧)

மாயைமன விச்சை மதிநயம யக்கியென்றன்
காயமதைத் தீயவழிக் கண்ணிக்குட்சிட் டாக்கிவைத்த
சாயையகன் மாறுவருஞ் சாங்கால மாமுனமென்
றாயையொத் திரங்கியன்பு தாருமுகி யித்தீனே. (௨௨)

அல்லா திருவுளத்தா லாலநபி யின்பொருட்டாற்
சொல்லாற் றுணிபாற் றொழிலாற் றொடர்ந்துவரும்
பொல்லாப் பவவினைய போக்கிடப்பட் டென்முடிவு
நல்லாகக் கொள்ளவரு ணல்குமுகி யித்தீனே. (௨௩)

எல்லா வலிமைபெறு மெம்மிறைநீர் கௌதெனவே
சொல்லின் பெருமையிந்தத் தொல்புவியெல் லாம்பரவ
நல்ல கியாமமட்டு நாளு வுயிர்களுக்கும்
வெல்லுமிரட் சிப்பருளும் வேந்தர்முகி யித்தீனே. (௨௪)

ஆரறிகு வார்நும் மகுவாலின் சிற்றதனைப்
பாருலகோர் முற்றும் பயன்பெறுதற் கவ்வழியே
யார்புவியின் மன்றாட்டு மாகிறத்து மன்றாட்டுஞ்
சீர்பெறவெங் கட்கருளும் செய்குமுகி யித்தீனே. (௨௫)

நன்னபிமா ரெல்லா நபுசெனச்சொ லந்நாளி
னெந்நபியும் மத்தென் றெடுக்கும்ப தாகையின்கீழ்
மன்னவுயர்த் தென்கொடிக்கீழ் வைத்தெமரைக் காப்பனெனச்
சொன்னபடி யாளுமுண்மைத் தோன்றன்முகி யித்தீனே. ()

வானவரும் ஜின்மனுவும் வாக்குனாயா நம்புகழை
நானெவனென் ரோதுகிற்பே னுடமௌ வைவகுத்த
யீனமறுஞ் சொற்கிரங்கி யேழையெனைக் கைதூக்கிக்
கோனவன் வழிபுகுத்துங் குத்புமுகி யித்தீனே. (உஎ)

முற்றிற்று.

---

குத்புல் அக்குபர் செய்யிது அபுல் ஹசன் அலியுஷ்
சாதுலி நாயக மவர்கள்பேரில்

## முனாஜாத்து.



காப்பு. வெண்பா.

மாவளஞ்சே ரும்குமைதர் மன்னராம் சாதுலிமேற்
பாவளர்மு னாஜாத்துப் பாடவே—பூவளரு
மாரணனே பூரணனே யாதிமுடி வில்லானே
காரணனே நின்னருளே காப்பு.

இன்னிசை.

பூவுலகும் வானும் பொலிந்துள்ள வெவ்வுயிர்க்குந்
தாவுலவி நின்ற தனியாம் பரம்பொருளின்
கோவுலவி யெங்குங் குணலையமாய்க் குத்பாகி
நாவுலவுஞ் சீர்த்தியுறு நாதரிமாம் சாதுலியே. (க)

வஞ்சகமுஞ் சூதும் வழிகேடுங் கொண்டுழலுந்
சஞ்சலமு மிஞ்சித் தவிக்குமிந்தப் பாவிக்கருட்
செஞ்சரண கஞ்சமலர்ச் சேவடிதந் தாளுமையா
மிஞ்சுபுகழ் சேர்குமைதர் மேவுமிமாம் சாதுலியே. (உ)

அங்கநி லம்வேணி யாக்கமுதன் மஞ்ஞையதாய்ப்
பங்கமக றுங்கநபி பௌத்திரரு நீரல்லவோ
வங்கைநெ லிக்கனிபோன் முலமெலா நோக்குநிலை
மங்காத் திருமணியே மன்னரிமாம் சாதுலியே. (௩)

நாதனரு ளோங்குமெங்க ணுமநிதி யேமதியே
காதனபி தம்மகளார் கண்மகளி னுண்மரபீர்
ஏதமுறுங் கள்வர்கச்சுக் கேகும்வ ழிமறிப்பப்
போதமுற வேயரண்செய் புண்யரிமாம் சாதுலியே. (௪)

நோக்குமொரு பார்வையினு னுந்தரீக் குள்ளோரைக்
காக்குஞ்சொற்கஞ் சேர்க்கவந்த கர்த்தாவு நீரல்லவோ
வாக்குரைசெய் தும்மைவெல்ல வந்தவொலி மாரையெலாந்
தாக்குநெறி யூக்கிவைத்த சங்கையிமாம் சாதுலியே. (௫)

வாதாடுங் கள்ளமன மஞ்சுகுழல் வஞ்சியரின்
மீதாடி நெஞ்சுழைந்து வெம்பிமெலிந் தாடுவனே
தாதாடி வண்டுடைத்துச் சிந்துஞ்சா றுண்டுமந்தி
கோதாடுஞ் சோலை குமைதரிமாம் சாதுலியே. (௬)

நத்தூருங் கூவலிடை நாரம்வறந் தற்றதுகண்
டத்துமிழ வின்புனல்வந் தாருமுணச் செய்தோரே
கத்தூரி மெய்ந்நபிக வன்றிடத்தி ருவெழிலி
யத்தூரி நன்னிழல்செய் யண்ணலிமாம் சாதுலியே. (௭)

நற்கரு மம்பயக்க நாடியொன்றுஞ் செய்திலவா
றற்கரு மங்கொண்ட துரோகியென்று தள்ளாதீர்
முற்கரும் பசிதீர முறையறிந்தவ் வூரார்க்கு
வற்கப்பொன் சேய்ப்பின் வழங்குமிமாம் சாதுலியே (௮)

ஆராரி ருந்துமெனை யாதரிப்பர் காண்கிலரா
னீராதரித்துண் ணினைந்தாள்வ தெந்நாளோ
பேராத ரத்தொலிமார் பெட்புறாஉ நன்னுதன்மே
லாராத ரப்பதத்தி னன்னாளிமாம் சாதுலியே. (கூ)

முற்றும் வழிதுறந்த முன்னோர்க டங்களின்மு
னொற்றினின்றும் பாராத வேழையெனைக் காருமையா
பற்றினின்று குங்குமலை மீதுபர னைவணங்கி
நற்றவநி றைந்துவந்த நாதரிமாம் சாதுலியே. (ய)

வென்றியுறு நாயகமே வேதாந்தத் துட்பொருளே
யென்றுமுணர்ந் தோய்வந் தெனையாள்வ தெந்நாளோ
நன்றிநபி யென்றும்வியி நண்ணுவி டின்முஸ்லி
னின்றுமல னென்றுரைத்த நீதரிமாம் சாதுலியே (கக)

செய்ம்மாறு நற்பொறைக டோர்ந்தறியாத் தாசனைநுங்
கைம்மாறு தந்துகஞ்சக் காலடிக்காட் கொள்வீரே
மைம்மாறு தங்கும்வஞ்ச மாறுடையர் நெஞ்சழிந்து
நைம்மாறு செய்தவெங்க ளுதரிமாம் சாதுலியே. (கஉ)

போதலருங் காபுமலைப் புண்ணியரே பற்றுதனிக்
கோதகலுஞ் சாதுமலை குங்குமமா வோங்கனின்று
நீதமுற வாதியைநி னைத்தேறிச் சொன்றோரே
தீதகலு மெங்கள் செய்யிதிமாம் சாதுலியே. (கங)

வல்லுணருள் ளோருநிதம் வந்தித்து நிற்குமுங்கள்
சொல்லுணருந் தூயமன செய்குமிசுக் கினைவியி
னல்லுணவுக் கள்ளுநறைசேர்ப யோததிமே
வல்லுணர்வின் வல்லமைகொள் வள்ளலிமாம் சாதுலியே. ( )

விளங்கும் வகைதெளிய வேண்டிவந்த வானவர்க்குக்
களங்கமறக் காட்டிவைத்த காரணரு நீரல்லவோ
துளங்குநும்வழித்தொடரைத் தொட்டோரைத்தொட்டோர்க்
வளங்கொள் கதிபொறித்த மன்னரிமாம் சாதுலியே. (கரு)

ஆதியுனைச் சேர்வதற்கு ளாதரவுந் றேனெனவே
நீதியுடை யிருமைதர் நேர்கவென்று னப்போது
காதிறத்துக் கோடடுக் கடத்தடங்க லெங்கனென்றீர்
கோதிறுநற் றனமென்றன் கொண்டிரிமாம் சாதுலியே. (கசு)

நந்தகு திப்பெருமை நுணங்கா திறையவன்பா
லந்தகு திப்பெருமை யாகிநீர் சென்றதற்காத்
தந்தங் கபுறிற றங்குபிழை தான்பொறுத்தா
னெந்தவகைக் கும்மடிமை யேந்தலிமாம சாதுலியே. (கஎ)

பண்ணியப பெண்ணவளும் பாழ்நரகுக் கேகாமற்
கண்ணியரே நம்பொருட்டாற் கபுறிற் பிழைபொறுத்தா
னெண்ணிதியு மொவ்வா வெழில்குமைத ரேந்தலரா
மண்ணிதியே காத்தருளு மன்னரிமாம் சாதுலியே. (கஅ)

வங்கத்தைப் பொன்னுக்கி வாரிக் கொடுத்தடிமை
யங்கத்தைக் காக்கவைத்த வாண்டவரு நீரல்லவோ
துங்கத்த ரப்துல்லா தோன்றலே வந்தெனது
பங்கத்தை மாற்றிவைப்பீர் பாகிமிமாம் சாதுலியே. (கக)

இன்காறு செய்முபுத்திக் கேயுமனத் தூயநறும்
பொன்காற் பொழிற்கருபா புங்கமுறக் காட்டிவைத்தீர்
நுங்காதல் கொண்டவெனை நோக்கியரு டேக்கிவைத்தாள்
சிங்கார மானவெங்கள் செய்யிதிமாம் சாதுலியே. (உ0)

ஓரா டறுத்துவிருந் தூட்டிவைத்த யூசுபுக்கு
மாரா யிரம்மா டளித்தவரா நீரல்லவோ
காரா ருஞ்செங்கைக் கனத்தகொடைக் காரணத்தீர்
சீரார் பதமுவந்தேன் செய்யிதிமாம் சாதுலியே. (உக)

பாங்கினுறை சீடர்தமைப் பட்சமுடன் காத்ததுபோ
லோங்கிகச்சுக் கேகி யுலேந்தசாயி மென்போரைத்
தீங்ககல நீங்கித் தெளியவழி காட்டிவைத்தீர்
தாங்குதிருப் பொன்னடிதந் தாளுமிமாம் சாதுலியே. (உஉ)

எழுவான் றொடுத்து மிலங்குபடு வான்முஸ்லிம்
குழுவார்செய் குற்றமெலாங் கூறு திறைபொறுத்தான்
றொழுதிறைவன் பாற்சென்ற தூய்தகுதிக் காமாயி
னெழுதுவரா ரும்புகழை யேந்தலிமாம் சாதுலியே. (உ௩)

பொங்குங் கதிர்மதியும் பூவுலகும் வானுலகும்
சங்கைபெறுந் துங்கநயச் சற்குணரு நீரல்லவோ
துங்கநும் பதந்துதித்துத் தோத்திரஞ்செய் மாந்தருக்குப்
பங்கமணு வேனுமுண்டோ பண்பினிமாம் சாதுலியே. (உ௪)

காற்றுக் கடலலையுங் காணு தயர்ந்திடுகாற்
றேற்று வங்கமோடத் துணைசெய்த காரணரே
யேற்றமருட் டின்பிலம்பா டெய்தாம லெப்பவமு
மாற்றியுளந் தேற்றிவைப்பீர் வண்மையிமாம் சாதுலியே. (உ௫)

பட்டமரந் தழைப்பப் பாழ்ங்கிணறு மூற்றெடுப்ப
வட்டக்கற் பாறை வானிறுத்து நபிபேரா
மட்டிலடங் காப்புகழ்சேர் மன்னவலிப் புன்னிலையின்
றட்டனையென் றும்புரப்பீர் தூயவிமாம் சாதுலியே (உ௬)

வானோர் புகழ்குருவே வள்ளலே வாண்மதியே
தீனோர் மகிழ்நிதியே சீரார் மணிவிளக்கே
நானோத வாய்ந்த நறும்பதத்து நாயகமே
கானோர்கை தாங்கியெனைக் காருமிமாம் சாதுலியே. (உ௭)

வேறு

கலைதத்து கடற்புவி காத்துமும
தலைபற்றினி தோம்புநிர் தாங்குமென
நிலைபெற்றிறை நேர்மை கொழுந்துரையே
சிலைபொற்புய செய்யிது சாதுலியே. (க)

அனித்தா வகமேவு மரும்பொருளை
நினைத்தேநிலை பெற்றுயர் நேர்குத்பே

தனித்தேறா மக்காங் களிற் றங்கிநெறி
செனித்தாரவர் சேர்புகழ் சாதுலியே. (உ)

புலவுங்கடல் வாைெடு மம்புவியு
நிலவுங்கதிர் நீண்மலை யுந்தினையு
மிலவும் புகழேய்ந் துறுமேந்தலைநீ
ருலவும்பதமுந் தருசா துலியே. (௩)

மாயைத்துயர்மா யதவப் படையால்
காயத்தறிவாள் கொடுகாய்ந் துசெறி
நேயத்தூ றுநிஷ் டைதனிற் பொருளை
தேயத்துறுதிக் குறுசா துலியே. (௪)

அவிர்மேனியராண் டகைநன் னபிமை
நிவர்மேதகைகண் கொடுகண் டுநிதங்
கவிவாய்மொழிகாட் டியகாரணத்தீர்
தவியாதருடந் திடும்ஷா துலியே. (௫)

மெய்பற்றிலேமே தினிமீ தினிழி
பொய்பற்றியபுன் மையனு கையினுற்
கைப்பற்றியகா ரணத்தா லெனைநீ
ருய்பற்றியவோர்ந் தருள்சா துலியே. (௬)

தன்பான்மையறிந் துணரா தொருமன்
தன்பான்மையர்சாற் றுதகைக் கொழுகி
யென்பாதுகநில் லுமினின் மெனவே
தன்பான்மைசெலுத் தியசா துலியே. (௭)

பணமீதெடு பார்புகழ் மன்னவன்சொல்
தணப்பில்லினிற் றங்கிட வங்கொருபெண்
கணமாவி யழிந்திடக் கால்புகருல்
வணரில்லெரிமா ணவசா துலியே. (௮)

செறிமண்டபஞ் சேரிஸ் கந்தரிய்யா
நெறிமாதவர் நேர்மை யபுல்லசயம்
வறிதாயவர் செல்லுழி வானவர்க
ளுறுபாதுக மோம்புறு சாதுலியே. (௯)

ஏவும்பணி யேய்ந்து மபுல்லசயம்
தாவும்பல பாதையிற் றன்பசிவந்
தேவுண்டிட வெண்ணி யுமை நினைக்கிற்
றுவின் பஹல்லாத்தரும் சாதுலியே. (௰)

வேறு.

திருவாய்க் கருவா யுலகெவைக்குந் திகழுமறிவா யொழி யாகித், தருவா மறைநேர் காக்குநயத் தகுதியுடைய பெருமா ன்றன், மருவாநிறைந்த குத்பாகி மவுலற்கரிய பறுதாகி, துரு வா ரிதிசூழ் புவிதுலங்குந் துகடீர் சாதுலி நாயகமே. (௧௧)

நந்தாமணியே நவமணியே நலன்சே ரொலிமார்க் கணிம ணியே, சிந்தாமணியே யிறைவனருள் செய்கே யெங்கள் கண் மணியே, யுந்துநெறிகொ ளடியேமை யுவந்துகாக்கு முயர்ம ணியே, மந்தைமதியா குலநீக்கு மன்னர் சாதுலி நாயகமே. ()

எந்தாய்நீரே யிறைநீரே யெங்கும்வழங்கும் வழிநீரே
வந்தாதரவி னுட்கொள்ளும் வகைநீர்நிறைந்த தொகைநீரே
நந்தாதெமக்குக் கடைநாளி னன்மையருளுங் குருநீரே
சந்தாபங்க ளகற்றியரு டகைசேர் சாதுலி நாயகமே. (௧௩)

கடல்சூழ்புவியிற் சந்ததமுங் காத்தேமறுமை யினுங்காப்பீர் யடல்சூள் பெருமை யுள்ளீரே யறிவேயாகத் துள்ளுயிரே மடல்சேர் வனசக் கரக்கொடையால் வைப்பிமெமரைப் புரந்தா ளும், தொடைசேர் புயத்தீ ரிறைநயத்தீர் துலங்கும்சாதுலி நா யகமே. (௧௪)

பாரிற் சுவன நிகர்மக்கப் பதியோடெங்கும் புகழோங்கி
யேரிற்சிறந்த சாதுலியா மினிய தரீக்கி னிவரொலியாய்
நேரிற்சிறந்த வதிசயத்தி னிதியாம் செய்கு முகம்மது பாஸ்
தாரிற்சிறந்த புயத்தணிந்த தகைசேர் சாதுலிநாயகமே. (௧௫)

பாவமிகைத்துப் பகைமிகுத்துப் பழிப்புமிகைத்துத்தின ந்தோறு, மாவல்மிகைத்துக் கேடகுமுங்க ளடியேனெற்குக் கருணைசெய்வீர், ஏவுமிறைவன் மலையிகந்தென் னேவலெவர்க்குமுறத்துமெனத், தாவவ்வழியே நெறிகாட்டுந் தவஞ்சேர் சாதுலி நாயகமே. (கசு)

பார்த்த லௌகி னேற்றபடி பகர்ந்தீ ரெம்மோருஞ்வழியே யேத்து மெளியேங் காத்தருள்வீ ரிருமைபயக்கு நாயகமே, கூாத்த வொலிமார் தங்களினீர் குன்றிலிட்ட தீபமெனக், கீர்த்தி யுரிமையார் போற்றி விண்டார் கிளரும் சாதுலி நாயகமே. (கஎ)

நிவரும் தரீக்கி னுறும சாயிம் நேருமார்க்கந் தனிலொருபெண் கவருமனத்தாற் புணரவெனக் கண்டாளிழுத்து மேலாக்க வவருமிதற்கென் செய்வமென வாங்க ணிணங்க நிற்பதைக்கண் டெவருமறியாத் திசைநின்று மெறிந்தீர் சாதுலி நாயகமே. ()

வாதைவழிக டேர்த்தோன்றி வளங்கொள் கதிசேர் சாயுச்ய போதவழியே புகுந்தென்றும் புங்கநெறியீர் சாதுலியே காதன்மிஞ்சு மென்றனைநீர் கண்ணுற்கணித்துப்பார்த்தருள்வீர் நீதமுறமே வெயங்கெங்கு நிறைந்தீர் சாதுலிநாயகமே. (கக)

எங்குநிறைந்த தீபநிக ரெழில்சேர் மறையி னோதிடினீர் தங்குமலைக டாங்குலுங்குந் தகைகொள் கௌதே பறுதேசெல் வங்கமதனினும் மிசுமை வகையா முறையோ டோதிவிடி லங்கண் மனத்தின் றயர்தீரு மருளேசாதுலி நாயகமே (உ0)

நோற்ற றமலான் நோன்பதனி னுவலுந்தினத்தி னோர்நாளிற் சாற்றல்செய்தா ரொருவரின்று சங்கை லைலத்துல் கதுறமென் றுற்றுமென்மாட் டெந்நாளு மந்நாளாமென் றருள்புரிந்தீர் தோற்றமுண்மைத் தொகைசிறந்த தோன்றல் சாதுலிநாயகமே.

செய்கு மக்கி னுத்தீ னசுமா சிறந்த ஹகாயி கொருமொழியை மெய்கொ ளறிஞோர் மாட்டணுகி வினவ விடைநன் களித்திலராற், பைத லொடுநாற் பானுண்டு படியிற்றிரிந்தா ருமைநண்ண, ஐயமகல விளக்கிவைத்த வரசேசாதுலிநாயகமே. (உஉ)

தோற்றும் ஹிஜ்ரிஜநூறு துலங்குந் தொண்ணூற் ளுரு மூன்றிற், சாற்றும் சவ்வால் மகுரிபெனு தகைபா பிரிக்காக் கண்டமதி, னேற்று கலைசேர் மதியமென விலங்கும் கிமாறு நகர்பிறந்தே, யாற்றல்சான்ற குமைதறிடை யமைந்தீர் சாதுலி நாயகமே. (உரு)

வேறு

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இந்துடன் கதிரு மிலகுவான் புவியு மெழிறரப் படைத்தி னிதளிக்கு, மந்தமு நடுவு மாதியு மில்லா னவனருள் நபிதிருப் பேரா, சுந்தர விபுதர் தொழுதடி பரவுந் தோன்றலே தொல் புவி யதனி, னிந்தனை நீக்கி யெனையுவந் தருள்வீர் நிதிவள ரபு ல்ஹஸ னலியே.

இதன் பதவுரை: இந்து உடன் கதிரும் - சந்திரனொடு சூரியனும்; இலகுவான் புவியும் - ஒளிசெய் வானமும் பூமியும்; எழில்தர படைத்து இனிது அளிக்கும் - அழகுதரப் படைத்து இனிது காப்பாற்றுகின்ற; அந்தமும் நடுவும் ஆதியும் இல்லான் - முதலிடைகடையுமில்லவனாகிய; அவன் அருள் நபிதிரு பேரா - அந்த ஆண்டவனின் கிருபைதங்கிய நபியவர்களின் பேரராக வந்தவர்களே; சுந்தர விபுதர்தொழுது அடி பரவும் தோன்றலே - அழகிய மலக்குகள்வணங்கித் திருவடித் தோத்திரஞ் செய்கின்ற அரசரே; தொல்புவி அதன் இல் நிந்தனை நீக்கி எனை உவந்து அருள்வீர் - பழமை யுடைய பூமியினிடத்தேவரு நிந்தனையகற்றி யெனையுவந் தருள்புரிவீராக; நிதிவளர் அபுல் ஹஸன் அலி ஏ - அபுல்ஹஸன் அலியே எ—று. நிதி- நிறைவு. ஏ-விளி.

கருத்து: முதலிடைகடையுமில்லாத அல்லாகுத ஆலாவினது கிருபைதங்கிய நபி ஞயகமவர்களுடைய பேரரே, அபுல்ஹஸனலியே, எனக்குக் கிருபைசெய்வீர்கள் நிந்தைநீக்கி யென்பதாம். (உச)

அண்டமும் புவியு மாடகைக் குரிய வாண்டகை யிவரென வறிந்து, விண்டவர் பதத்தில் விழிகொள வுவந்து விரைமின்க ணீவிர்க ளென்னக், கொண்டலை நிகராய்ப்பறை முரசடித்துக் கூறின ரரசரோ டொலிகண், முண்டக மலர்த்தா ளருளெனக் கருள்வீர் மூதறி வபுல்ஹஸ னலியே.

ப—ரை. அண்டமும் புவியும் - ஆகாயமும் பூமியும்; ஆள்தகைக்கு உரிய - ஆள்கின்ற தகுதிக்குரிய; ஆண் தகை இவர் என அறிந்து - தத்துவ விராசரிவரென்றறிந்து, விண்ட அவர் பதத்து இல் விழி கொள உவந்து - சொல்லிய அவர் பாதத்திற் கண்கொளவுவந்து, விரைமின்கள் நீவிர்கள் என்ன - வேண்டுதல் செய்யுங்கள் நீங்களென்று; கொண்டலை நிகராய் - மேகத்தை நிகர்த்துச் சப்திக்கும் - பறை முரசு அடித்து; பறையும் பேரிகையு மடித்து; அரசரோடு ஒலிகள் கூறினர் - இராசர்களும் அவுலியாக்களுஞ் சொன்னூர்கள்; முண்டகம் மலர் தாள் அருள் எனக்கு அருள்வீர் - தாமரைமலர்போன்ற பாதவருளெனக்குத் தருவீர்களாக; மூதறிவு அபுல்கச னலியே - முதிர்ந்த அறிவுடைய அபுல் கசனலியே எ—று. மலர்-உவமைத்தொகை.

கருத்து: வானமும் பூமியும் ஆளுந்தகுதியுடைய பெரிய குதுபு இவர்கள்தாமென்று அறிந்து இவர்கள் பாதத்திற்போய் நீங்கள் வேண்டுதலைப் பெற்றுக்கொள்ளுங்களென மிசுறுதேசத்து அரசரும் ஒலிகளும் பறைமுழக்கி அறிவிக்குந் தகுதியுடைய அபுல் கசனலி நாயகமே உங்கள் பாதவருள் எனக்குத் தருவீர்களாக என்பதாம். (உரு)

காத்திரமுசலஞ் சவளமம்புடனே கணைபல நிறுவிடச் சமர்செய், கோத்திரத்தவருங் குழீஇ யுமதருளே கொண்டனரண்டமும் புவியும், பாத்தருள் சுரந்து பயன்றருமதியே பாவியை யுவந்தருள் புரிவீர், பூத்தரும் பலரும் பொழிறிகழ் குமைதர் புண்ணிய ரபுல்ஹஸ னலியே.

ப—ரை. காத்திரம் முசலம் சவளம் அம்பு கணைபல நிறுவு இட சமர் செய் கோத்திரம் அத்து அவரும் குழீஇ - ஆயுதமாகிய தண்டம், ஈட்டி, அம்பு, வளைதடி முதலிய; பல நிலைபெறச் சமர் செய்கின்ற - கூட்டத்தவர்களுஞ் சூழ்ந்து; உமது அருள் கொண்டனர் - உங்களுடைய கிருபையைப் பெற்றூர்கள், அண்டமும் புவியும் பாத்த அருள் சுரந்து பயன் தரும் மதியே - ஆகாயமும் பூமியும் பரவிய வருளூறிய பிரயோசனந்தருகின்ற சந்திரன் போன்றவர்களே; பாவிஐ உவந்து அருள் புரிவீர் - பாவியாகியவென்னையுவந்து கிருபைசெய்வீர்களாக; அரும்பு பூத்து அலரும் பொழில் திகழ்குமைதர் புண்ணி அர் அபுல் கசன் அலி ஏ - அரும்பு புட்பித்தலருகின்ற சோலை விளங்கும் குமைதர் நகரத்துப் புண்ணியராகிய அபுல் கசனலியே எ—று

அத்து-சாரியை. அருள்-இரண்டாம்வேற்றுமைத்தொகை. ஏ-இசைநிறை மதியே, அலியே என்னும் ஏகாரம் விளி.

கருத்து: யுத்தஞ்செய்கின்ற வீரர்களும் வந்து தங்கள் கிருபையைப் பெறுகின்ற சந்திரன்போன்றவர்களே, குமைதர் நகரத்து அபுல்கசனலி யென்னும் நாயகமே, இப்பாவியையுமுவந்தருள் செய்வீர்களாக எ-ம். (௬)

அண்டரு மணியு மைந்த ருநிதியு மரம்பையு மமைந்துறு சுவனத், துண்டுற வெமர்க்குப் பொறித்திறை பாலிற் றுலக்கிய வெம்பெருமானே, கண்டெனு மொழியார் கண்வலைச் சிக்குட் கரந்திடா தெனையுவந் தருள்வீர், கொண்டலே குருவே குலவு விண் மணியே குதுபுயா வபுல்கச னலியே

ப-ரை. அண்டரு மணியும் ஐந்தரு நிதியும் அரம்பையும் - மலக்குகளு மிரத்தினங்களும் கற்பகமு நிதியும் கூறுல்ஈனும்; அமைந்து உறு சுவனம் துண்டு உற எமர்க்கு பொறித்து - நிறைந்துபொருந்திய சுவர்க்கத்தின் பற்றுச்சீட்டுக் கிடைக்கும்படி யெங்களுக்கெழுதி; இறைபால் இல் துலக்கிய எம்பெருமானே - ஆண்டவன் பக்கலில் வெளிப்படுத்திய எங்கள்பெருமானே; கண்டு எனும் மொழி ஆர் - கற்கண்டொத்த சொல்லையுடைய பெண்களினது; கண்வலை சிக்கு உள் - கண்ணென்ற வலைச்சிக்கினுள்; கரந்து இடாது எனை உவந்து அருள்வீர் - மறைந்து போகாமலென்னை யுவந்து கிருபைசெய்வீர்களாக; கொண்டலே குருவே குலவுவிண் மணியே குதுபு யாஅபுல் கசனலியே - மேகமொத்தவர்களே, குருவே, விளங்கிய சூரியனே; குதுபாகிய அபுல்கசனலியே எ - று. ஏகாரங்கள் - விளி

கருத்து: உங்கள் தரிசனை யுடையவர்களுக்குச் சுவர்க்கமுறி நாயனிடத்தில் வாங்கித்தந்தஅபுல் கசனலி நாயகமே, பெண்மாயையுட் சிக்காது எனைக்காப்பீர்களாக என்பதாம். (௨௭)

காரணமின்றிக் கண்ணுடைபட்ட காளைதன் னறபிக டமக்குப், பூர்ணமாகப் பொறாக்கிட விரிப்பிற் பொலிபொருளாயிரமளித்தீர், ஆரணக்கடலே யமரர்விண் ணிழிந்தன் றறிதகைக்காவனவுரைத்த, தாரணிப் புயத்தீ ரெனையுவந்தாள்வீர் தன்னைமேச ரபுல்கச னலியே.

ப—ரை. காரணம் இன்றி கண் உடைபட்ட காளைதன் அறபிகள் தமக்கு - நிமித்தமின்றி நேத்திரமொடிக்கப்பட்ட வாலிபனைச்சேர்ந்த அறபிகளுக்கு; பூரணமாக - நிரப்பமாக; பொறுக்கிட - பொறுக்கியெடுத்துக் கொள்ள; விரிப்பிற் பொலிபொரு ளாயிரம் அளித்தீர் - விரிப்பின்கீழாற் பொலிகின்ற பொருள் ஆயிரங்கொடுத்தீர்கள்; ஆரணக்கடலே - வேதச்சமுத்திரமானவர்களே; அமரர் விண் இழிந்து அன்று அறிதகைக்கு ஆவன உரைத்த தார் அணி புயத்து ஈர் - மலக்குகள் ஆகாயத்தினின் றிறங்கிக்கேட்டபிரகாரம் அறிவுரைத்த மாலையணிந்த புயத்தையுடையவர்களே; எனை உவந்து ஆள்வீர் - என்னை யுவப்புற் றுள்வீர்களாக; தன்மைசேர் அபுல் கச னலியே - குணம்விளங்கிய அபுல் கசன் அலி நாயகமே எ - று. அன்று அசை ஈர். எ-விளி.

கருத்து: (வரும் புக்கருக்களிடத்தில் யாசித்த) அறபிகளுடைய வாலிபன் கண்ணில் அந்தப் புக்கருக்க ளொருவரின் கம்பு பட்டுடையுண்டதற்குப் பதிலாகத் தாங்களிருந்த விருப்பின்கீழ் ஆயிரந்திருகம் பொறுக்கிக்கொள்ளச் செய்தவர்களே, மலக்குகளுக்கு மறிவுரைத்த அபுல் கசனலி நாயகமே, எனக்குக் கிருபைசெய்வீர்களாக என்பதாம். (உஅ)

கறையடிச்சிறுகட் கவுண்மதக்கோட்டுக் களிற்மகு மூதினிலேறி, மறியமுமாசி யாமயிலுடனே மணந்திட வருமகுமூதின், னறிவளர்பேரா வண்ணலாண்டகையே யன்புடனெனையுவந் தருளவீர், குறையறவொலிக ணுதலணி பதத்தீர் கோசுயா வபுலகசனலியே.

ப—ரை. கறை அடி சிறுகண் கவுள் மதம் கோடு களிறு மகுமூது இல் ஏறி - உரல்போன்ற கால்களுஞ் சிறியகண்களும் மதம்பாய் கதுப்புங் கொம்புமுடைய மகுமூதென்ற யானையிலேறி; மறியமும் ஆசியா மயில் உடனே - மறியம் ஆசியாவென்ற பெண்களுடனே; மணந்திடவரும் மகுமூதின் அறிவளர் பேரா - மணம்புரியவரும் நபிநாயகமவர்களின் அறிவுவளர்கின்ற பேரரே; அண்ணல் ஆண்டகையே - பெருமையிற்சிறந்த அரசரே; அன்புடன் எனை உவந்து அருள்வீர் - அன்போடெனை யுவந்து கிருபைசெய்வீர்களாக; குறையற ஒலிகள்நுதல் அணி பதத்தீர் - குறைநீங்கவொலிமார்களினெற்றியிலணிந்த பதத்தையுடையவர்களே; கோசுயா அபுல் கசன் அலியே - கோசு அபுல் கசன் அலியே எ - று. களிறு-களிற்எனக் கடைகுறைந்தது கறையடி - உவமைத்தொகை. அடி, கண், கவுள், மதம்,

கோடு என்பன உருபும் உம்மையு மொருங்கேதொக்கன. கழிறு, மகுமூது என்புளி மகுமூதாகிய கழிறு எனமாற்றி வினையாலணையும் பெயராய்ப் பொருள்கொள்ளுக. இருபெயரொட்டுப் பண்புத்தொகையெனினும் பொருந்தும். ஏ. விளி.

கருத்து: குற்றமற்ற ஒலிகளி னெற்றியிலணிந்த பதத்தையுடையவர்களே, எனக்குக் கிருபைசெய்வீர்களாக என்பதாம். (உகூ)

சாமு றாமிசுறு சங்கைசேர் ஹிஜாசி சாற்றிடுமகுரிபு ஹிந்தி, மாமுதற் ஜாவா மகிழ்ச்சிகொ ளிலங்கை மகிதல மெங்கணுமருவி, நேமுறநின்றார் நெறிவழியதனை நிகழ்த்திட லெம்மனோர்க் கரிதே, காமுற நுந்தங் காலிணையுவந்தேன் காத்தருள் அபுல்கசனலியே.

ப—ரை. சாமு றாமு மிசுறு சங்கைசேர் ஹிஜாசி சாற்றிடு மகுரிபு கிந்தி மாமுதல் ஜாவா மகிழ்ச்சிகொள் இலங்கை - சாம் றாம் மிசுறு சங்கைசேர் கிஜாசி சொல்கின்றமகுரிபு கிந்து அழகிய ஜாவா மகிழ்ச்சிகொள்கின்ற இலங்கை; மகிதலமெங்கணு மருவி - ஆகிய தேயங்களெங்கும் பொருந்தி; நேமுறநின்றார் நெறிவழியதனை நிகழ்த்திடல் எம்மனோர்க்குஅரிதுஎ - நேமமாக நின்றவர்களின் நேர்மையான (தரீக்கு) என்னும் வழியைப்புகழ்ந்து பேசுவது எம்போல்வார்க்கு அரிதாகும்; காமுற நுந்தங் காலினை யுவந்தேன் காத்து அருள் அபுல் கசனலியே - ஆசையோடு முங்களுடைய இரண்டுதிருவடிகளை யுவந்தேன் காத்தருள்செய்யுங்கள் அபுல்கசனலியே எ-று. ஏ-அசை. ஏ-விளி.

கருத்து; எத்தேசத்தினு மெவர்களும் பொருந்திய சாதுலிய்யாவென்னு முங்கள் தரீக்கினிடத்து நேமத்துட னின்றார்களின் மகிமையென் சொல்வேன். ஆசையோடு உங்களிருபதங்களையு முவந்தவனைக் காப்பாற்றுங்கள் என்பதாம். (௩0)

விண்டலமுகடு மதிர்தரமுழங்கும் வியன்சலவாத்தணி திக்குறுங், கண்டதிசயித்து நின்பவரகங்கள் களித்திடக் கதிர்தருமுகமு, மண்டியமிகுவான் தோன்றிடும் ஹல்கா மதிபுகழ் தோன்றலே நுந்தா, ளண்டினன் குறைக ளகன்றிட வுவந்து மாண்டரு ளபுல்கசனலியே.

ப—ரை. விண்டலம் முகடு உம் - ஆகாயமு முச்சியும்; அதிர்தர - ந டுங்கும்படி; முழங்கும் ஒலிக்கும்; வியன் சலவாத்து அணி திக்குறும் - பெருமையுடைய சலவாத்தும் அழகியதிக்குறும்; கண்டு அதிசயித்து நிற்ப வர் - நிற்கின்றமனிதர்கண்டாச்சரியப்பட்டு - அகங்கள்களித்திடமனங்களி ப்புற; கதிர்தருமுகமும் மண்டிய இருவான் பிரகாசம்பொருந்திய முகத் தோடு நெருங்கிய சகோதரர்கள்; ஹல்கா மதிபுகழ் தோன்றலே - ஹல்கா வினுமதிக்கின்ற புகழையுடைய நாயகமே; நும்தாழ் அண்டினன் - உங்க ள்பதத்தைச் சேர்ந்தேன்; குறைகள் அகன்றிட - குற்றங்கள்நீங்க; உவந்து ஆண்டு அருள் அபுல்கசனலியே உவப்போடு காத்தருள்செய்யுங்கள் அபு ல்கசனலியே எ - று. "கல்கா" திக்குறுசெய்யுந்தானம். உம்மை - எண்-ஏ காரங்கள்-விளி.

கருத்து: நெருங்கித் திக்குறுசெய்யும் கல்காவில் துதித்துப்புகழும் அபுல்கசனலி நாயகமே, தங்கள் திருவடிமுடுகி யவனைப் பாலிப்பீர்களாக என்பதாம். (௬௧)

கலைவழா துளத்துக் கற்பகநிதியே காத்திடுங் கருணைசே ர் முகிலே, நிலைவழா தெனது நெஞ்சினி லுறைந்த நேயரே நிம லநாயகரே, மலைவெழா திபுனு புருகவ ரில்மு மங்கிட மவுன் றசான்றவரே, சிலைவழாப் புயத்துச் செம்மலே யுவப்பீர் செய் பிது அபுல்கசனலியே.

ப—ரை. கலைவளாத உளம் அத்து கற்பகம் நிதி ஏ - கல்விவழுவாத மனத்தையுடைய கற்பகநிதியொத்தவரே; காத்து இடும் கருணை சேர் மு கிலே காப்பாற்றுகின்ற கிருபைசேர்ந்த மேகமொத்தவரே; நிலைவழாது எனது நெஞ்சு இன் இல் உறைந்த நேசரே - நிலைமைவழுவாமல் என்மன த்திலுறைந்த நேசரே; நிமலம் நாயகரே - பரிசுத்த நாயகமானவரே; மலை வு எழாது இபுனு புருஃகு அவர் இல்மு மங்கிட மவுன்றசான்றவரே - மய க்கமெழாத இபுனு புருஃகு என்பவரின் கல்வி குறைந்திடக் கூறிய பேர றிவாளரே; சிலைவழா புயத்து செம்மலே - கெடாத மலையையொத்த புய த்தையுடையசெம்மலே; உவப்பீர் செய்பிது அபுல்கசனலியே. எ-று. "இ ல்மு" அறபில், அறிவென்றது. அது பஞ்சப்பொறி யறிவுபோலாதுள்ளத் து நுகரும் அறிவாம். அத்து சாரியை-ஏகாரங்கள்-விளிகள்.

கருத்து: நித்தியமு முங்கள்கருணையை விரும்பியவனை யுவந்தாள்வீர்கள் அபுல்கசனலியே என்பதாம். (௩௨)

நினைவினினிதமு நும்மருள்வேண்டி நின்றவ னீணிலமத னிற், கனவினிலேனு மொருமுறை வந்து கண்டிட வுதவிசெய் தருள்க, நனவினி லிறைபாலன்றி மற்றொன்றை நாடுறு நாயகக் குருவே, சினைமலர் வாவி சூழ்பதி குமைதர் செல்வரே அபுல்கசனலியே.

ப—ரை. நினைவினில் நிதமும் - எண்ணத்தில் நித்தியமும்; நும் அருள் வேண்டி நின்றவன் - உங்களருளைவேண்டி நிற்கின்றவன்; நீள் நிலம் அதனில் - நீண்டபூமியின்கண்ணே; கனவினில் எனும் ஒருமுறைவந்து- (எனது) கனவினிடத்தாவது ஒருமுறை வந்து; கண்டிட உதவிசெய்து அருள்க - (யான்) காணும்பொருட்டு உதவிசெய் தருள்வீர்களாக; நனவினில் இறைபால் அன்றி மற்று ஒன்றை நாடுறு நாயககுருவே - தெளிவிடத்து ஆண்டவன் பக்கலன்றி வேறொன்றை நாடாத நாயகமாகிய செய்கே; சினைமலர் வாவிசூழ் - அரும்பு மலருகின்ற தடாகஞ்சூழ்ந்த; குமைதர் செல்வரே - குமைதர் நகரத்தின் செல்வரே; அபுல்கசனலியே - அபுல்கசனலியே எ-று. அருள்க வியன்கோண்முற்று. மற்றொன்புழி, இறைவற்கன்னியமாகிய வனைத்து மெனப் பொருள்கொள்ளினு மமையும். எ-விளி.

கருத்து: கனவிலேனு முங்களைக் காணும்பொருட்டாகவந் துதவி செய்யுங்கள். எக்காலு முங்களைக் காத்துநிற்பவனுக்கு, குமைதர்நகரதிபராகிய அபுல்கசனலியே என்பதாம். (௩௩)

நாணிலமதனு நாதனுந்தகைக்கு நவிற்றிய செய்கெவரென்னத், தானவ னருள்சேர் தகைமையர் வினவச் சாற்றினீ ரப்துஸ் ஸலாமென், றுனவாருதியா ராண்டகை யவர்பின் னம்புவிவானுடன் பத்துக், கோனருட் கடலிற் குழித்தினி தெழும்புங் கோசுயா வபுல்கசனலியே.

ப—ரை. நாத - நாதரே; நுந்தகைக்கு - உங்கள்பெருமைக்கு; நால் நிலம் அதனும் - நான்குதிணையுடைய விந்நிலவுலகத்தின்கண்ணு; நவிற்றி ய செய்கு எவர் என்ன - சொல்கின்ற செய்கு யாரென்று; தான் அவன் அருள்சேர் தகைமை அர் வினவ - ஆண்டவனது கிருபை சேர்கின்ற ஒரு பெரியோர் வினவல்செய்ய; அப்துஸ்ஸலாமெனச் சாற்றினீர் - (மசீசுடை யமகன்) அப்துஸ்ஸலாமென்று சொன்னீர்கள்; ஆனவாருதியார் - ஆகிய கடலைப்போன்ற; ஆண் தகை அவர்பின் - தலைவராகிய அவர்களுக்குப் பின்பு; அம்புவி வான் உடன் பத்து கோன் அருள் கடல் இல் குழித்து இனிது எழும்பும் - பூமியினும் வானத்தினும் ஆண்டவனி னருள்நிறைந்த பத்துக்கடலில் மூழ்கியெழும்பிய கோசுயா வபுல்கசனலியே எ-று. திணை நான்கு, குறிஞ்சி, நெய்தல், மருதம், முல்லை, கடல்பத்தென்பன, பூமியில் அபூபக்கர், உமறு, உதுமான், அலி, முகம்மதுநபி (சல) இவர்களாம். வானத்தில், ஜிபுறயீர், மீக்காயீல், இசுறாபீல், இஸ்றாயீல், மலக்கு இவர்களாம். ஏ-விளி.

கருத்து: வானத்திலும் பூமியிலும் பத்துச்சமுத்திரத்திலும் மூழ்கி யெழும்பினேனென்றுரைத்த அபுல்கசனலிநாயகமே எனக்குக் கிருபை செய்வீர்களாக என்பதாம். (நச)

குடதிசை மகுரி பெனுந்தலமெழுந்து குலவிவிண் ணுலவிய மதியம், வடகிழக்காக வந்ததுமக்க மாநகர் மருவிநும் வழியைத், திடமுடனெங்குந் திகழ்தர வளர்த்த செய்குமுகம்மது பாசி, மிடல்புயத் தணிந்த மேதகுமணியே மேவியா ளபுல் கசனலியே

ப—ரை. குடதிசை மகுரிபு எனுந் தலம் எழுந்து - மேற்குத்திசையாகிய மகுரிபு என்னுமூரி னெழுந்து; குலவி விண் உலவிய மதியம் - பிரகாசித்து வானத்தில்நடக்குஞ் சத்திரன்; வடகிழக்கு ஆகவந்து - வடகிழக்குப்பக்கமாகவந்து; அதி மக்கம் மாநகர்மருவி - அச்சந்திரன் மக்கமென்ற அழகிய நகரத்தில் வசித்து; நும்வழி ஐ திடம் உடன் எங்கும் திகழ்தரவளர்த்த - உங்கள் தரீக்கைத் திடத்தோடு எத்திசையும்விளங்க வளர்த்துவந்த; செய்கு முகம்மதுபாசி - செய்குமுகம்மது பாசி என்ற குதுபு அவர்க

ளுடைய; மிடல் புயத்து அணிந்த மேதகு மணியே - வலிய புயத்து அணிந்திருக்கின்ற பெருமைபொருந்திய இரத்தினமே; மேவி ஆள் அபுல் கசனலியே - பொருந்தி எனையாளுங்கள் அபுல்கசனலியே எ-று. சந்திரன் உவமநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை. ஏகாரங்கள்-விளி.

கருத்து: செய்கு முகம்மது பாசி ஒலியவர்களுடைய தோட்கண்மாலையாக அணியப்பட்ட அபுல்கசனலியே. என்னைப் பொருந்தி யாள்வீர்களாக என்பதாம். (௩௫)

சாதிலாவெனுமூர் பிறந்திலனெனக்குச் சாற்றிடவந்ததே தென்னென, வாதிபாற்கேட்டீரவனதன்றேயமைந்ததன்கருத்து வேறறிக, நீதியாவெனது முஹப்பத்திற்றனித்த நிலைமையினீரென வறைந்து, சாதுல்லியென்னச் சத்துறபொறித்த சாகிபே அபுல்கசனலியே.

ப—ரை. சாதிலா எனும் ஊர் பிறந்து இலன் - சாதிலாவெனுமூரில் யான் பிறந்தவனல்லன்; எனக்குச் சாற்றிட வந்த அது ஏன் என்ன ஆதிபால் கேட்டீர் - எனக்கு அப்பெயர் சொல்லவந்தது ஏனென்று ஆண்டவன்பக்கலிற் கேட்டீர்கள்; அவன் அருது அன்று ஏ அமைத்த அதன் கருத்துவேறறிக - (அதற்கு) ஆண்டவன் (கருத்து) அருதன்று அமைத்தவதனின் கருத்து வேறு அறிந்துகொள்ளும்; நீதி ஆ எனது முகப்பத்து இல் தனித்த நிலைமை இல் நீர் என அறைந்து - நீதியாக வெனது முகப்பத்திற் றனிமையுற்ற நிலைமையினீராக விருப்பீரென்று சொல்லி; சாதுல்லி என்ன சத்து உற பொறித்த சாகிபு ஏ அபுல் கசன் அலி ஏ - சாதுல்லியென்று சத்துப்பிறக்க எழுதிய நாமத்தை யுடையவர்களே அபுல்கசனலியே எ-று. ஏ-பிரிநிலை. ஏ-விளி.

கருத்து: அல்லாகுத்த ஆலாவால் சாதுல்லி யென்று சத்துப்பிறக்க நாமமெழுதப்பட்ட அபுல்கச னலியே. அடியேனுக் கருள்செய்வீர்களாக என்பதாம். (௩௬)

**நத்துநற்றவர்க்கு நாதநாயகமே நானிலம் வழங்குநாண் மலரே, சித்தம்வைத்திறைவன் செப்புமத்தகைக்குச் செம்மலே**

பரிவுட னுமது, மித்திர ரநேக ரொலிகளாய்ச் சிறந்தார் மேலி னன் சீரடியதனைக், குத்திரமகற்றி யெனையுவந் தருள்வீர் கோசுயா வபுல்கச னலியே.

ப—ரை. நத்து நற்றவர்க்கும் - விரும்பியதவத்தையுடையவர்களுக்கும்; நாதநாயகமே நாதராகிய நாயகமே; நால் நிலம் வழங்கும் நாள் மலரே - நான்கு நிலங்களினும் வழங்குகின்ற அன்றுபுட்பித்தபூவே; சித்தம் வைத்து இறைவன் செப்பும் அத்தனைக்கு செம்மலே - கீர்த்தியளித்து ஆண்டவன் சொல்லும் அத்தனைக்கு இராசரே; பரிவுடன் உமது மித்திரர் அநேகர் ஒலிகளாய்ச் சிறந்தார் அன்போடு உங்கள் சிநேகர் அநேக ரொலிகளாகச் சிறந்திருக்கிறார்கள்; மேலினன் சீர் அடியதனை - (உங்கள்) சிறப்பான பாதங்களை யானுமுவந்திருக்கிறேன்; குத்திரம் அகற்றி எனை உவந்து அருள்வீர் - வஞ்சனைநீக்கி என்னை யுவந்தருள் செய்வீர்கள்; கோசுயா வபுல்கசனலி ஏ - கோசுயா வபுல்கசனலியே எ-று. நாத விளியெனினு மமையும். நாண்மலர் உவமைத்தொகை. ஏ-விளி.

கருத்து:—தங்களையடுத்த நேசர்கள் ஒலிகளானார்கள் யானுந்தங்கள் பாதத்தை யடுத்தமையால் குற்றம்நீக்கி யருள் செய்வீர்களாக என்பதாம். (கச)

அபு அலிமவுத்தை யறிந்தவர் ஜனுஸாக் காயினீர் சலாமதை யறையத், துப்புடன்பிரதி சொல்லிடப்பேரன் றுஞ்சின ருய்ந்தனரென்றார், கவிமழைக் கரத்தாற் கபனிட்டுங்கழுவக்கண்ணிணை திறந்தனர் வகுதா, வவிருறச்செய்வீ ரென்றுநீர் பகரவாமென்று ரபுல்கசனலியே

ப—ரை. அபு அலி மவுத்தை அறிந்து - அபு அலி (றலி) யவர்களின் மவுத்தை யறிந்து; அவர்ஜனுசாவக்குஆயினீர் - அவர்களின் ஜனுசாவுக்குச் சென்று நீங்கள்; சலாமே அதுஜ அறையத் - சலாத்தைச்சொல்ல; துப்புடன்பிரதிசொல்லிட - அறிவோடு பதில்கூற; பேரன் துஞ்சினர் உய்ந்தனரென்றார் - மவுத்தான அவர்கள் பேரன் உயிர்த்தனரென்றார்கள்; கவிமழை கரத்து ஆல் - கவிகின்ற மேகமொத்தகரத்தினால்; கபனிட்டு கழுவ - கழுவிக் கபனிட; கண் இணை திறந்தார் - இருகண்களையுந் திறந்தார்கள்; வகுதா அவிர் உறச்செய்வீர் என்று நீர் பகர - வார்த்தைப்பாட்டை விளக்

கமுறச் செய்வீர் நீரென்று கூற; ஆம் என்றார் அபுல்கசனலியே - ஓமென்றார் அபுல்கசனலியே. எ-று. மழைக்கரம் உவமைத்தொகை. ஏ-விளி.

கருத்து:—இவ்விருவரும் முன்னர் மவுத்தாகின்றவர் மற்றவருக்கு ஆண்டவனிடத்து மன்றாட்டஞ் செய்கின்றதெனை வார்த்தைப்பாடு செய்து கொண்டபடி நாயகம் அபுல் கசன் (றலி) அவர்கள் குளிப்பாட்டும்போது அபு அலி (றலி) அவர்கள் கண்திறக்க வருதர்வை நிறைவேற்றுமெனக்கேட்க நல்லதென்றார்க ளென்பதாம். (கரு)

முருந்திளமுறுவன் மொய்குழல்வதன முழுமதிகண்டுவிண் மதியும், பரிந்துறுநாட்கு நாட்கலைதேய்ந்து பாவையர்க் கொல்கிடுமிசுறி, னருந்தவ சித்திக்கீன்க ணாற்பதுபே ரன்புடன் வளர்ப்பீரென் றிறசூல், புரிதகைக்கொழுகு புண்ணியாவெனைக்கார் பூபதியபுல்கச னலியே.

ப—ரை. முருந்து இள முறுவல் - மயிலின திறகினடிக் குருத்துப் போன்ற சிறிய பற்களும்; மொய்குழல் - மொய்த்த கூந்தலையுமுடைய; பாவையர் - பெண்களினது; வதன முழுமதிகண்டு - முகமாகிய பூரணசந்திரனைக்கண்டு; விண்மதியும் - வானத்துச்சந்திரனும்; பரிந்து உறு நாள் குநாள் கலைதேய்ந்து - பரிதலுறுது நாளுக்குநாள் கலைதேய்ந்து; ஒல்கிடும் மிசுறு இல் - குறைந்திடு மிசுறுநகரில்; அரும் தவ சித்திக்கீன்கள் நாற்பதுபேர் - அரியதவத்தையுடைய சித்திக்கீன்களில் நாற்பதுபேர்களை; அன்புடன்வளர்ப்பீர் - அன்போடு வளர்ப்பீரென்று; இறசூல் புரி தகைக்கு ஒழுகும்புண்ணியா - நபி (சல) அவர்கள் ஏவலுக்கு வழிபட்டுப்போந்தபுண்ணியரே; எனை கார் பூபதி - என்னைக்காருங்கள் பூமிக்கு அரசராகிய அபுல்கசனலியே. எ-று. ஏ-விளி.

கருத்து:—மிசுறுதேயத்து நாற்பது சித்திக்கீன்களை வளர்க்கவென நபி (சல்) அவர்கள் சொற்றபிரகாரம் போந்த நாயகமே என்னைக்காப்பாற்றுங்க ளென்பதாம். (கசு)

சத்தியஞ்செய்தென் ஞமத்தைக்கூறிச் சாற்றிடில் துவாமக் பூலென், சித்திக்குமிறைவன் பாலெனச்செப்புஞ் செம்மலே பரிவுடனொருவர், பத்தியிற்கண்டோர் நபிதமைக்கனவிற் பார்த்திவை பகர்தர நபியென், சித்தமுமவர்தஞ் சித்தமொன்றென்றார் சேர்த்தரு ளபுல்கச னலியே.

ப—ரை. சத்தியஞ்செய்து என்னுமத்தைக்கூறிச்சாற்றிடில் - ஆணையிட்டு எனதுபெயரைச் சொல்லிக்கேட்பானெனில்; துவா மக்பூலென்று - துவா கபூல்செய்யப்படும்; சித்திக்கும் இறைவன் பாலெனச் செப்புஞ் செம்மலே - இறைவனிடத்திற் சித்திக்குமெனச் சொல்லுமரசரே; பரிவுடன் - அன்புடன்; ஒருவர் பத்தியில் - ஒருவர் பயபத்தியில்; கண்டோர் - கண்டவர்; நபிதமை - நபிகளுபகத்தை; கனவில்பார்த்து - கனவிடத்து நோக்கி; இவை பகர்தர இவைகளைச்சொல்ல; நபி - நபியவர்கள்; என்சித்தமும் - என்னுள்ளமும்; அவர்தம் சித்தமும் - அவருடைய உள்ளமும்; ஒன்று என்றார் ஒன்றென்று சொன்னார்கள்; சேர்த்து அருள் - உங்கள் சகோதரர்களோடு என்னையுங் கூட்டாக்கி யருள்செய்யுங்கள் - அபுல்கசனலியே. எ-று. (மக்பூல்) கைக்கொள்ளப்பட்டது. இருது அறபில் செயப்பாட்டின்பொருட்டு. ஏ-விளி.

கருத்து:—என்னுடைய பெயரைச்சொல்லி ஆணையிட்டு அல்லாஅளவில் துவாக் கேட்பானாகில் கபூலாக்குவானென்றுஞ் சொல்லியபிரகாரம் ஒருவர் அப்படிக்கேட்டுக் கபூலாகிறதை நபிநாயகத்தைக் கனவிற்கண்டு தாங்களன்றி அப்படித் துவாக்கேட்கிறது சரியோவென்று கேட்டதற்கு என்னுடைய மனதும் என்பேரன் அபுல்கசனுடைய மனதும் ஒன்றென்று சொல்லும்படியான அபுல்கசனலிநாயகமே. என்னையு முங்களுடைய சகோதரர்களுடன்சேர்த்து அருள்செய்வீர்களாக என்பதாம். (கஎ)

கொடுமுடிச்செகு பறுன்மலைநீத்துக் குவ்வினி னடந்திட
ஹாலொன, றடிமுடி வில்லா னருளினாலாய தன்றறு வாகொ
லிமார்கள், படியுறும் வவ்வாற் பட்சிகள்போலப் பயன்பெறப்
பரந்தனர் மாக, முடியுறநின்றோ ரெனையுவந்தருள்வீர் முதுக்
குறை யபுல்கசனலியே.

ப—ரை. கொடுமுடி செகுபறுன் மலைநீத்துக் குவ்வினில் நடந்திட - சிகரத்தையுடைய செகுபறுன் என்னுங் குங்குமமலைவிடுத்துப் பூமியின்கண்ணே நடக்க; ஹால் ஒன்று - எண்ணமொன்று; அடிமுடிவு இல்லான் அருளினால் ஆயது - தொடக்க முடிவில்லாத (அல்லாகுத்தஆலா) வினது கிருபையினால் ஆகியது; அன்று அறுவாகு ஒலிமார்கள் - அந்நேரம் அறுவாகினிருக்கும் ஒலிகளானவர்கள்; படியுறும் வௌவால் பட்சிகள் போல - பூமியினிடத்துள்ள வௌவால் குருவிகளைப்போல; பயன்பெறப் பரந்தனர் - (உங்களின்) பிரயோசனத்தைப் பெற்றுக்கொள்ளப் பரவினார்கள்,

மாகமுடியுறநின்றார் - வானவுச்சிமட்டுக்கும் நின்றார்கள்; எனை உவந்து அருள்வீர் முதுகுறை அபுல்கசனலி ஏ - என்னை யுவப்போடு காப்பாற்றுங்கள் பூரண அறிவையுடைய அபுல்கசனலியே. எ-று.

கருத்து:—தங்களிடத்திற் பலன்பெறுகிறதற்கு அறுவாகினிருக்கும் ஒலிமார்கள் வெளவாற்குருவிகளைப்போல வானமட்டிற்கும் பாவினார்கள். என்னையுமுவந்து கிருபைசெய்யுங்கள். அபுல்கசனலியே. என்பதாம். (

எவரினுமேலாம் ஹகாயிகாமறிவி னினிதுறச் சொலுந்தொறு நுமது, நவமுறும்பாட்ட னவின்றனரென்ன நவில்வதைக்கேட்டுமோ ரொலிதா, மெவனெனமனத்தி னெண்ணிடக்கனவி னெழிநபி பேரனானென்றார், திவமுறுதவரைத் துரத்தினீர்செய்ய செய்குயா வபுல்கசனலியே.

ப—ரை. எவரினும் மேலாம் ஹகாயிகு ஆம் அறிவு இன் இனிது உற - எல்லாரினு மேலாம் ககாயிகு என்ற இல்மிலினது பொருந்த; சொலும் தொறும் நுமது - சொல்லுந்தோறு முங்களுடைய; நவம் உறும் பாட்டன்- நவின்றனர் என்ன - அற்புதமுடைய பாட்டன் (நபிசல்) அவர்கள் சொன்ஞர்களென்று; நவில்வதைக்கேட்டும் ஓரொலிதாம் - சொல்வதைக்கேட்டு ஒரு ஒலி தாம்; எவன் என மனத்து இன் எண்ணிட - எப்படியென்று எண்ணமிட; கனவில் எழில் நபி பேரன் நான் என்றார் - அழகிய நபிநாயகம் அவர்கள்கனவிடத்துத்தோன்றி அவர்) பேரனென்றார்கள்; திவமுறுதவரைத் துரத்தினீர் - விளக்கமுறுதவரைத் துரத்திவிட்டீர்கள்; செய்ய செய்குயா வபுல்கச னலியே - சிறந்த செய்கு அபுல்கசனலியே. எ-று. தாம் பன்மை அசை "தாமென்கிளவி பன்மைக்குரித்தே" ஏ-விளி.

கருத்து:—யாரினு மேலாக ககாயிக்குடைய இல்முகளைப் பேசுகிற சபையில் நமது பாட்டனார் நபி (சல்) அவர்கள்சொன்ஞர்கள் என்றுதாங்கள் சொல்லுகிற வழக்கங் கேட்டிருந்த ஒரு ஒலி அகுது எப்படியென்று மனதில் நாடிட அவர் கனவினிடத்து (நபிசல்) அவர்கள்வந்து எனது பேரனுடைய சொல்லாகிறது எனதுசொல்லென்று சொன்ஞர்கள். பின்னர் விளக்கமில்லாத அவரைத் துரத்திவிட்டீர்கள். அபுல்கசனலியே. என்பதாம். (கக)

சுதைமதிற் கொடிகளைத்தெற்றிமாடச் சுந்தரப்பாவை
யார் முகத்தைத், துதைந்திருட் சீத்த மதியெனவரவு தோன்றி
டு நடையைக்கண் டயர்ந்து, வதிந்துறு மிவர்கண் மயிலென
மயங்கும் வளந்திகழ் மக்கமாநகரி, நிதியென வந்த நபிதிருப்
போரா நேசித்த வாபுல்கசனலியே

ப—ரை சுதைசாந்தில் கொடிகள் சுண்ணமழுக்கிய மதிலினட்டிய கொடிகளானவை; துதைத்து எற்றி மாடம் சுந்தரம் பாவை அர்முகத்தை - சுற்றிவீசுகின்ற மாடங்களிலுள்ள அழகிய பெண்களினது முகங்களை; துதைத்து இருள் சீத்த மதி என - நெருங்கி யிருட்பிழம்பை யகற்றுஞ் சந்திரனென்று; அரவு தோன்றிட - கரும்பாம்புவந்திட; நடைஐகண்டு அயர்ந்து - நடையைநோக்கி அஞ்சி; வதிந்து உறும் இவர்கள் மயில் என மயங்கும் - தங்கியிருக்குமிவர்கள் மயிலென்று மயங்குகின்ற; வளம் திகழ் மக்கம் மாநகர் இல் நிதியென வந்த நபிதிருப்போரா - சோலைசூழ்ந்து விளங்கு மக்கமென்று மருவிய பட்டணத்தின் கண்ணே பொக்கிடமொத்து வந்த நபி சல் அவர்களின் பரிசுத்தபேரரே; நேசித்த ஆள் அபுல்கசன் அலி ஏ - பட்சம்வைத்து ஆளுங்கள் அபுல்கசனலியே எ-று. ஆ-எ. விளிகள். ஆள் வினைத்தொகையெனினும் பொருந்தும்.

கருத்து:—மேன்மாடகூடங்களில் வசிக்கும் பெண்களின்முகத்தைச் சந்திரனென்று புறப்பட்ட இராகு அப்பெண்களை மயிலென்று மயங்குஞ் சோலைசூழ்கின்ற மக்கமாநகரத்தில்வந்த (நபிகள்) அலைகிவசல்லமவர்களின் பேரரே என்னை நேசித்து ஆள்வீர்களாக என்பதாம். (உ0)

இனமணிகுவித்து சுண்ணமென் சாந்தா லிலங்கிடு நாயக
ர் றவுலா, தனையுவந்தேகிச் சாற்றினீர் நபிக்குச் சலாமதைச்
சங்கையதுடனே வனைமலர்த் தஸ்பீகு விரலினையுயர்த்தி வழங்
கினாரிரதியு முந்திக், கனைகுரற் களிறு மபதுல்லாமகனே காத்
தருளாபுல்கசனலியே

ப—ரை. இனமணி குவித்து - நவரத்தினங்களைப் பதித்து; சுண்ண மென்சாந்தால் - மிருதுவான சுண்ணச்சாந்தினால்; இலங்கிடும் நாயகர் றவுலா தனை - பிரகாசிக்கின்ற நபிநாயகர் றவுலாவை: யுவந்து ஏகி சாற்றினீர் சலாம் அதனை சங்கை அது உடனே - உவப்போடுபோய்ச் சலாமைச் சங்கையாகச் சொன்னீர்கள்; வனை மலர் தஸ்பீக் விரலினை உயர்த்

தி - அழகிய பூவைப்போன்ற தஸ்பீகு விரலினை உயர்த்தி; வழங்கினா பிர தியும் மூர்த்தி - தாமதமின்றிப் பிரதிசொன்னார்கள்; கனைகுரல் களிறு ஆம் அப்துல்லா மகவே - சத்திக்குங் குரலையுடைய யானைபோன்ற அப்துல்லா (றலி) அவர்களின் புத்திரரே, காத்து அருள் அபுல்கசனலியே - என்னைக் காப்பாற்றியருள்செய்யுங்கள் அபுல்கசனலியே எ-று. றவுலா, நபிநாயக மவர்களின் சமாதிஸ்தானம். தஸ்பீகு விரல், சுட்டுவிரல். அது. அசை. ஏ-விளி.

கருத்து:—நபிநாயகமவர்களின் றவுலாவில் போய்ச்சலாம் சொல் லும்போது தஸ்பீகு விரலுயர்த்திப் பிரதி சொல்லப்பட்டவர்களே அப் துல்லா நாயகமவர்களின் புத்திரரே எனக்குக் கிருபை செய்வீர்களாக என்பதாம். (உ௧)

நித்தியப்பொருளே பொருளினித்தியமே நிதியென நிலை ந்த தாயகமே, சித்தெனவளர்ந்து தெளிதகைக்குரியசெம்மலே லோகநாயகரே, யத்தன்சொற்படியே வைப்பினின் றெவர்க்கு மரும்பொருளளித்த மாதவரே, நித்தநும்பாதங் கதியெனநி ன்றேன் நேசரே அபுல்கசனலியே.

ப—ரை நித்தியப்பொருளே - மோட்ச சம்பத்துடையவரே; பொரு ளில் நித்தியமே - உண்மை விசுவாசத்தி னிலைத்தவரே; நிதியென நிலைந்த தாயகமே - திரவியம்போன் றுயர்ந்திருக்கின்ற பிறர்க்குமிடமாகவந்தவரே; சித்து என வளர்ந்து தெளிதகைக்கு உரிய செம்மலே - அறிவைப்போன் றுளர்ந்து தெளிகின்ற பெருமைக்குரிய அரசரே; லோகநாயகரே - உல கத்துக்கு நாயகமாக வந்தவரே; அத்தன் சொல் படி ஏ வைப்பின் நின்று எவர்க்கும் அரும் பொருள் அளித்த மாதவரே - ஆண்டவனுடைய சொல் லின்படி வைப்பினின்றும் பொன்னெடுத்து வேண்டுபவர்களுக்குக்கொடு த்த மாதவத்தையுடையவரே; நித்தம் நும்பாதம் கதி என நின்றேன் - எப் போது முங்கள் திருவடிகளைக் கதியென்று நின்றேன்; நேசரே அபுல்கச னலி ஏ - என்து அன்புள்ளவர்களே அபுல்கசனலியே எ-று. ஏ. இசைநி றை. ஏகாரங்கள் விளி. வைப்பு-மறைவு. அது ஆலம்வைப்பு.

கருத்து:—அல்லாகுத்தஆலாவுடைய சொற்படி ஆலம் வைப்பினின் றும் பணமெடுத்துச் சதகாகொடுத்த நாயகமே உங்கள் பர்தமே கதியென நின்றேன் அபுல்கசனலியே என்பதாம். (உ௨)

படவரவெடுத்த பாரெலாம் போற்றும் பண்புசேர் மக்கமா நகர்க்குத், திடமுடனேகும் வழியினைப்பயந்து தேசிகர்த்தடுத்தனர் முபுத்தி, யடிநொடிப்பொழுதி னங்குறுபவர்க்கு மவ்விதெனவினிற் கென்னக், தடையவர்க்கின்மை யென்றிடச் சென்றதாட்டிற லபுல்கசனலியே.

ப—ரை படஅரவு எடுத்த பார் எலாம் போற்றும் - படமுடைய பாம்பு சுமக்கும் பூமிமுழுதும் போற்றுகின்ற; பண்புசேர் மக்கமா நகர்க்கு- கற்பனையுடைய மக்கமாநகரத்திற்கு; திடமுடனேகும் வழியினை பயந்து- திடத்தோடுசெல்லும் வழியை அஞ்சி; முபுத்தி தேசிகர்ஜ தடுத்தனர் - முபுத்திவணிகரைத் தடுத்துவிட்டனர் அடிநொடிப்பொழுதின் ஆங்கு உறுபவர்க்கும் அருது எவன் நவில்குதி என்ன - ஓர் அடியால் நொடிப்பொழுதில் (மக்கம்) அங்குபோகின்றவனுக்கும் அவ்விதிஎப்படிச்சொல்லுமென்று நீங்கள் கேட்க; தடையவர்க்கு இன்மைஎன்று இட - அவர்களுக்குத்தடை (மறுப்புவிதி) இல்லையென்று (முபுத்தி) சொல்லிவிட; சென்றதாள் திறல் அபுல்கசனலியே (அசுஹாபுமார்களோடு மக்கத்துக்குச் சென்ற பதவலிமையுடைய அபுல்கசனலியே. எ-று. தேசிகர் இரண்டாம்வேற்றுமைத் தொகை. "முபுத்தி" மார்க்கபிரமாணிகர் உம்மை வினைத்தொகை. உம்மை உயர்வு சிறப்பு எதிர்தழீஇய தெனினும் பொருந்தும். ஏ-விளி.

கருத்து:—மக்கஞ்செல்கின்ற வழியிற் கள்வரைப்பயந்து ஹஜ்ஜாஜிகளை யிசுறு முபுத்தி வழிமறித்திருப்பத் தாங்களந்த முபுத்தியைத் தருவித்து நொடிப்பொழுதில் ஒரு எட்டுவைத்து மக்கம்போகின்றவருக்கு மவ்விதி யெப்படியென அவர்கணமாட் டவ்விதி யின்றென முபுத்தி கூறியதுடனே அங்ஙனம் போயின அபுல்கசனலியே. என்பதாம். (உரு)

அளக்கரையளக்கு மார்தகைக்குரிய வண்ணலே யாதிதன் சமுக, முழுக்கொடுமூர்கைத முன்னிலைப்படுத்து மூதறி ஞான மெய்ச்சுடரே, துளக்கிலார்தாமுந துளக்கினர் சிரசைத் தொல்வினைத் தொடராறுத்தெனது, களக்குறுபாவ மகன்றிடவருள்வீர் கருணைசே ரபுல்கசனலியே.

ப—ரை. அளக்கரை அளக்கும் ஆர்தகைக்குரிய அண்ணலே - பூமியிலிருக்கு மானுடராதிய படைப்புகளை மதித்து நிற்கு நிறைவாகிய தகுதிக்

குரிய இராசரே; ஆதி தன் சமுகம் முழுக்கொடு முரீதைமுன்னிலை படுத்து மூது அறி ஞானமெய் சுடரே - ஆண்டவனுடைய சமுகத்து ஓசையோடு முரீதீன்களை முன்னிலையாக்குவிக்கு முதிர்ந்த அறிவாகிய ஞானமென்னு முண்மையான சுடர்போன்றவரே; துளக்கு இலார் தாமும் சிரசை துளக்கினர் - தலைசாயாதவருந் (தங்கள் தகுதிக்கு) தலைசாய்த்தனர்; எனது தொல்வினை தொடர் அறுத்து களக்கு உறு பாவம் அகன்றிட அருள்வீர் - எனது பழைய வினையின் றொடர்பு அறுத்துக் களங்கம்பொருந்திய பாவம் நீங்கும்படி எனக்கு அருள்செய்யுங்கள்; கருணைசேர் அபுல்கசனலியே - கிருபாகடாட்சஞ் சேர்ந்திருக்கும் அபுல்கசனலியே எ-று. அளக்கர் ஆகுபெயர். சுடர். உவமத்தொகை. களங்கம் என்புழி மெலித்தல் விகாரம்பற்றிக் களக்கமென நின்று சடைகுறைந்து களக்கு என நின்றது. ஏ-விளிகள்.

கருத்து:—பல்லுயிரையு மதித்துக் காப்பாற்றுகின்ற குதுபு நிலைமையைப் பொதிந்துள்ள நாயகமே எனது தொல்வினைப் பவத்தொட ரறுத்து கிருபை பாலிப்பீர்களாக என்பதாம். (உச)

போதகர்குற்றம் பொறுத்திடமிசுறு பூமன்பா லேகிநீர்புகலச், சாதகமாவிபுனு புறுஹவர்நிருபஞ் சாற்றின நுந்தமைச்சொல்ல, வாதலினதற்கென் கூறுதிரென்ன வாதிபா லுமென நடக்குங், போதவராவி பொன்றிட வெழுப்பும் பூபதியபுல்கசனலியே.

ப—ரை. போதகர் குற்றம் பொறுத்திட - உபதேசிகளின் குற்றம் மன்னிக்கும்படி; மிசுறு பூமன்பால் ஏகி நீர் புகல - மிசுறு அரசரிடம் நீங்கள் போய்ச்சொல்ல; நுந்தமை கொல்ல சாதம்மா இபுனு புறுஹ் அவர் நிருபஞ்சாற்றின - உம்மைக்கொல்லும்படி இபுனு புறுஹ் உடைய நிருபஞ் சொல்கின்றது; ஆதலின் அதற்கு என் கூறுதிர் என்ன - ஆனபடியாலதற்கு (நீர்) என்னசொல்லுகிறீரென்று (அரசன்) கேட்க; ஆதி பால் நாம் என நடக்கும்போது; ஆண்டவன் வசத்திலாக நாமிருக்கிறோமென - (நீங்கள்) நடந்துபோகும்போது; அவன் ஆவி பொன்றிட - அவ்வரசரிறந்து; கிடப்ப எழுப்பும் பூபதி யபுல்கச னலியே - (ஹயாத்தாக்கி எழுப்பியபூமிபதியாகிய அபுல்கச னலியே எ-று. சாற்றின துல் விகுதிகெட்டது. ஏ-விளி.

கருத்து:—உலமாக்களின் தண்டனையை விடுக்கும்படி மிசுறரசரிடம் நீங்கள் சொல்லுங்கால் இபுனு புறுஹ் உம்மைக்கொல்லும்படி கடிதம்

விடுத்திருக்கின்றார் எனச்சொல்கிறீரென அரசர் புகல நீரும் நாமும் ஆண்டவன்வசமென்று சொல்லித் தாங்கள் போந்தவுடன் அரசரிறப்ப மற்றவரின் வேண்டுகோளுக்கிரங்கி எழுப்பிவைத்த நாயகமே என்பதாம். (உரு)

புக்கறுவொலிமா ருடைப்பொருட்புரக்கும் புரவல ரொட்டகையிறப்ப, சக்குறுமாது பக்கலில்வந்து சாற்றிட விலை பொருளளிப்பான், மிக்கவென்ஜேப்பின் மேவினீரெடுத்து விலை கொளும்பதிலதற்கென்னை, தக்கவரெடுத்த பொன்னுரைசாற்றற் றகுதியோ வபுல்கசனலியே.

ப—ரை. புக்கறு ஒலிமார் உடை பொருள புரக்கும் புரவலர் ஒட்டகை யிறப்ப புக்கறுக்களாகிய ஒலிமார்களுடைய பொருட்களைக் காப்பாற்றுங் காவலாளரின் ஒட்டகையிறந்துவிட; சக்கு உறுது உமது பக்கலில் வந்து சாற்றிட சந்தேகமின்றி உங்களிடத்து வந்துசொல்ல; பொருள் இலை அளிப்பான் மிக்க என் ஜேப்பின் மேவினீர் எடுத்து பதில் அதற்கு விலைகொளும் என்னை (எனதிடம் பதில்) தரும்பொருட்டுப் பொருள் இல்லை (ஆதலால்) எனது (சட்டை) ஜேப்பி னீங்கள் பொருந்தியதற்குப் பதில்விலை மிக எடுத்துக்கொள்ளுங்களென்று சொல்ல; தக்கவர் எடுத்த பொன் உரை சாற்றல் தகுதியோ அபுல்கசனலியே - தகுந்த அவர் எடுத்த பொன்னின் மாற்றைச் சொல்லுந்தரமாமோ அபுல்கசனலியே எ-று. புக்கறு "சக்கு" என்பன அறபுமொழிகள். ஜேப்பு அன்னியபதம் அதுசட்டைச்சாக்கு. ஓகாரம் எதிர்மறை எ-வி.

கருத்து:—புக்கறுக்களின்பொருளைப பாதுகாத்தவர்களின் ஒட்டகை யிறந்துபோகப் பதில்வேண்டக் கேட்டார் மாட்டுங்கள் சட்டைஜேப்பினின்று மருவிய பொன்னின் மாற்றைச்சொல்ல முடியாது என்பதாம்.

கனவினைம்ம க்கமதீனமென்றுணர்த்துங் காரணம் யாதகுன்கருத்தென் றிவ்வுறவிளங்க வாகவுணர்வா னிசழ்த்திய நவைத்துடைத்திருளை, மனதகத்திழுக்கை மாற்றிவைத்துங்கண் மலர்ப்பதமளித்தெனைப் புரபபீர், கலைகடற்புவியைக் காத்தருள்புரியும் கௌதுயா அபுல்கசனலியே.

ப—ரை. மக்கம் மதீனம் என்று கனவினில் உணர்த்துங் காரணம் யாது - மக்கம் மதீனமென்று (எனது) கனவிடத்து (ஒருவர்) உணர்த்துங்

காரணம்யாதோ?; அதன்கருத்து என் - அதனுடைய கருத்து என்னை?; நினைவு உற நவில் என்று உரைக்கவந்த அவர் - (எனது) நினைவிற்பொருந்தும்படி சொல்வீர்களென்று வினவவந்த அவர்; உணர்வான் நிகழ்த்திய நவைத்து உடை திருமை உணரும்பொருட்டுச் சொல்லிய அற்புதமுடைய பரிசுத்தநாயகமே; மனது அகத்து இழுக்கை மாற்றிவைத்து - (அடியேனின்) மனதிடத்துள்ள வருத்தத்தை மாற்றிவைத்து; உங்கள் மலர் பதம் அளித்து என்னை புரப்பீர் - நீங்களுடைய மலர்போன்ற பாதவருளீந்து என்னைக்காப்பீர்கள்; கலைசடல் புவி காத்து அருளபுரியும் சத்தமிடுஞ் சமுத்திரஞ்சூழ்ந்த பூமிமுழுவதையுங் காப்பாற்றியருள் செய்யுகின்ற; கவுதுயா அபுல்கசனலியே - இரட்சகராகிய அபுல்கசனலியே எ-று. திரு அன்மொழித்தொகை. யா விளி. ஏகாரம் ஈற்றசை.

கருத்து:—மக்கமதீனமென்று கனவிடத்து உணர்த்தப்பட்ட ஒருவர் உங்களிடம் வந்து அக்கனவின்பொருள் யாதென வினவா முன்னம் அதனைச் சொல்லிய நாயகமே, உலகரட்சகரே, அடியேன் மனத்துள்ள வருத்தத்தைத் தீர்த்தருள் செய்யுங்க ளென்பதாம். (உஎ)

கடிமுரசோதை கறங்கிடும்ஸ்கந் தரிநகர்காளியார் கன
விற்; றுடியிடைத்தோகை தோற்றினடீர் தொல்புவிவிடுத்த
னரதற்கா; நெடியனென்னுடலின் விலைகொளும்பாவ நீக்கின
னென்றனளென்று; ரடியைநித்தியமு மண்டினேனென்னை யா
ண்டருளபுல்கசனலியே.

ப—ரை கடி முரசு ஓதை கறங்கிடும் - புதுமண முரசோசை சப்திக்குகின்ற; இஸ்கந்திரிநகர் காளியார் கனவில் - இஸகந்தரிய்யா நகரத்துக் காளியாருடைய கனவிடத்து; துடியிடைதோகை தோற்றினள் - உடுக்கைபோன்ற இடையையுடைய ஒருபெண் தோன்றினள்; தூயர் தொல் புவி விடுத்தனர் - (அவள்சொற்றனள்) தூய்மையுடைய சாதுலிநாயகம் அவர்கள் உபாத்தாகி விட்டார்கள்; அதற்கு ஆ நெடியன் என்னுடலின் விலைகொளும்பாவம் நீக்கினன் என்றனள் என்றார் - அதற்காக ஆண்டவன் என்திரேகத்தைவிற்ற பாவத்தை நீக்கிவிட்டனனென்று சொல்லினளென்றனர்; அடியை நித்தியமும் அண்டினேன் என்னை ஆண்டு அருள் அபுல்கசனலியே - (உங்கள்) பாதங்களை எப்போதும் அடுத்திருப்பவனாகிய என்னை யாண்டருள் செய்வீர்களாக அபுல்கசனலியே எ-று. இஸ்கந்தர் மரூஉமொழி. அது ஆகுபெயரெனினு மமையும். இ-சாரியை. துடியிடை; உவமத்தொகை. தோகை, ஆகுபெயர் ஏ-விளி.

கருத்து:—இஸ்கந்தரிய்யா நகரத்து காளி இமாதுத்தீன்கனவிடத்து ஒருபெண்வந்துதோ நீவேசியன்றோ? நின்னிலைமை அழகாயிற்றேயென த் தூய்தான அபுல்கசனலிநாயகம் உபாத்தாயினவன்று, எழுவான் படு வான் வரையிலுமுள்ள கபுருளிகளின் பிள்ளையை ஆண்டவன் பொறுத்தா ன் அதனோடு எனதுபிழையும் பொறுக்கப்பட்டது என்று அவள்சொன்ன தகுதிபொருந்திய நாயகமே கள் திருவடிகளை விரும்பிய வடியேனைப் பரிபாலித்துக்கொள்வீர்களாக என்பதாம். (உஅ)

துளிமதுப்பிலிற்றுஞ் சோலை யிற்கதம்பத் தோகைகளா டிடஞ்சிமிற; தளிர்மலர்சுவற்றிக் கீதங்கண்மிழற்றுந் தடம்ப ணைகுமைதர் நாயகரே; யெளியரிலெளியேனேதமற்றகல விணை ப்பதந் தந்தெனக்கருள்வீ, ரளிகரக்கொடையீ ரப்துல்லாமக வே யண்ணலே யபுல்கசனலியே.

ப—ரை. துளிமது பிலிற்றுஞ் சோலைவாய் - தேன்திவலை சொரிகி ன்ற சோலையிடத்து; கதம்பத் தோகைகள் ஆடிட - ஆண்மயில்கள் கூத் தாட; ஞிமிறு தளிர் மலர் சுவற்றி கீதங்கள் மிழற்றும் - வண்டினங்கள் த ளிர்த்த புட்பங்களைக்கிண்டித் தேனைக்குடித்து இராகங்களைப் பாடுகின்ற தடம்பணை குமைதர்நாயகரே - விசாலித்த வயல் வழப்பங்களை யுடைய குமைதரென்னு நகரத்து வீற்றிருக்காநின்ற நாயகரே; எளியரில் எளியே ன் ஏதம அற்று அகல - எளியவர்களின் மிக எளியவனாகிய எனது குற்ற ம்நீங்க; இணை பதம் தந்து எனக்கு அருள்வீர் - இருபதங்களைத்தந்து என க்கு அருள்செய்யுங்கள்; அளி கரம் கொடையீர் - கிருபையுடைய கரத்தா ற் கொடை கொடுக்கின்றவரே; அப்துல்லாமகவே - அப்துல்லா அவர்க ளின் புத்திரரே; அண்ணலே - இராசரே; அபுல்கசனலி ஏ - அபுல்கசன் அலியே எ-று. மற்று அசை. ஏகாரங்கள் விளி.

கருத்து:—எளியவரினு மிக வெளியவனாகிய உங்களடியேனுக் கருள் செய்யுங்கள். குற்றம்நீக்கி அப்துல்லாஅவர்களின் புத்திரராகிய அபுல்கச னலியே என்பதாம். (உகூ)

கோனருளொலிக ளளப்பிலரென்கோ கொற்றவ ரளப்பி லரென்கோ, தானைமன்னவர்க ளளப்பிலரென்கோ சான்றவ ரளப்பிலரென்கோ, வானவர்மகளி ரளப்பிலரென்கோ வந்தனை புரிகுவரடிகட், கானனங்குளிர வந்தெனக்கருள்வீ ராரியேயபு ல்கசனலியே.

ப—ரை. கோன் அருள் ஒலிகள் அளப்பு இலர் என்கோ - ஆண்டவனது கிருபைபெற்ற ஒலிமார்கள் அளவிலரென்பனோ; கொற்றவர் அளப்பு இலர் என்கோ - இராசர்கள் அளவிலரென்பனோ; தானை மன்னவர்கள் அளப்பு இலர் என்கோ - படைத்தலைவர்கள் அளவிலரென்பனோ; சான்றவர் அளப்பு இலர் என்கோ - அறிவையுடைய உலமாக்கள் அளவிலரென்பனோ; வானவர் மகளிர் அளப்பு இலர் என்கோ மலக்குகளும் கூறுல்லீன்களும் அளவிலரென்பனோ; வந்தனைபுரிகுவார் அடிகள்கு - வணக்கஞ் செய்வார்களுங்கள் பாதங்களுக்கு; ஆனனம் குளிர வந்து எனக்கு அருள்வீர் - முகங்குளிர வந்தெனக்குக் கிருபைசெய்வீர்களாக; ஆரிபே அபுல்கசனலியே - ஆரிபாகிய அபுல்கசனலியே எ-று. ஓகாரங்கள் ஆச்சரியக்குறிப்பு. எதிர்மறையெனினும் பொருந்தும். வானவர் மகளிர். உம்மைத்தொகை. கு. நான்கனுருபு. ஏ-விளி.

கருத்து:—அளவில்லாத ஒலிகளும், இராசர்களும், படைத்தலைவர்களும், உலமாக்களும், மலக்குகளும், கூறுலீன்களு முங்கள் பாதங்களுக்கு வந்தனைசெய்யும்படியாகிய நாயகமே முகங்குளிர வந்தெனக் கருள்செய்வீர்களாக என்பதாம். (௯0)

காரியமெவைக்குங் காரணப்பொருளே கதிக்கெனக் கருமருந்தனையீர், வாரணஞ்செறிந்த வனத்தினுமற்றை வழியினுமெங்கணுந்துணையாய்ப், பூரணமாகப் புரப்பிரன்புடனே புண்ணிய தவநிறைக்குன்றே, தாரணிபுயத்துவலிமிகச்சிறந்தசாகிபே யபுல்கசனலியே.

ப—ரை. காரியம் எவைக்குங் காரணபொருளே - தொழிலெவைக்கும் பிரதான குணமுடையவர்களே; கதிக்கு எனக்கு அருமருந்து அனையீர் - மோட்சஞ்சேர்வதற்கெனக்கு அருமருந்துபோன்றவரே; வாரணம் செறிந்த வனத்தினும் - யானைநிறைந்த காட்டிலும்; மற்றுஐ வழியினும் எங்கணும் துணை ஆய் வேறுவழிகளினு மெவ்விடத்திலுந் துணையாய்ப்; பூரணம் ஆக அன்புடன்புரப்பிர் - நிரப்பமான அன்போடுகாப்பீர்கள்; புண்ணியம் தவம் நிறை குன்று ஏ - திவ்வியமான வணக்கம்நிறைந்த மலையே; தார் அணி புயத்து வலி மிக சிறந்த சாகிபு அபுல்கசனலியே - மாலையணிந்த புயவலி மிகச்சிறந்த சாகிபே அபுல்கசனலியே எ-று. ஐ அசை. ஏ தேற்றம். ஏகாரங்கள் விளி.

கருத்து:—யானைகள்செறிந்த காட்டினும் மற்றுமிடங்களினு மொரு இடரும்வாராது துணையாயிருந்து காப்பாற்றிக்கொள்ளுங்கள் அபுல்கசன் அலியே என்பதாம் (நுக)

நாயகர்முகியித் தீனொலிபுகழை நவின்றிடி னும்புகழாமெ
ன், றுயநும்புகழே யவர்புகழாமென் றறைந்தன ரகுமதுல்கு
றைசி, தூயகாருண்ய சுகிர்தமாதவ வென்றொடர்பவ வினையறு
த்தாளு, மேய்சுனை வாளை யுகட ருங்குமைத ரேந்தலே யபுல்கச
னலியே.

ப—ரை. நாயகர் முகியித்தீன் ஒலி புகழை நவின்றிடில் - எவர்க்கு நாயகமாகிய முகியித்தீனாண்டவர்களின் புகழ்ச்சியைக் கூறினால்; நும்புகழ் ஆமென்றுய உங்களுடைய புகழாமென்றாகியது; நும்புகழே அவர்புகழ் ஆமென்று அகுமதுல்குறைசி அறைந்தனர் உங்களுடைய புகழ்கள் அவர்களுடைய புகழ்களாகுமென்று அகுமதுல் குறைசி சொன்னார்கள்; தூயகாருண்ய சுகிர்தமாதவ தூய்மையாகிய கிருபையுடையவரே, சன்மார்க்கதவத்தை யுடையவரே என்றொடர்பவவினை அறுத்து ஆளும்-என்னைத்தொடர்கின்ற பாவச்செயலை யறுத்தாட்சி செய்வீர்கள்; எய் சுனை வாளையுகள் தரும் குமைதர் எந்தலே அபுல்கசனலியே - பொருந்தியசுனைகளில் வாளைமச்சம்பாய்கின்ற குமைதர் நகரத்து இராசரே அபுல்கசனலியே எ-று ஆய்தநியமெனத் தால்விதகி கெட்டது. எற்றொடர் இரண்டனுருபு தொக்கது. ஏ-தேற்றம் ஏ-விளி.

கருத்து:—நாயகராகிய முகியித்தீனாண்டவர்களின்புகழைக்கூறினால் உங்கள்புகழாமென்று முங்கள்புக ழவர்கள் புகழாகுமென்றும் அகுமதுல் குறைசி சொன்னார்களே யப்பேர்ப்பட்ட அபுல்கசனலி நாயகமே என்னைத்தொடர்கின்ற பவவினையைமாற்றி யாட்சிசெய்வீர்களாக என்பதாம். ()

முகிறவழ்சிகரக் குடுமியம்மாட மொந்தணி சந்திரகாந்த
நகுகதிரிதரப் பரிதகையாற்று கனிசுனை மக்கமாநகரிற்
திகழ்தரவந்த நபிதிருப்பேரா செழுமலர்ப் பதமெனக்கருள்வீ
ரகிலகோளாண்டவற்புதக் கடலே யண்ணலே யபுல்கசனலியே.

ப—ரை. முகில் தவழ் சிகரம் குடுமி அம் மாடம் - மேகந்தவழுகின்ற உயர்ந்த சிகரத்தையுடைய அழகிய மாடங்களில்; மொந்து அணி சந்தி

ரகாந்தம் நகுகதிர் - திரட்சியுடைய சந்திரகாந்தக்கற்கள் ஒளிபிரகாசிக்கின்ற சூரியனது; இரதம் பரி தகை ஆற்றும் நனி சுனை மக்கமாநகரில் - இரதத்தின் குதிரையின் தளர்வை யாற்றுகின்றதும் பெருமைபொருந்திய சுனையருவிகளுள்ளதுமான மக்கமாநகரத்தில்; திகழ்தரவந்த நபிதிருப்பேரா - பகிரங்கமாகத் தோன்றிய நபி (சல்) அவர்களின்பேரரே; செழுமலர் பதம் எனக்கு அருள்வீர் - செழுமையான மலர்போன்ற திருவடியை எனக்குத்தாருங்கள்; அகிலமேகாள் ஆண்ட அற்புதக் கடலே உலகமுழுவதையு மரசாட்சிசெய்யு மற்புத சமுத்திரமே; அண்ணலே அபுல்கசனலியே அரசரே அபுல்கசனலியே எ-று. சந்திரகாந்தம், சந்திரன்சந்நிதியி னீர்காலுங்கல். ஏகாரங்கள்-விளி.

கருத்து —சூரிய பரி வெம்மையாற்றுகின்ற மாடங்களுஞ் சுனைகளுஞ்சூழ்ந்த மக்கநகரநபிநாயகத்தின் பேரரே, உங்கள் திருவடியருள்தாருங்களென்பதாம். (௩௩)

மாந்தளிர்மேனி மடந்தையர் குடைந்தா டிடுமலி வாவியிற்கழுநீர், சாந்தணிமுலையார் முகமதிக்கலருந் தடமதிகழ் குமைதராண்டகையே, காந்தளங்காத்தா லெனையணைத்துவந்து கருணைநித் தியம்புரிந் தாளுஞ், சாந்தசற்குணரே சர்வவற்புதரே சாகிபே யபுல்கசனலியே.

ப—ரை. மாந்தளிர்மேனி மடந்தை அர்குடைந்து ஆடிடும் மலிவாவி இல் - மாந்தளிர்போன்ற மேனியுடைய பெண்கள் நீராடுகின்ற மிகுதியாகிய வாவிகளில்; சாந்து அணி முலையார் முகம் மதிக்கு கழுநீர் அலரும் - சாந்தமணிந்த தனமுடைய பெண்களின் முகமாகிய சந்திரனுக்குச் செங்கழுநீர்ப் புட்பமலர்கின்ற: தடம் திகழ் குமைதர் ஆண் தகையே - தடாகம் விளங்கிய குமைதர்நகரத்தின்கண் வாழ்கின்ற தலைமையான தகுதியுடையவரே; காந்தள் அம் கரத்து ஆல் எனை அணைத்து உவந்து நித்தியம் கருணை புரிந்து ஆளும் - காந்தண்மலர்போன்ற அழகிய கரத்தினு லெனையுவந்தணைத்து நிதமும் கிருபைபுரிந்தாளுங்கள். சாந்தசற்குணரே - சாந்தமாகிய நற்குணத்தையுடையவரே; சர்வ அற்புதரே-எல்லாவற்புதங்களையுமுடையவரே; சாகிபே - அன்பானவரே; அபுல்கசனலியே - அபுல்கசனலியே எ-று. முகமதி, பண்புத்தொகை. அர் விகுதி. ஆல் மூன்றனுருபு. ஏகாரங்கள் விளி.

கருத்து:—சிறந்த குமைதர்நகரத்து நாயகமே என்னை யன்புடனணைத்துக் கிருபைபுரிந் தெப்போதுங் காப்பீர்களாக என்பதாம். (௩௪)

சூடுடையன்னம் பெடையொடுந்துயிலுந் தூனிசு நகரிடன் மேவி, பாடணிசரீ அத்தினில்முகளோதிப் பயன்றரு ஞானநூலோர்ந்து, பீடுறவெங்கும் பெருமையிற்சிறந்தோய் பேதமற் றகன்றிட நுந்த, மேடவிழ்வனசப பதமெனக்கருள்வீ ரேந்தலே யபுல்கசனலியே.

ப—ரை. சூடு உடை அன்னம் பெடை ஒடும் துயிலும் - சூட்டையுடைய அன்னப்பட்சி யதன்பெடையுடனே நித்திரைசெய்கின்ற; தூனிசு நகர் இடன் மேவி - தூனிசுநகரத்துக்குப்போய்; பாடு அணி சரீ அத்து இல்முகள் ஓதி குணமணிந்த சரீஅத்தினது இல்முகளைப்படித்து; பயன்தரு ஞான நூலோர்ந்து - பிரயோசனந்தருகின்ற ஞான நூல்களையுமுணர்ந்து; பீடு உற எங்கும் பெருமையிற்சிறந்தோய் - பெருமைபொருந்த எங்குங் கீர்த்தியிற்சிறந்தவரே; பேதம் மற்று அகன்றிட - (எனது) மனப்பேதமையகல; நும் தம் ஏடு அவிழ் வனசம் பதம் எனக்கு அருள்வீர் - உங்களுடைய இதழ்விரிந்த தாமரைமலரையொத்த திருவடிகளைத்தந்து எனக்கருள்செய்யுங்கள்; ஏந்தலே யபுல்கசனலியே - அரசரே அபுல்கசனலியே எ-று. சூட்டுடை சூடுடையென இயல்பாயிற்று. மற்று அசை. தம் விகுதி வனசம் ஆகுபெயர். ஏ-விளி.

கருத்து:—சரீஅத்தாகியகல்விகளை தூனிஸ்முதலிய பட்டணங்களிற் போந்து படித்தநாயகமே, எனது வேற்றுமையகலும்படி அநுக்கிரகம்பாலிப்பீர்களாக என்பதாம். (நடுரு)

கம்பளியுடுத்த வொலியுறுஞ்சபையிற் காண்டகும் வெடிப்புடையுடுத்து, நம்புமெய்ஞ்ஞான மொழிபலநவில நாடினரிவருடையழகு, கம்பிதப்பெருமை காட்டினதென்னக் கர்விலாதவர்தமைநோக்கி, வம்பினின்னுடையே யவ்வகைத்தென்ன வகுத்துரை யபுல்கசனலியே.

ப—ரை. கம்பளி உடுத்த ஒலி உறும் சபை இல் - கம்பளியுடுத்திய வொலியிருக்கின்ற சபையில்; காண்தகும் வெடிப்பு உடையுடுத்து - காட்சிதகுதியாகின்ற வெடித்த வுடைகளணிந்து; நம்பு மெய் ஞானமொழி பலநவில - நம்புகின்றமெய்ஞ்ஞான வறிவறிவு பலவாகச்சொல்ல; இவர் உடை யழகு கம்பிதம் பெருமைகாட்டினது என்னநாடினர் - இவருடுத்திய வுடையினழகு நடுங்குதலைத் தருகின்ற பெருமையைக் காட்டினதென்

ன நாடினர்; கரவு இலாது அவர்தமை நோக்கி - வெளிப்படையாக அவ ரைப்பார்த்து; வம்பு இல் நின்னுடை ஏ அவ்வகைத்து என்ன - வாசனையி ல்லாத நினது உடைதான் (பெருமையாகிய) அவ்வகையுடையது என்று; வகுத்த உரை அபுல்கசனலியே எ-று. து, விகுதி ஏ. தேற்றம் எனினும் அமையும். ஏ-விளி.

கருத்து:—தாங்கள் ஞானஇல்முக ளோதுஞ்சபையில் சம்பளியுடுத் திய ஒலியொருவர் தங்களுடையைக் குறித்து இவருடையானது இவர் கூறும் ஞானத்துக் கேற்றவாறிராது பெருமையைக்காட்டுகின்றதென நா டுமுன்னர் நின்னுடையே அவ்விதமுளதென்று அச்சபையிராது துரத்தி விட்ட நாயகமே என்பதாம். (௩௯)

மிடிபிடித்தயரு மூரவர்க்கிரங்கி மேலணி யங்கியின்சே ய்ப்பி, னடிகொடுத்தப்பம் வாங்கிநீரருள வவனிது செலாதெ னவறைந்தா, னுடைசிலவீடு கொடுத்துமுன்றலத்தே யொதுங் கினீ ருடையவனருளாற், றடையறகிலுறு பொருள்கொடுமீட் டும் செய்குயா வபுல்கசனலியே.

ப—ரை. மிடிபிடித்து அயரும் ஊரவர்க்கு இரங்கி - வறுமைபிடித் துத்தளரு மூர்ச்சனங்களுக்கிரங்கி; மேல் அணி அங்கியின் சேய்ப்பின் - சரீரத்திலணிந்த சட்டையினது சேய்ப்பில்; அடி கொடுத்து அப்பம்வாங்கி நீர் அருள - பொற்பணங்கொடுத்து உணப்பொருள்வாங்கி நீங்கள்கொடு க்க; அவன் இது செலாது என அறைந்தான் - (உணப்பொருட்காரன்) இப்பணஞ்செல்லாதெனச் சொன்னான்; உடை சில ஈடு கொடுத்து (அவ னுக்கு உங்கள்) உடைகளிற் சிலவற்றை ஈடாகக்கொடுத்து; முன் தலத்தே ஒதுங்கினீர் - முன்னின்ற தானத்தில் ஒதுங்கிநின்றீர்கள்; உடையவன் அருளால் - ஆண்டவனது உத்தரவினால்; றடை யற கிலுறு பொருள்கொ டுமீட்கும் - (அவனுக்கு முங்களுக்கு மிடையுள்ள தடை யகன்றுவிட கிலு று (அலை) பொருள்கொடுத்து மீட்டிவிடும்; செய்குயா அபுல்கசனலியே - செய்காகிய அபுல்கசனலியே எ-று. அடியென்பது தாது. அஃது பொன் றூதியேழினென்று. ஏ, இசைநிறை ஏ-ஈற்றசை.

கருத்து:—பஞ்சத்தால் வருந்து மூரவர்களுக்குத் தங்களின்சேய்ப்பி ற்கையிட்டுப் பொருள்கொடுத் துண்டிவாங்கிக் கொடுக்கக் கடைக்காரன்

பணஞ்செல்லாதென தாங்கள் முன்னின்ற விருட்சத்தடியில் ஒதுங்கி னீர் - அப்போது ஆண்டவனுத்தரவுகொண்டு நபிகிலுறு (அலை) அவர்கள் வந்து பொருட்கொடுத்துத் தடைநீக்கிவிட்ட அபுல்கசன்லி நாயகமே என் பதாம். (௩எ)

மொழிவழிக்கொழுகு மஸாயிமைநோக்கி முதுநகரிஸ்கந் தர்போந்து, வழுவகலிருபங் கொடுத்தெதிர்மொழியை வாங்கி யிங்கடைகென வனுப்பி, வழியதிற்றுணையா வெண்பதுசகத் திரவானவ ரீண்டிடச்செய்தோய், பழிபவத்துடைய பையனுக் கிரங்குமபார்த்திப ரபுல்கசனலியே

ப—ரை மொழி வழிக்கு ஒழுகும் அஸாயிம்ஐ நோக்கி - (தங்கள்) சொ ற்கமையும் அஸாயிம் என்பவரைப்பார்த்து; முதுநகர் இஸ்கந்தர் போந்து பழையநகரமாகிய இஸ்கந்தரியாவிற்போய்; வழு அகல் இருபங்கொடுத் து - வழுவில்லாத விருபத்தைக்கொடுத்து; எதிர்மொழி ஐ வாங்கி இங் கு அடைக என அனுப்பி - பதில்வார்த்தையை வாங்கி இங்கு வருவீராக என்று சொல்லி அனுப்பிவைத்து; வழி அதில் துணை ஆ எண்பது சகஸ்தி ரவானவர்-வழியிற்றுணையாக எண்பதினாயிரம் மலக்குகளை; ஈண்டிட செய் தோய் - சூழ்ந்து நெருங்கிவரும்படி செய்தவரே; பழி பவம் அத்து உடை ய பையல் உக்கு இரங்கும் - பழியையும் பாவத்தையுமுடைய (உங்கள்) பய லுக்கிரங்குங்கள்; பார்த்திப ரபுல்கசனலியே - அரசராகிய அபுல்கசனலி யே எ-று. பழி, பவம். என்புழி உருபு மும்மை மொருங்கே தொக்கன. அ த்து சாரியை. எ-விளி.

கருத்து:—உங்கள் சொற்கமையும் அபுல அஸாயிமுக்கு வழித்துணை யாக எண்பதினாயிரம் மலக்குகளை யனுப்பிவைத்தவர்களே பழிபாவமுடை ய உங்க ளடியேனுக்கிரங்குங்கள் என்பதாம் (௩அ)

ஒழுகொழிவிரிநத கலைமதிமுகமு மொண்ணுதற் பவளச் செவ்வாயும், வழியளிகரமும் வண்ணவாய்த்திவலை வயமொழு க்கியறரும் வாக்குஞ், செழிதருஞ்செய்ய நறுமணமெய்யுஞ்சிற ந்தசெந் தாமரைப்பதமும், விழிகொளவடியேன் காண்குநா ளென்றோ விழைதவத் தபுல்கசனலியே.

ப—ரை. ஒழுகு ஒழி விரிந்த கலைமதிமுகமும் - வழிகின்ற வொளி வீசிய பூரணகலையேறிய சந்திரன்போன்ற திருமுகத்தையும்; ஒள் நுதல் - ஒள்ளிய நெற்றியையும்; பவளம் செவ்வாயும் - பவளமொத்த சிவந்தவா யையும்; வழி அளி கரமும் - முறையே கொடைகொடுக்குங் கரத்தையும்; வண்ணம் வாய் திவலை வயம் ஒழுக்கு இயல்தரும் வாக்கும் - அழகிய வா ய்த்திவலைத் துளியினது வலிமையு மொழுக்கமு மியல்புந் தருகின்ற வார் த்தையையும்; செழிதரும் செய்ய நறுமண மெய்யும்-செழித்த நன்கிதாகிய வாசனையுடைய திரேகத்தையும், சிறந்த செந்தாமரை பதமும் - சிறப்புற் ற செந்தாமரைமலர்போன்ற பாதங்களையும், அடியேன் விழிகொழ காண் கும்நாள் என்றோ - உங்க ளடியேனுடைய கண்கொள்ளும்படி காண்குநா ளெப்போதோ, விழைதவத்து அபுல்கசனலியே - விரும்பிய தவத்தையு டைய அபுல்கசனலியே எ-று. ஒ, ஐயம்பொருட்டு. ஏ-விளி

கருத்து:—உங்களுடைய சந்திரனொத்த முகத்தையும் ஒளிபொருந்தி யநெற்றியையும், சிவந்தவாயையும், கொடைக்கரங்களையும், இனித்தபே ச்சையும், வாசனைபொருந்திய சரீரத்தையும், தாமரைமலர்போன்ற திரு வடிகளையும் அடியேனுடைய கண்களிக்க வெப்போதுகாண்பேனோ என்ப தேயாம். (௧௯)

முனாஜாத்துகள் முற்றிற்று.





மேற்படி

சாதுலி நாயகம்பேரிற் பாடிய

# பஃறொடைவெண்பா.

வானவர்க ளுல்வர் வகைபுட் குலமொலிக
டானயங்கொண் டென்றுந் தகையறிவர்—கோனருளே
குன்றா திரப்பவர்க்குக் கூறாதுறுஞ் சேய்ப்பி
னன்றாடகமருளு மாண்டகையர்—என்றென்றுந்
தேடா தருமருந்தாய்த் தேக்குற்ற தேங்கனியாய்
வாடா தரும்பலரும் வாவியனார்—நாடோறும்
வந்தணையு நோயும் வழிகெடும் புன்பகையும்
சிந்தணையு மென்றுஞ் சிதறிவிடத்—தொந்தமுடன்
கந்தடரும் வேழக் கருதலருந் தாடொழுதே
யுந்துவழிக் கேயொழுகி யுட்பூப்பச்—சந்ததமுந்
தாயில்லாக் கன்றதுபோற் றாவியழு மெம்மவர்க்கு
வாயில்லார்ந் தேயினிக்கும் வண்ணமுத—மோய்வில்லா
வுச்சத்தி னின்ற வுவாமதியு மொவ்வாதென்
பட்சத்தி னின்றலவும் பார்தீபம்—இச்சித்து
பாரவினை நீக்கிப் பலன்பெற்று நில்லென்ற
கோரமகூ லெங்கண் குலக்கொழுந்து—நேரணையத்
துஞ்சாது வென்றிநயந் தோற்றும் பெருஞ்செல்வ
மஞ்சா தெவர்க்குமரு ளாபரணம்—எஞ்சாது
வேண்டுங் கருமங்கள் வேண்டா தனவென்றுந்
தேண்டு நயத்தருளுந் தெள்ளமுது—பூண்டொழுகுங்
கைவிரலாற் காட்டிக் கனகபதி சேர்ப்பிக்கு
னைவிரா ஞான நயத்தண்பூப்—பொய்வராக்

காய்த்துக் கனியுதவு கற்பகமுங் கைக்கொவ்வா
வாய்த்துக் கதிக்குதவும் வண்மருந்து—போய்த்தொழுவார்
புந்தி வினைநீக்கிப் புளகித் தறநெறியை
சிந்தா தறிதகைக்குஞ்—செங்கரும்பு—முந்துதவத்
தோங்கறிவி னுள்ள வொளிகளுந்தன் மேற்பாதந்
தாங்கிச் சுமக்குமொரு தக்கவராம்—பாங்கினுறு
பாந்தளுரை தெளித்த பார்புகழார் நன்னயிசொற்
கேந்து வழியுரைக்கு மேராளர்—சாந்தமுறுங்
காவலரை நாடிக் கவலையற வேண்டுமெனிற்
சாவைத் தடுக்குமுயர் சஞ்சீவி—தேவர்தொழு
சாதுலியா வென்னுமந்தஞ் சாருந் தீக்கதனை
வாதமுறு தேயளித்த வண்மையராஞ்—சீசமுறுக்
கட்டிவைத்த கைப்பொருளிற் காணுங் களஞ்சியமாய்ப்
பெட்டிவைத்துப் பேணும் பெருநிதியம்—நட்டனையத்
துன்னி மனமொழுகி யுடபுகுந்தார் தங்களுக்குக்
கன்னிசொற்கங் காட்டுங் காவலராந்—துன்னுதவ

மெய்க்குங் குமைதர்நகர் மேவிநமர்க் கின்னருளே
துய்க்கும் புகழ்சா துலி.

பஃறொடை வெண்பா முற்றிற்று.



இஃது வண்ணம்

## நெடிலடிக் கலிவிருத்தம்.

தனந்த தானந்-தந்தன-தனனதன-தனதானா.

அலங்கமுறவுந் திண்புயநபிதிரு மகபோரா
துலங்குமானக் குங்கும வரையுறை பெருமானே
கலத்தபூவிற் காண்பது யிலையெனக் கழித்தோரே
பலத்த வபயத் திவ்வியபதமரு டருவீரே
யுலந்தகூவற் கொங்கெழு மறற்றரு குணசீலா
கலத்தமானசு கத்தனி ஞெலிகளின் மகமேரா
நிலத்தடாகம் பாங்குறு குமைதரி னெறியாளா
வுலந்திகழும் பொற்புய கசனலி யொலிநாதா.

வண்ணம்.

## சிந்தடிவஞ்சி விருத்தம்.

தனதன - தனதன - தனதன - தனதன.

கனதவ முடையவர் கதிவழி நெறியினர்
தினகர னமரருஞ் சொலுவழிக் கொழுகுவர்
மனநிலை மகிழுற வவரருள் பெறுகுவிர்
நினவினி நலையினி நிதியென வலைகுவன்
நிவமுறு மொலிநுத லிலைபத மதனையே
நவமுறு மபுல்கச னடுநிலை யுடையரே. (௨)



இஃது

## இருதுள்ளல்கொண்ட கலையால்வந்த

வண்ணம்.

தந்தனந் தந்த தனதந்தனந் தந்த தனதந்தனந் - தந்ததன
தனதானா.

மண்டலந் தங்குகலை திங்களுங் கண்டயரு
மன்றலுந் தந்தமுக—மடமாதர்
துன்றிடுங் கும்பமுலை கண்டுநின் றென்றுமய
ரொண்டுசெய் தண்டிமன—முழல்வேனே
கொண்டல்வந் தன்றுகுடை சென்றிடந் தந்ததிருக்
கொந்தரும் புண்டபுய—நபிபேரா
வண்டுபண் சிந்துநற வுண்டிடு மொண்சுவனத்
தம்புற துண்டுபொறித்—திறைபாலி
னண்டிநின் றொன்றுநெறி கொண்டவர்க் கன்றுதவி
தந்தனந் தந்தவென—தனதானா
வஞ்சகம் மிஞ்சியபொய் கொண்டிடுந் தொண்டனெநுந்
தஞ்சமென் செஞ்சரண—மருள்வீரே

சண்பக நெல்லிமடு வண்டல்செய் கின்றகரை
சங்கினந் தங்குமுத்—தொளிர்சோலை
தென்றலுஞ் செங்கதிரு மங்குலுந் தங்குமயர்
செகுபருன் குன்றினுறை—பெருமானே (ரு)

வண்ணம்முற்றிற்று.



# இவை
# சித்திரக்கவிகள்.



(மாலைமாற்று.)

வேதா தாரா வேரா நீதா, நீமா கோமா நாரா தீகோ
கோதீ ராநா மாகோ மாநீ, தாநீ ராவே ராதா தாவே.

ப—ரை. வேதா - வேதத்தையுடையவரே; தாரா மாலையையுடையவரே; வேரா - மூலமானவரே; நீதா - நீதியுடையவரே; நீமா கோமா - வலிமைதங்கிய குருவானவரே; நாரா தீகோ அன்புமுதலானவைகளுக்குத் தலைமையாளரே; கோது ஈர் ஆநாமா - குற்றந்தீர்க்கின்ற வியப்பான சாதுல்லியென்ற நாமத்தையுடையவரே; கோமா - அரசரானவரே, நீரா அன்பாளரே; ஏரா-அழகையுடையவரே; தாதா-கொடையையுடையவரே; நீதா (நல்லருளை) நீங்கள்தருவீர்களாக எ-று.எ-ஈற்றசை.

(திரிபங்கி)

அதாவது:—ஒருசெய்யுளாறுறுப்பமைந் தொரு பொருள் பயப்பதனை மூன்றாகப் பிரிக்கத் தனித்தனி மூன்றுசெய்யுளாய் முடிவது.

கட்டளைக்கலித்துறை.

காதரஞ்சேர்குறை யான்மதியீர்கதி மாதவத்தீர்
போதநெஞ் சார்பொறை யேதொகை யீர்பொதி பூசனத்தீர்

சேதனத்தீர்செறி யோர்புக ழீர்திதி சேர்கலையீர்
நீதிநண் பீர்நிறை நீணிதியீர்நித மாளுதிரே.

இதைப் பிரிக்கப்படு மூன்றுசெய்யுட்கள்.

வஞ்சிவிருத்தம்.

காநரஞ்சேர், போதநெஞ்சார்
சேதனத்தீர், நீதிநண்பீர்.

குறையாமதியீர், பொறையேதொகையீர்
செறியோர்புகழீர், நிறைநீணிதியீர்.
கதிமாதவத்தீர், பொதிபூசனத்தீர்
திதிசேர்கலையீர், நிதமாளுதிரே.

(அட்டநாகபந்தம்)

அதாவது:—எட்டுநாகங்கள் தம்முளிணைவனவாக எழுதி ஒருசெய்யுள்பாடி அவ்வெட்டுநாகங்களினும் மாறிமாறியெழுதச் சந்திகடோறு மவ்வெழுத்தே யொன்றிவருவது.

வெண்பா.

நாகூ ரதழ்ந்த நளின முகைதாவி
பாகூ ரவியே பயமேவா—கோவூரா
பான்மிக்க பாழி பதிதுதி நாதநீ
கோனுற்ற நீத குணு

(முரசபந்தம்)

அதாவது—ஒருசெய்யுளை ஓரடி யொருவரியாக நான்கடி யெழுதி மேலிரண்டுவரியுந் தம்முட் கோமூத்திரியாகவும் கீழிரண்டுவரியும் தம்முட் கோமூத்திரியாகவும் சிறுவார்போக்கி மேல்வரி இரண்டாம்வரியினும் மூன்றாம்வரியினும் நான்காம்வரியினும் கீழூற்றுமீண்டு மேனோக்கவும், கீழ்வரியினுமவ்வாறே மேலுற்றுமீண்டு கீழ்நோக்கவும் பெருவார்போக்கி இந்த வார் நான்கும் நான்கு வரியாகவும் பாடுவது.

## வஞ்சிவிருத்தம்.

போதநீத புனீதவ, போதநீத புனீதவ
சாதரூப சரீரவ, சாதரூப சரீரவ.

(சதுரபந்தம்.)

அதாவது:—ஒருநிரை யெட்டாக அறுபத்துநான்கறைகீறிக் கடைநிரை நான்கினு மொருசெய்யுளி னீற்றடியை யெழுதி ஏனைய மூன்றடிகளையு முதற்றொடங்கிச் சதுரங்கமாகவெழுத அவ்வீற்றடி யெழுத்துக்கள் ஆங்காங்கியைய வருவது.

## வெண்பா.

சோதியறி சூழ்பயனே சூட்டிவளர் சாதுலியே
போதினையோ ராதமனன் பொன்றிடக்துக்—காதலுடன்
மீதினைத மற்றவாவி தானமேய வேமேயி
னேதினே மாதநீத வே.

(ஏகபாதம்.)

## கலிவிருத்தம்.

சாரங்கஞ்செறி சாதுலிநீதவே, சாரங்கஞ்செறி சாதுலிநீதவே
சாரங்கஞ்செறி சாதுலிநீதவே, சாரங்கஞ்செறி சாதுலிநீதவே.

ப—ரை. சார் அங்கம் செறி - பகுக்கின்ற வேதாங்கத்தை யுடைய; சாதுலி நீத ஏ - சாதுலியெனுந் திருநாமந்தரித்த நீதரே; சாரம் கம்செறி சாது இல்லி - (உங்கள் தவநடையானது ஆகாயலோகமும் பரவிய குணத்திற் கில்லிடமானவரே; நீதம் ஏசு ஆர் அங்கு அஞ்சு எறி சாது இலி - உலகபாக்கியமென்னுங் குற்றமுழும் வழிப்பயங்கரமெறிதலிற் பதமையில்லாதவரே; நீதவே - நீதிமானே; சாரங்கம் செறி சாதுலி - பூமியிற் பொருந்து நற்றலமாகிய சாதிலாவென்னும் நகரத்தில் வசித்தவரே; நீத ஏ - நியாயமுடையவரே எ-று.

ஏ-இசைநிறை. இல்லியென்பது-இலியென இடைகுறைந்தது. ஏ-ஈற்றசை.



குதுபுல் உஜூது செய்கு முகம்மது பாசி அஜ்வாத் றகுமதுல்லா
அவர்கள்பேரி லியற்றிய

# பதிகம்

கட்டளைக்கலித்துறை.

முத்திக்கரும்பய னான்மறை நாதன் முதமலியச்
சித்திக்கரும்பய னாடொறு மேபெறுஞ் சீர்த்திநயப்
பத்திக்கரும்பய னாயகமக்கப் பதியொ டெங்குந்
தித்திக்கரும்பயன் சூழ்பாசி செய்கு முகம்மதுவே.

இ—ள். பரகதிக்கு மரிதான பயன்செறிந்த நான்குவேதத்தையுமுடைய கடவுளிது உவகைமிகுத்தவரே, அறிவுக்கரிய பயனை நாட்கடோறு பெறு மிகுபுகழ்செறிந்த நயத்தையுடையவரே, வழிபாட்டுக்கு மக்கம்முதலிய பதிகளுட னெங்கு மருமைதங்கிய நாயகமே, இனிமையுடைய கரும்புகள்செறிந்த தடாகஞ்சூழ்ந்த பாசியென்ற ஊரையுடைய செய்கு முகம்மது ஒலியே எ-று.

முத்தி-மோட்சம். அரும்பயன்-அரியபயன் சித்தி-அறிவு. அரும்பயன்-அருமைதங்கியபயன் தித்தி-தித்திப்பு. கரும்பு-கன்னல். அய்ம்-தடாகம். (க)

மைக்குடை நாயகர் மாநபித்தம்மை மகிழ்ந்துமேவு
கைக்கொடை யாவெதிர் காணிற்பல் பேசுநற் காரணத்தீர்
நெக்குடன் மேய பிணிபல நீக்கி நெறிபடுநுங்
கைக்கொடையா லென்னைக் காக்கனசெய்கு முகம்மதுவே

இ—ள். மேகக்குடையினையுடைய நபிநாயகமவர்களைக் காணுந்தோறுங் களிப்புற வுரிமையுடன் முன்பின் னேகம்பேசுகின்ற காரணத்தையுடையவரே. நெகிழ்ந்த வெனதுடலினிடத்து மேவிய பலநோய்களையு நீக்கி யொழுக்கமுறு நுமதுகரத்தா லளிக்குங் கொடையினது பலத்தினு லென்னைக் காத்துக்கொள்வீர். கனதியுடைய செய்குமுகம்மதொலியே எ-று (உ)

சங்கையிக் காலத்தி னெங்குநிறைந்த தகைக்குதுபே
தங்கையெக் காலத்துஞ் சார்கலனது தங்குதற்கே
யங்கையிக் காலத் தலமரு மேழையை யாதரிப்பீர்
எங்குமுக் காலத்து மேவளர்செய்கு முகம்மதுவே.

இ—ள். மதிப்புடைய விக்காலத்தி னெவ்விடத்தும் பிரக்கியாதிபெற்ற பெருமையுடைய குதுபே, தங்கள்கொடைக்கரமானது எக்காலத்துந் தங்கியிருப்பதற்கு ஓர்கப்பலாயினது. இக்காலத்தில் வருந்துகின்ற ஏழையை அழகிய கையினு லாதரிப்பீர்கள். மூன்றுகாலத்தினு மெவ்விடத்தும் சிறப்புவளர்ந்தேறிய செய்கு முகம்மதொலியே எ-று.

காலம் மூன்று-இறப்பு, எதிர், நிகழ்வு. (௫)

கறுப்படை நெஞ்ச வழிபறி கள்வர் கருத்தையறிந்
துறுப்படை நம்பிகு வான்கள்கண் ணுள்ள முருகிநிற்பச்
செறுப்படை யன்னவர் கண்ணொளி போக்குஞ் செயலெறிந்து
வெறுப்படைந் தோட வியன்புரிசெய்கு முகம்மதுவே.

இ—ள். மாசடர்ந்த மனத்தொடு வழிபறிக்கின்ற கள்வர்களின் தூர்க் கருத்தையறிந்து உங்கண் முரீதீன்க ளஞ்சிநிற்க, அக்கள்வர்களின் கண்கள் ஒளிமழுங்கிக் குருடாயினவர்களாகத் திடுக்கிட்டோடும்படி வியப்பாகச் செய்த அற்புதத்தையுடைய செம்குமுகம்மது ஒலியே எ-று.

போக்குஞ்செயலெறிந் தென்புழி, கசுபினுற்கணித்துக் கரவிரற்சமிக்கையி னுயகரின் விநோத வற்புதத்தா னிகழ்ந்தமைபற்றி யுடனிகழ்ச்சிப் பொருளோடு பிறவினைப்பட்டு நின்றமைகாண்க. (௬)

கதிக்குஞ்சரநற் கலைத்தூய் தவத்தேய சாரணத்தீர்
ததிக்குஞ்சரமணி மன்தன்னக மாண்பிற்றன் நபியைக்
துதிக்குஞ்சர னோர் மையிற்றன்முன் காணச்செய் தூயவரே
மதிக்குஞ்சரண்சர ணேமௌனசெய்கு முகம்மதுவே.

இ—ள். பதவிக்குரிய சுவாசகலையையும், தூய்ய தவத்தையுமுடைய அற்புதத்தவரே, மகுரிபுதேசத்தவராகிய அப்துல்காதிறு முசாகிதென்பவ ரின் மனச்சந்தேகந் தீரும்பொருட்டு மதீனத்து றவுலா சரீபிலிருந்து நபி

நாயகமவர்கள் வெளிதோற்றிவரவும், அவ்வரசர்வெளிப்படையிற் காணவும் செய்த தூயதன்மையுடையவரே, யாவராலும் மதிக்கு முங்கள் திருவடிகளே யெனக்குப் புகலிடமாயின, மோனநிலைமையுடைய செய்கு முகம்மதுவே எ-று. (௫)

சிந்தனையாகத் தினங்கொளுந் துன்பஞ் செறியகங்க
சிந்தனையாகத் தானற்கலைசேர் தயவிற் செறுப்பீர்
சிந்தனையாகத் தினகர னேர்தனைச் செய்குவுநீர்
சிந்தனையாகத் தூயர்தவ செய்கு முகம்மதுவே.

இ—ள். எக்காலும் விசாரமுற்று உபத்திரவமிகுத்தலால் அடியேன் மனமானது கரைகின்றது. ஆதலால் இரங்குபவர்களே, நல்லிரக்கத்துடனத்துன்பத்தைநீக்குவீர்களாக. கடலைப்போன்ற அறிவையும் சூரியனை யொப்பான வசீகரத்தையு முடையவர் நீங்களன்றோ? விருப்பத்தோடுயர் தவம் புரியும் செய்குமுகம்மதுவே. எ-று. (௬)

துக்கத்தினின்று துணையி லிக்காலந் துணிபெறநன்
மக்கத்தினின்று மணியொளி போன்ற மகத்துவநும்
பக்கத்தினின்று பயன்கொழு மேழையைப் பார்த்தருள்வீ
ரக்கத்தினின்று குசேனபாசி யண்ணல் முகம்மதுவே.

இ—ள். துணையின்றிய விக்காலத்திற் கிலேசத்தினின்று மீட்சிதருந் துணிவுபெறும்படி, நல்லமக்கமென்ற நகரத்தின்க ணின்று மொளிர்கின்ற மணிபோன்று வந்தவரே, தங்கள் தகுதியினின்றும் பலன்பெறுமிவ் வேளையாகிய என்னைக் கண்ணுற்கணித்துக் கிருபை பாலிப்பீர்களாக. தடாகங்களினருகினிற்குஞ் சோலைகளின் பூவரும்புகளாற் தேன்திவலை சிந்துபாசிநகரத்து செய்கு முகம்மதொலியே எ-று. (௭)

கரணத்தவத்தொலி கட்புயத் தும்பதங் காணுமெனக்
கரணத்தவனுத் தரநபிசொற்கதைக் கோதிய சீர்
கரணத்தவத்தீரிறைதந்த வெங்கள் காருண்ணியரே
கரணத்தவரும் புகல்காணுஞ் செய்கு முகம்மதுவே.

இ—ள். எண்ணிக்கையுடைய தவந்தங்கிய வொலிமார்களின் புயங்களி னுமதுபாதமானது பெறுமென்று ஆண்டவனும் நபிநாயகமவர்களும் சொன்னபிரகாரஞ் சொல்லியவரே, ஒழுங்காங் கல்விசெறிந்த வணக்கத்

தையுடையவரே, ஆண்டவனூற்கிடைத்த எங்களின் கிருபைதங்கியவரே, காரணத்துடைய வொலிமார்களுந் தஞ்சங்காணும் செய்கு முகம்மதொலியே. எ-று. (அ)

கலைக்கடனேரறி வாளர் நும்மாட்டுச் செங்கைப் பிடித்து
கலைக்கட மன்னரும் பாதங்கடைப்பிடிக் காற்பிடித்து
நிலைக்கடல் வேண்டினி நின்றனரெங்கணி னீணிதியோ
சிலைக்கடலின்ப மெனக்கருள் செய்கு முகம்மதுவே.

இ—ள். கடலைப்போன்ற பெரிய வறிவினையுடையவரும் உம்முடைய பக்கத்திற் சிவந்த கையைப்பிடித்துங் காலநுட்பங்களறிந்து வெற்றிதங்கிய மன்னர்களும் உம்முடையபாதத்தை மோட்சத்துக்கிடமாகப்பிடித்து நிலைமைக்குத் தங்களுடைய வலிமையை விரும்பி யினிதாக நிற்கின்றார்கள். எங்களுடைய கண்களுக்குத் தெரிகின்ற நீட்சிமைபொருந்திய திரவியமே, சத்திக்கின்ற கடலைப்போன்ற மகிழ்ச்சியைத் தருவீர்களாக. செய்குமுகம்மதொலியே எ-று. (கூ)

ஞாலம்பழிச்சிய நான்மறைநாதர் நபி யகத்தைக்
காலம்பழிச்சிய வாறுங்கம் யாகூத்திற் காட்டியதாற்
றூலம்பழிச்சு மவரகங் காத்த தகையரெனறூர்
சீலம்பழிச்சியல் யார்நிகர் செய்கு முகம்மதுவே.

இ—ள். பூமியினிடத்துப் புகழ்பரவிய நான்குவேதத்தையுமுடைய நபிநாயகமவர்களின்கல்பை நாவாற்புகழ்ந்தெக்காலும்பேசியவாறு உங்களுடைய யாக்கூத்திய்யா வென்னும் சலவாத்தினுங் காக்கப்பட்ட அகமியமென்றும் வெளிப்படுத்தி யிருபபதால் உலகமுழுவதும் புகழ்கின்ற அந்நபிநாயகமவர்களும் விழித்து உங்களுடைய மனத்தையுஞ்சுட்டி நேர்மையுந் தகுதியுமுடையதாய்க் காக்கப்பட்டதென்றூர்கள். நல்லொழுக்கமும் புகழுமுடையவர்களே உங்களுக்கு யார்நிகர் இவ்வுலகின் செய்குமுகம்மதொலியே எ-று. (ௐ)

செய்குமுகம்மதுல் பாசி நாயகமவர்கள்பேரிற் பாடிய பதிகம் முற்றிற்று.



இஃது

ஷெ நாயகமவர்கள்பேரிற்பாடிய

# நேரிசை யாசிரியப்பா.

அறைதிரைப்புணரி யகிலமேகோளகையின்
மறைமுதற்பொருளாய் மனத்தளவுறைந்து
தொகைவகைவிரிந்துந் தோற்றிடாக்கடவு
டகைபரிசுணர்ந்துஞ் சாற்றிடவொணாதா
னவனருளொளியாய் நிவர்தகைகுத்துபா
யவமறவெங்குந் தவநிலைநிறுவிய
தோற்றுபுதோற்றித் துறைதொறும்விளங்கி
யாற்றலின்வல்ல வறிவமைந்துள்ளார்
மோதகமொலிகை யொருபிடியருந்தக்
காதகலெள்கின் கணக்கெலாந்தெரிந்தோர்
சாதுலித்தரீக்கி னேதகநிலையாய்க்
கூர்தவசெய்காய்க் குணக்குன்றனையார்
சின்னவயதிற் றுன்னியகலையெலா
மன்னியவறிந்து தென்னிகரில்லார்
மாண்புடைமன்னரும் வேண்பெறுமொலிகளுஞ்
சேண்படர்மஞ்செனுந் திருக்கரம்பற்றிக்
கொண்பெறுநெறியிஃ தென்னவின்புறாஉஞ்
செய்வனதிருந்துந் தெய்வீகவள்ளல்
தேசந்தொறுஞ்செறி செம்மனன்னெறியில்
பாசமுறுந்தெய்வப் பத்திகொண்முத்தியர்
பவத்தியலொரீஇயநற் றவத்தியலெடுத்துற்
றமலமார்யோக நிமலநாயகர்
நிறைமனேகோறு நீதியில்லமீறு

சிறைகொளநும்பான் முறையிடவூரா
ரவலமற்ருழிதரத் தவணைமுப்பாளு
ளவன்றரத்தகல்வ னன்ருவியழிவ
னென்றுரைத்ததுபோற் பொன்றினனயீறும்
வல்லவக்காரணஞ் சொல்லுதற்பாற்ரு
துவிதகட்கமலந் தோற்றிடநபியு
மவிரசலவாத்தை யதிகப்படுத்துமென்
றுவகையின்மொழிகேட் டுற்றியபுனிதர்
தவறிலாமக்கந் தனிலுறும்புங்கர்
தவமுயர்திலுருந் தக்கநன்னபியுந்
திவமுறுவேதுந் தெளித்திரென்பாலென
நவமெழுமிறைவயி னுடுதுமென்ருேர்
பவவிருட்சித்தெறி பரிதியினின்ருேர்
கனதவவொலிமார் கனகாம்புயத்திற்
றினமலர்செழுந்தாட் சேர்த்தியசெம்மல்
பணத்தலைநாகம் பரித்தபாரெலாங்
கணத்திற்காணுங் காரணக்கடவுள்
கவிமழைபொருவாக் கரதலக்கொடையர்
புவனமீரேழுப போற்றுவிற்பன்னர்
நனந்தலையுடைய நாயகர்கைதொட்
டினம்பொலியாவிக் கேதமற்றுறவர்
வனந்திகழ்மக்க மாநகரெங்குந்
தினந்துதியெய்காத் திரேகவசீகரர்
துன்னியவிகுவான் றுலங்குஹுல்க்காவி
னன்னடுப்பதங்களின் முன்னுறவைகுவர்
நன்னயதிக்குறுவி னயம்பெறுவோர்முகம்
பொன்னிதழ்த்தாமரை பூத்தனபோன்மே
நாயகக்குரிசி னயந்தருதீக்கி
னுயவரொலியெண வமைவதுமெய்யே
கமட்மொண்சினைப் கரத்தாற்கணித்துத்

தமதகம்பார்ப்பி னுக்குமத்தகையிற்
ருடர்தருசீடரைத் தொல்கருத்தளியாற்
படர்தரந்தம்மிற் படுத்துபாசத்தார்
காந்தமயத்தைக் கலந்திழுத்தாங்கு
சார்நதார்வயங்கொழுஞ் சாந்தமுடையார்
காமில்முகம்மிலாக் காணும்சுகூதி
னேமமக்அத்துஸ் சிதுக்கினிற்பவர்
தேடினுங்கிடையாத் திருவுணருளத்தர்
ஆடியிற்சுரூப மமைந்தவாறேபோ
ஞடினபேர்க்கு நயந்தருவள்ளல்
கோடுருந்தீட்சைக் குருக்களிற்றெளிந்தோர்
பார்க்குட்பார்ப்பவர் பயனயன்பெருகு
நோக்கினேக்குடைய நான்முறைக்கருணையர்
யார்க்குங்கிட்டா வருமருந்தனையர்
வாக்கிற்சுருதியே வளந்தருநாவினர்
நற்றுணைசெய்யு நாயகர்தம்மைப்
பற்றினர்பேறு பெற்றவர்கோடி
பன்னுளாகப் பலன்பெறநாடி
யிந்நானிறைவ னெளிதிற்றந்தனன்
மக்காமுல்பக்காவினு மருவியின்பமைந்த
மக்காமுல்பனுவினும் வாசிலானோர்
பாவுலவும்பொற் பாவுலவைகளால்
பூவுலகேபுகழ் பூவுலகாகப்
கழறநிறுத்திக் கலைமதியுடையோர்
கழல்பலவினைசேர் கலைமதியுடையோர்
அறியுளார்க்காணையா மஞ்சக்கரத்தோர்
அறிவிலார்க்கறிவெய் தஞ்சக்கரத்தோர்
பாகீரதிதீம் பாலெனச்செய்வோர்
பாகீரதின்முறைப் பாலெனச்செய்வோர்
பதிபுண்ணியத்தொழி பாதகமலத்தோர்
பதியெனப்பலர்பணி பாதகமலத்தோர்

கண்ணலம்வீசுங் கழிமாதுறவோர்
கண்ணுதற்பதிசூழ் கழிமாதுறவோர்
கலைவழாகமப்பொருட் கற்பகமானோர்
கலைவலார்க்கிருகைக் கற்பகமானோர்
கருணைசேர்முகாம்புயக் காவலர்மீது
மருணநேரபுல்கச ஞண்டகைமீது
நிவர்தருசெய்குமார் நேத்திரமீது
முவரிசூழ்புவியிடை யுவந்தினிதுனுற்றினன்
அகுமதுமுகியித்தீ னருயிர்ப்பாலன்
முகம்மது முகியித்தீ னெனுமுதிர்நாமந்
தனையுடையடியவ னினைதன்மற்றகற்றி
யவத்தையினுடற்று மாகுலமொதுக்கிப்
பவத்தையுநீக்கும் பதுமமென்கரத்தர்
உவந்துறுதரீக்கி னுத்தமந்தவர்குறை
யவந்தவிர்த்தின்ப மருளுமாண்டகையர்
பதிபுகழ்பாசெனும் பதியுளார்
நிதிசெய்குமுகம்மதா நேமமாதவரே.

நேரிசையாசிரியப்பா முற்றிற்று.

இஃது

குதுபுசெய்யிது முகம்மது புகாரித்தங்கள் அவர்கள்பேரில்

## ஆசிரியவிருத்தம்.

பாரோங்கு தகுதிமறை நபிமார்க டங்கடவுள்
பயகாம்பர் நபிபேரனார்
பயோததி நிகர்த்துவா லறிவினொடு சிற்குணப்
பகுதிசே ரொருமை கொண்டோர்

நேரோங்கு மட்டாங்க நிடையோ கத்தமையு
நிதிசெய்யி திசுமா யிலா
நிமலர்செய் யுக்கல மெலாந்திரண் டோருருவி
னிர்க்குணா தீத ரானோர்
சீரோங்கு பொறையறிவு தயையிரக் கங்கொளுஞ்
சிந்தை யானந்த முற்றோர்
தீதற்ற பேருற்ற போதூற்ற வுமறொலியைத்
தெய்வீக மாக்கி வைத்தோர்
காரோங்கு கைதவச் சந்ததச் சித்துடன்
கதியோக ழ்வு பெற்றோர்
கனமேவு செய்யி முகம்மது புகாரிநங்
கத்தனருள் பெற்ற வொலியே.

நெடியகுடை மலையநிகர் முடியரச ரடிபரவு
நிர்மலா னந்த தூய
நேமமுறு காயநிலை யோகமுறு மவ்வழியை
நிகரிலா தேர்ந் துற்றவா
அடியனும தடிபரவி நெடிய துயர் பவமொருவ
வன்புற்று நல்லருள் செய்குவீர்
அடிகளுய துரைகற்கி படியினணி பொருள்கக்க
வாங்குதுறை நீங்கு புகழீர்
கடியரவு விடமடிய பொடியவிரற் றுரும்பினாற்
களைந்ததிரு நபி பேரரே
காருமழை தூவவிளக் காருமெழுக் காதிரெனக்
காட்டு காரணக் குரிசிலே
படியதுரி யாதீத பாங்கரே புவியெலாம்
பதிபுகழ் சிறந்த வொலியே
யார்த்திபா செய்யிது முகம்மது புகாரியே
பாவியெனை யாளுநீரே.

முற்றிற்று.

இஃது

காமிலொலி விளக்கு சுலைமான் லெப்பை ஆலிம்

ஒலியுல்லா அவர்கள்பேரின்

# முனாஜாத்து.

அமிழ்தென மறைசேர்ந் தொன்றா தொன்றியு மாக்குலோக
மூமிழ்கதிர்ச் சசியுமொவ்வா தொருங்குதன் றுணையாலே
யிமிழ்சரா சரமதாக்கி யிலங்கிய கருணைவல்லோய்
கமழொளி முனாஜாத்தோதக் காத்தருள் செய்குவாயே.

கட்டளைக் கரசன்சேனைக் கபுறகத்தெழுப்பும் ஹல்லா
ஜிட்டநன் னசீகத்தோத விளைந்துளத் தின்பிராத்தி
தொட்டுமெஞ் ஞானமேவித் துலங்குவா ரிதியேகாட்சி
நட்டணைந் தியகுநாத சுலையுமா னொலியுல்லாலே. (௨)

தினகர னொளிபோனோக்கந் தெளிவிலா துற்றதென்னக்
கனநபி நால்வரோடு கண்டெதிர் கழறும்போது
மனவொளி யிறைவன்றந்த மாட்சியொன் றுண்டுமென்றார்
பினரிரு கண்பிறங்கும் சுலையுமா னொலியுல்லாவே. (௩)

பாசடை செறிந்துங்காயாப் பனசத்து ரொழுவினீரா
லாசிடை முட்புறக்கா யருமையி னளித்தகோவே
யாசிடைந் தயராச்சீர்த்தி யபூபக்கர் மரபாதேர்ந்து
வாசிடை யாதவண்மை சுலையுமா னொலியுல்லாவே. (௪)

வல்லமை செயும்புறாகான் வழிமுறை காத்தமூன்று
சொல்லகத் தினங்களோதுந் தோன்றலே செம்பொன்மேரே
பல்லகந் தெளியுங்காசா வலிமகப் பௌத்திரநீரே
நல்லக வளஞ்சேர்நாத சுலையுமா னொலியுல்லாவே. (௫)

கைதலக்கருவிபட்டுக் கால்விரலிரத்தஞ் சிந்தப்
பைதலுற் றழன்றன்பாகிம் சுலையுமா னொலியுல்லாவே. (கஉ)

என்னிதிச் செல்வமொவ்வா திலங்கிய வொலிகளாகப்
பன்னிரு தலைமுறைப்போர் பதிந்தாற்ற குதுபேயாவ
மன்னுநும் மடிமைப்பாத மருவிட வருள்வீரெங்கை
துன்னிய செல்வப்பேரா சுலையுமா னொலியுல்லாவே. (கங)

கருத்தினி னுரித்தெஞ்ஞான்றுங் கதிவழிக் கவனந்துன்றிப்
பொருத்திய தௌகீக்ஞானப் பொறிநயம் பொறித்தபேறை
யருத்திய விமலனாத வருந்தவ மியற்றிமாட்சி
பரித்தியா கியன்றபானே சுலையுமா னொலியுல்லாவே. (கச)

அகிலகோ ளகைக்கண்மாந்தி யனுதினம் வாழ்தலுற்றாப்
புகினது சதமோவென்னப் புந்தியிற் றேற்றிநாளுந்
தருகலைக் கியானந் தேர்ந்து தனியனைத் தனிமையாக்கிச்
சுகிர்தமேய்க் கிரகத்துய்த்த சுலையுமா னொலியுல்லாவே. (கரு)

ஆணவ மாயை காம்ப மகற்றிப்பே ரின்பம்பூத்து
வாணல நாட்கடோறும் வழிப்பகைத் திமிரமோட்டி
நாணயர் வாட்டமில்லா ஞாபக சித்திவாய்ந்து
பூணயம் பூண்டபூசா சுலையுமா னொலியுல்லாவே. (கசு)

தற்பகை களைமுரீதைத் தாங்கிய பிள்ளைலெப்பை
யற்புதத் தாலிமுன்றி னுதனை மழைபெய்வித்த
முற்பயன் சேரும்வண்மை பின்னவர் முன்னேன்சேய
சொற்பயன் பூண்டவள்ளல் சுலையுமா னொலியுல்லாவே. (கஎ)

புற்புத வுலகவாழ்க்கை பொய்யென மெய்வாட்கொண்டு
பற்பல வினைகொள்சேனை பலித்திடா தறுத்துவாட்சி
நற்பயன் கோண்டபெட்பி னுனிலத் துதித்தவாழ்வே
துற்பவங் களைந்துகாரும் சுலையுமா னொலியுல்லாவே (கஅ)

கைதலக்கருவிபட்டுக் கால்விரலிரத்தஞ் சிந்தப்
பைதலுற் றழுன்றன்பாகிம் சுலையுமா னொலியுல்லாவே. (கஉ)

என்னிதிச் செல்வமொவ்வா திலங்கிய வொலிகளாகப்
பன்னிரு கலைமுறைப்போர் பதிந்தற்ற குதுபேபாவ
மன்னுநும் மடிமைப்பாத மருவிட வருள்வீரெந்தை
துன்னிய செல்வப்பேரா சுலையுமா னொலியுல்லாவே. (கங)

கருத்தினி னுரித்தெஞ்ஞான்றுங் கதிவழிக் கவனந்துன்றிப்
பொருத்திய தௌகீத்ஞானப் பொறிநயம் பொறித்தபோறை
யருத்திய விமலனுத வருந்தவ மியற்றிமாட்சி
பரித்தியா கியன்றபானே சுலையுமா னொலியுல்லாவே. (கச)

அகிலகோ ளகைக்கண்மாந்தி யனுதினம் வாழ்தலுற்றுப்
புகினது சதமோவென்னப் புந்தியிற் றேற்றிநாளுந்
தருகலைக் கியானந் தேர்ந்து தனியனைத் தனிமையாக்கிச்
சுகிர்தமெய்க் கிரகத்துய்த்த சுலையுமா னொலியுல்லாவே. (கரு)

ஆணவ மாயை காம்ப மகற்றிப்பே ரின்பம்பூத்து
வாணல நாட்கடோறும் வழிப்பகைத் திமிரமோட்டி
நாணயர் வாட்டமிலலா ஞாபக சித்திவாய்ந்து
பூணயம் பூண்டபூசா சுலையுமா னொலியுல்லாவே. (கசு)

தற்பகை களைமுரீதைத் தாங்கிய பிள்ளைலெப்பை
யற்புதத் தாவிமுன்றி னுதனை மழைபெய்வித்த
முற்பயன் சேரும்வண்மை பின்னவர் முன்னோன்சேய
சொற்பயன் பூண்டவள்ளல் சுலையுமா னொலியுல்லாலே. (கஎ)

புற்புத வுலகவாழ்க்கை பொய்யென மெய்வாட்கொண்டு
பற்பல வினைகொள்சேனை பலித்திடா தறுத்துவாட்சி
நற்பயன் கோண்டபெட்பி னுனிலத் துதித்தவாழ்வே
துற்பவங் களைந்துகாரும் சுலையுமா னொலியுல்லாவே (கஅ)

சலனத்தி னுற்றவாக்கைத் தனைநத்தி நத்தாதாக்கப்
புலனத்தி சமாதிநத்திப் பொருணத்திப் பொறிகொண்முத்தி
தலநத்தி யிறைவனுணைத் தகைநத்தி மறமைப்பேறு
நிலைநத்தி நிலைத்தாநின்ற சுலையுமா னொலியுல்லாவே. (கக)

கவ்வைநல் லெண்ணையுற்ற கருமத்தி னிறைசுதந்திரப்
பவ்வநே ரட்டசித்திப் பவுசுடன் பணைப்பொன்றில்லா
தவ்விய மகற்றியாண்மை யணிநவப் பொறிதிப்பேறே
தவ்வைவய யகற்றாந்நாதா சுலையுமா னொலியுல்லாவே. (உ௰)

பெறுநய மியைந்துபெற்ற பெட்பின ராண்பாலார்க்கு
முறுநயத் துவப்புத்தன்றி யுறுதிகொள் பெண்பாலார்க்குந்
தறுகிடா துவந்துமென்றாந் தகுதிநற் கிருபைசெய்வீர்
துறையுயர் களிப்பானேங்குஞ் சுலையுமா னொலியுல்லாவே. ()

மன்னிய சலஞ்சலத்தி னடுவுற்று மருவும்பாஞ்ச
சன்னியந் தலைப்பெய்துற்ற தகைமையிற் சான்றோர்சூழ
தென்னெறி விழைவாநதந் தெளித்திடத் தெளித்தசெய்ய
கன்னவிற் றிறலார்காட்சி சுலையுமா னொலியுல்லாவே. (உஉ)

செய்தகைக் குரியசெம்மல் செய்துமுகம் மதுபுகாரி
ஐதகைக் குண்ணைநாவை யருளிய வண்ணறம்பி
யுய்தகைச் சுதனுவெனகு மோங்கிய வோங்கனேரா
துய்தகைச் சீலமேவுஞ் சுலையுமா னொலியுல்லாவே. (உங)

இருபுயத் துணைவரானோர் பவுத்திர ரெம்மனோர்க்கு
வருவினைத் துயரந்தீர்த்து வழிகொளு முறையினோடே
பெருநயப் பேறுகொள்ளப் பிணையெனு மிறையோன்பாலிற்
றருநய மிரப்பீர்தாதா சுலையுமா னொலியுல்லாவே. (உச)

மற்புய காஜாலீதம் மகவப்துல் கரீமென்றோது
தற்பயன் சுரநதநாதர் தனையர்நல் சகுதலிய்யாம்

புற்புயக் கடவுடந்த புண்யரப் துல்கரீமின்
சொற்பெறு பொருளின்வந்த சுலையுமா னொலியுல்லாவே. ()

அவிமச்ச முயிர்பெற்றோட வாக்கிய சுலைமான்லெப்பை
நவிமச்ச விளியினங்கை மருகியை மணந்தநாதர
கவர்மச்ச முட்குச்சீவன் காட்டிய ராஜாபௌத்ர
துவியச்ச முலகுதீர்ந்த சுலையுமா னொலியுல்லாவே. (உசு)

விண்மணி யுரிஞுசோலை விளரியின் வண்டுபாடுந்
தண்மதி தவழுமாடத் தளத்திடை மஞ்ஞையாடும்
வண்மணி சிறந்த காகிர் வாழ்க்கைநற் பீடங்கொண்டோர்
கண்மணி போன்றகாட்சி சுலையுமா னொலியுல்லாவே. (உஎ)

பொரியரை முட்டாட்கஞ்சப் பொகுட்டனர் துஞ்சும்பந்தர்
வரிவரா லிறுற்றேறன்முட்ட வழிநதிடும் பண்ணைவாவி
கரியுலா நாஞ்சிலென்னக் கடல்வளை காகிறின்கண்
ணுரிதுரி யாததீத சுலையுமா னொலியுல்லாவே. (உஅ)

வள்ளியோர் வரம்பினூற்கண் வனைதெளி தெளித்தானந்தப்
புள்ளியோர் சூழநாப்பண் போதினில் விழித்தென்மாட்டு
நள்ளுணர் முகியித்தீனென் நாதர்வந் துற்றாரென்னுந்
துள்ளியா ரலங்கற்றோளா சுலையுமா னொலியுல்லாவே. (உகூ)

வேறு.

எண்ணுங்கிசுறத் தாயிரத்தோ டியங்குமிருநூற் றீரேழு
கண்ணும்றபீகுல் லாகிறதிற் காட்டுமிருசெவ் வானுகறு
மண்ணுமதித்துக் கல்லென்ன மயங்கிக்கரைய விறைசேர்ந்தீர்
துண்ணென்றயராச் சுருதிநிலை சுலையுமானன் னவத்தொலியே.

கூம்புவங்க முல்லையொடு முந்நீர்கொதித்து நிறைந்ததெனச்
சாம்புவதனத் தொடுதனையர் சாற்றத்தன்கேழ் விழிநோக்கி
விம்புகொளாதின் றமைதியென வீசுங்கான்மற்றொடுங்கினவே
சோம்புநனுகாதிறைநோற்கும் சுலையுமானன்னவத்தொலியே.

முற்றிற்று.

பெரியசெய்குனு முகம்மது அபூபக்கர் மிசுக்கீன்
சாகிபு ஒலியுல்லா அவர்கள்பேரிற் பாடியது.

## விருத்தம்.

பூக்குங்கருணையி னூர்புவி தருமா மறைவழியே
காக்குங்கலை போக்குந்துயர் நீக்குங்கன முடைய
வாக்கும்புவி தூக்கும்மொழி வழிபாடுநன் முறையே
யாக்குஞ்செய மாக்கும்மிறை யவன்பாற்பகு தியுமே.

அதிகாரண முடையார்தய வுடையாரரு ளுடையார்
மதிமாமுக முடையார்மதி யுடையார்மன முறைய
சுதிசேர்முறை காட்டுந்தகை பூட்டுங்கன தியுமே
துதிமேவிய நெறிசாதுலி தூயோரவ ராமே. (உ)

நீராழிய வுலகெங்கணு நிலைதங்கிய புகழார்
பாராளுமை முடிமன்னரும் பணியுந்திற லுடையார்
காராழிய கரத்தாற்கொடை காணுங்கதி யுடையார்
ஓராழிய னிகர்பெட்பின ரோங்குந்தவ முடையார். (௩)

அஞ்ஞானமு மகலும்மொழி புகலும்மறி வுடைய
செஞ்ஞானமெய்க் குருவானவர் சேரும்வழி யதற்கே
கைஞ்ஞானநன் முறைகாட்டிய கருத்தாய்ந்தறி யுடனே
மெய்ஞ்ஞானநா னும்மாறரு மையாவவ ராமே. (௪)

தோற்றுங்கலை காசத்துறு பிணியான்மன முழல்போ
தூற்றும்மென தனைமாமுக மெலிவெய்திய துயில்போ
தாற்றுன்மகன் ரேற்றுந்துய ரகற்றென்றுரை யளித்த
போற்றூர்பணி மிசுக்கீனொலி பொற்றுளிறைஞ் சுதுமே. (௫)

மாவும்பல வழமுஞ்செறி வயற்காகிறென் னிதியார்
பாவும்பல புகழ்மேவிய பதியாமுகஙம திப்ருகிம்
சேவுந்திய திறலார்நயச் செழிப்புந்தபு பக்கர்
காவுந்திய மிசுக்கிஞெலி கழலுந்திறைஞ் சுதுமே. (சு)

பழிபாதக மொழிதுற்றிய பகைவர்க்குயிர் பயப்பக்
களிமேவிய வுரைகண்டிறை கருலும்முக மடிக
ளுளிகாரண மிதுதாமென வுவந்தாசன மிட்டான்
எளியேற்கருண் மிசுக்கிஞெலி யேந்தல்சா துலியே. (எ)

சிந்துங்கலை தங்கும்மதி செல்லாதுயர் மாடம்
விந்தைக்குறு மக்காநகர் சென்றேவிளையுண்டே
நந்தாவிறல் குத்பானவர் நயஞ்சேர்செய் கவர்தங்
கொந்தார்கரம் பிடித்தேதரீக் கெடுத்தேகுண மெடுத்தார். ()

மாய்த்தார்புவி நீத்தார்மன மூத்தாடிய முறைக
ளர்த்தார்மாயை பூத்தார்களிற் பூத்தாரிறை வனையே
வாய்த்தாரெம ரேத்தார்முறை சேத்தாள்வயப் புடனே
காத்தார்கதி சேர்த்தாள்கன மேற்றுதர வொலியே. (அ)

புவிமீதினி னமைந்துற்றிடப் பொருந்தாதுரைப் படியே
யவிர்மேவிநற் கதிர்கீண்டெழு மகடுற்றும மைந்தார்
துவிகச்சுசெய் வரும்போதவர் தூயோனிட முற்றார்
தவியாதரு டங்குந்துரை சான்றோனரு ளொலியே. (ய)

முற்றிற்று.



செய்குனா நூகு சாகிபு லெப்பை ஆலிம் ஹாஜி ஒலியுல்லா
அவர்கள்பேரிற் பாடிய

## இரட்டை யாசிரியவிருத்தம்.

செங்குண் டிணைத்தோ ளின் மிலைமாலை நபிநாதர்
சேர்ந்தபுகழ் வித்திரியாவுஞ்
செய்யரிய நபிநாவின் விளைவாகி மறையான
செப்புமுயர் புறக்கானையுஞ்
சேடவவ தானமா வுரைசெய்து தந்தனர்
செவ்வனே விதிகளோர்ந்து
சேதகமி லாதுவணி யாப்பினொடு கோப்புடன்
செய்தொழிற் கினியவல்லார்
தங்குன்று தீபநேர் சாதுலீ நாதர்மேற்
சார்புங்க மௌலூதுபற்
றக்கமுறை ருத்துபாவுஞ் சமைத்தினி தளித்தனர்
தகைமையெவர் சாற்றவல்லார்
தாதாடி வண்டுடைச் சிந்துமா நறவெனத்
தருமஜ் துடனன்பறும்
தகைதருக நீதுபிக் ஹாதிய தமிழ்ப்பாடை
யாவுரை கடந்தநீதர்
பங்குண்ட நானிலப் பாரெலாம் பயந்தரப்
பாடினார் பனுவல்செய்தார்
பயோதர நிகர்த்துவா லறிவினொடு சிற்குணப்
பன்மைநே ரொருமைகொண்டோர்
பத்திதவ முத்தியுறு கத்தனருள் பாங்கர்நன்
ஞமோதயக் கடவுளார்
பாண்குமுத வாயின்மொழி தேன்சிந்து பாங்கெலாம்
பதிந்துண்ப ருலமாக்களே

நங்குண்டு தடவாவி நளினமலர் கருமேதி
நாக்கறித் துக்குதட்ட
நடையன்னம் வதிபொருட் டுகள்வாளை புடைதாவ
நனிசிர மசைத்துமந்தி
நனைபனச பழமெறியும் பழனமுறு காகிர்நகர்
நாவாணர் சாதுலிக்கோவான்
நாதரா நூருவொலி சாகிபருள் செஞ்சரண
நாளுளுளத்தி னணிவாம்.

முற்றிற்று.

இவை

சாதுலி நாயக மவர்கள்பேரிற்பாடிய

## கீர்த்தனங்கள்.



கீர்த்தனம். இராகம்-சாவேரி. ஆதிதாளம்.

பல்லவி.

அருமைக்கா ரணநவ நீதா—ஆதி
யருளொலி களினற் பிரபோதா

அநுபல்லவி.

மருவிதழ்த் தாமரை சொரிகதிர்ப் பெருட்டனம்
வாவிதடக் கரைக்கண் டுவிக்கதம்ப மயிற்
றருமுதிர்ச் சோலைநின் றுடிடக் குயிலிசை
தங்கும் பழனஞ்செறி துங்கரு மைதரீ
னங்க நிறைபொறை தங்கு நெறிவள
ரெங்கள் குலநிதி புங்க மகிமையீ

ரன்பு வைத்தெனை யாண்டிட வேகடன்
முன்பி னுந்தெரி முஸ்தபா பேரரே. (அருமை)

சரணங்கள்.

கொண்டல் தவழ்ஜகுபர்க் குன்றுறைந் தென்றுமிறை
குணம்பெற வந்தமக மேருவே
கூறுங்களை வாரிதி யுண்டெழு
வீறுங்குரல் கொண்டு மொழிந்திடு (கொண்)

கோதற்ற வனஞ் செறிந்தேமத
கூடுற்றணை தத்தி வழிந்திடு (கொண்)

குவிதரு சலசமென் முகைகிளி தரவறு
பதமது நுகர்மது குளநனி பெருகப்பெய் (கொண்)

மண்டலத் தோர்புகழ் புண்டரீ கத்தாளை
மன்னு மடிமைதுய ரெண்ணிப் பறிந்திட

வங்க மதைப்பசுந் தங்கம தாக்கியே
மானனுக் கேயளித்த கோனே குணதிபரே

யரண்வளைந் துற்றிட சொரர்பயந் தொட்டிட
சரணம் புகுத்திய கரணம் விளைத்தவா

மகிமையற் றறநெறி வழுவிய பயனும
தடிபர விடமன துவகையி னிதமருள்

தாதா வொலிநுதற் பதித்த
பாதா மணற் றிட ருட்

டெளியற் றுலர்ந்த துரவத் துமிழ்ந்து
மறல்பற் களித்த துறவுற் றுறைந்தவரே
மறுமை நாளெனை யாட்கொளும் வள்ளலே
பொறுமை தங்கிய புண்ய வபுல்கசனே (அருமை)

பஞ்சபூ தங்கலந்த விஞ்சைத் தனுகரணப்
பல்வினைத் தொடரறுத்த பார்த்திபா,

பால்தங்கிய நிருமல நிபுண வின்
கோல்தங்கிய கொண்டலே நிகர்கரப் (பஞ்ச)

பகலோ னொளி பெற்ற வரோதைய
நிகலேற்ற வரும்பணி பொற்பத (பஞ்ச)

பகரரி திறையவ னிருபமொன் றருள்தரு
தவனநற் பதிபுக நிதியென வெமர்க்கருள் (பஞ்ச)

தஞ்ச நடியுடைய கஞ்சவிழி கொளக்கண்
தபையிற் புரந்தகல வுரைகண் டுரைக்குந்தினஞ்

சஞ்சீவிப் பூசண வென்சீவ சீவசாட்
சின்சொ லுடையவரே கெஞ்சும் பயலெனைக்கார்

தசன மணிமுடி யரசர் தினந்தொழு
மவச மகற்றுநும் பரிசனங் கொண்டுய்யத்
தருமத மொழுகிய லறிகில னிவனைநும்
பயனுறு பவருட னிதமருள் பெறவருள்

கோவே, மனநிறைந்த
வாழ்வே, தணப்பில்லாத

விறைபற் செறித்த நயமுற்ற பெற்றி
யிதயத் தினத்தி பெருகுந் தவத்தினரே

தருவி னோர்கரத் தப்துல்லா தருந்திரு
வுரிமை சாதுலி வொலிகளி னக்குபறே (அரு)

பல்லவி.

பன்னாளும் பகர்ந்தோதி யெய்த்துளத் தின்பமெ
னும்பதத் தருள்தேடி

அநுபல்லவி.

கண்ணகன் ஞாலத்தி னெறிமேவும்
பண்ணளி பாடுங்குமைத ரென்னகர் வாழும் (பன்)

சரணங்கள்.

விண்டி டொளுப்புகழ் கொண்டெழில் மூசுந்
தோன்றல் பயோததி கொங்கலை வீசுங்

குணசீலா மறைநேசா
அருளீசா கனநேசா நினைத்து (பன்)

சாயுச்சிய மாய்வந்த சாகர மேரா
சகல வொலிகட்குஞ் சம்பூர்ண சயோகா

சர்வநேரா கதிதாரா
நனிதேரா பொற்பூரா நினைத்து (பன்)

மாதவத் தோர்துதி மகத்வ நபிபேரா
மன்னு ரப்தல்லாதவ மைந்த ரபுல்கசனீதா

மகமேரா பவந்தீரா
ஏனைக்காரா துணைநேரா நினைத்து (பன்)

முற்றிற்று.

பல்லவி.

கருதினு லென்செென்ம முய்வ தல்லாது
கருதா விடினவந் தீர்வ தெப்போது

சரணங்கள்.

இருதிணைப் பாலர்வந் தேத்திடும் போதா
விருமையு மாணைசெ லுத்துநன் னீதா

தருநிகர் சாதுலி சாகிபு நாதா
சாரும் பவங்களைத் தீருமென் றுதா (கருதி)

பற்றலர் பணிந்திடு மலர்ப்பத மீது
பரவினன் பாவிநான் பரதவி யாது
குற்றங்க ளகன்றிடக் கூறினன் வாது
கூறுது வருகுவிர் குணத்தினிப் போது (கருதி)

மண்டலம் போற்றுங் குமைதறத் தூரா
மாதவஞ் சேரப்துல் லாவின் குமாரா
அண்டர் வணங்கு மதிக சிங்காரா
அகுமது நந்நபி அருளுறும் பேரா (கருதி)

முற்றிற்று.

—o—

பல்லவி.

செப்பி டொணுக் குத்பே-செய்யிதே கசனலியே

அநுபல்லவி.

முப்புவி யோர்புகழ் முஸ்தபா பேரரே
முன்னரசே பின்னரசே மூதறி வேதரே (செப்)

சரணங்கள்.

வந்தனஞ் செய்தேனடி—வழங்குமிப் போதேகதி
தந்தி டொணுதோதுதி—சாருமிப் போதேதுதி
சாலோக சாமீப சாயுச்யரே (செப்)

சாந்தகுணு லயபோதா—சருவசீ வதநீதா
ஆய்ந்தமறை யுல்லாசா—அற்புதக் கதிநேசா
அண்ணலே மண்ணிலே
நன்னயந் தாரா (செப்)

கன்னல் செறிகுழைமதர் கருணையப் துல்லாகுமாரா
இன்ன லகற்றியெளி—யேனைக்கண் பாரும்நேரா
வேந்தரே சாந்தரே
ஏகாந்த நேசரே (செப்)

முற்றிற்று.

---

இஃது

செய்யிது இபுருகீம் சாகிபு ஒலியுல்லா

அவர்கள்பேரிற்பாடியது.

கீர்த்தனம்.

பல்லவி.

சீர்சேர் பாதந் தந்தெனக் கருள்வீர்
செய்யி திபுரு கீமொலியே

அநுபல்லவி.

ஏர்வள ரெங்கள் நபிதிருப் பேரரே
யெளியனைக் கண்பா ரேந்தலே நிதியே (சீர்)

சரணங்கள்.

பாண்டிய னுவி பதைத்திடக் களத்திற்
படைகொடு வென்ற பார்த்திபரே
நேத்திரம் போற்றறு பாடியிலங்கு
நிதியென நிவர்ந்த ஷகிதொலியே (சீர்)

அண்டி பன்னேய்செய் யலகைகளாவி
யற்றிட வரியு மாண்டகையே
துன்றிடு மெமர்க்குத் துணையெனவந்த
தோன்றலே சகிதே குத்பொலியே (சீர்)

மண்டலம் வகுதை நின்றிடச்சிறந்த
மாணிக்க மான மகத்துவரே
கொண்டலே குத்பே குணஞ்சேர்மதியே
கோவே யிபுறு கிமொலியே (சீர்)

மல்லிகை முல்லை மணங்கமழ்வாவி
மருவிடுந் தறுபா டெனுமூரிற்
புல்லிய பவனோய் போக்கிடும் புனிதா
பூபதி யிபுறுகி மொலியே (சீர்)

முற்றிற்று.

இவை

மாட்சிமைதங்கிய காகிர்
உமறுலெவியுல்லா அவர்கள் பேரிலியற்றிய

கீர்த்தனம்

பல்லவி.

செம்சேர் தகைமணியாத் தெய்வீகம் பூண்டோர்மைக்
கலக்கச் செய்யுமும றுலியே.

அநுபல்லவி.

ஐம்புலன் கலக்கு நயமுறைபோலே
ஆதியவனிடங் கலக்கு முமறுலியே (செம்)

சரணங்கள்.

விண்டோ யாரண நெறிவழியுங்
மண்டோ யாமா நவமுறையு
கொண்டல் நிகராக் கொடைக்கரமுங்
குணஞ்சேரத் துலங்கு முமறுலியே (செம்)

வாரணம்வழி காட்டிடச் சென்றீர்
வான்மதி தரச்சுண் ணம்புறக்கொண்டீர்
ஆரணமமுதின் மறையுண்டீர் அப்துல்
காதிறு தரும் வுமறொலியே (செம்)

வானவர் பணிமுகியித் தீனொலியின்
வழிசேர் காதிரி வகைமுறையின்
தானவனருட்சே ருத்தகையின்
தங்கும்புகழ்வி ழங்குமறொலியே (செம்)

தைக்கா வொலியின் தாதையரே
மிக்கா நவத்தின் மேன்மையரே
யெக்கா லும்வாழுங் காகிறரே
யெழிற்சே ரத்துலங்கு முமறொலியே (செம்)

முற்றிற்று.

---

# சாதுலிநாயகம்பேரிற் பதிகம்.

இவை:

காரைக்கால் உ. செ. மு. செய்கு இஸ்மாயிலெப்பை

அவர்களால் சொல்லியன.

காப்பு.

ஆதியேயழியாப் பேரின்பவாழ்வே யுன்னருள்திரண்ட பேரொளிவாம, சாதுலிப்பெருமான் றயவுசெய்தடியேன் றனக்கெழிற் சமுகந்தந்தெனதுக், கோதெலாமகற்றிக் குருமொழி பயிற்றிக் கொழுங்கதிர் முழுவதுங்குலவிச், சோதியா நிலவத் துணையருள்புரிவான் றாயருள் சுரந்திடுவாயே.

## இரட்டையாசிரியவிருத்தம்.

திருவிற்சிறந்துமயி லுருவிற்றிகழ்ந்தமரு
தேவர்க்கு மியாவர்க்குமன்
செப்பரியமற்றைய சிருட்டிகளைவைத்துமோர்
செய்யகா ரணமுதலதாய்ப்
பொருவிற்சிறந்தமறை கொடுபூதலத்துறும்
புரைதீர வந்தநபியின்
புத்திரபவுத்திரப் பூங்காவனத்திடைப்
பொன்ருது பூத்தமலரே
உருவிற்சிற்றந்தொருவ னருளிற்கலந்துவரு
முதயகாலப் பரிதியே
உலகிற்கிடந்துழலு மலகைக்குணந்தவிர்த்
தொளிர்ஞான மோனவடிவாய்க்
கருவிற்கனிந்துவரு கனகமேயுங்கள்செங்
கதிர்முகங் கண்டுய்யவே
காதலித்துள்ளவெனை யாதரித்திடவருக
சாதுலி நாயகம்மே (க)

வல்லான்வகுத்தமறை யறிவுசற்றுயினு
மதித்தொழு கிடாதபாவி
மறிபடாப்பொறிபுலா திகளினுக்கெளிதா
வசப்பட் டுழன்றபாவி
சொல்லார்கருங்குழற் குமரிமார்சிலருடன்
கூடித் திரிந்தபாவி
செய்யாதசெயலைத் தனைக்கோடியோதினஞ்
செய்திட் டலுத்தபாவி
நல்லானைநேசித்து நல்லொழுக்கம்பெரு
நாய்க்குமிளி யானபாவி

நாட்டமெல்லாமுலக நாட்டமேயன்றிநன்
நாட்டமில் லாதபாவி
கல்லாதபாவியே னாகிலுந்தங்கள்செங்
கதிர்முகங் கண்டுய்யவே
காதலித்துள்ளவெனை யாதரித்திடவருக
சாதுலி நாயகம்மே. (உ)

உலகிற்பிறந்துநாற் பதுவருடமாகியும்
முள்ளத்திருக் கொழிந்து
மொருகுணங்கொண்டுபர வெளியினிற்சென்றுநா
னுண்டென்ப தறமறந்து
மிலகும்பேரின்பவா நந்தமயமாகா
திருக்கின்ற பேதையடியே
னின்னுமிப்படியவல மாகவெத்தனைநா
ளிருந்துநொந் தழுவனந்தோ
பலகலாநிதியனைய நற்சீடர்நெஞ்சிற்
பளீரென்று வீசுமொளியைப்
பங்குபெற் றிதமடைய வின்னுமிப் பாழ்மனம்
பக்குவம் பெறவில்லையோ
கலகத் திருட்குழி விழாமலே யுங்கள்செங்
கதிர்முகங் கண்டுய்யவே
காதலித் துள்ளவெனை யாதரித் திடவருக
சாதுலி நாயகம்மே. (௩)

ஆசுகவி பாடிபல ராசசமு கங்களை
யடுக்கிலென் பலனுகுமோ
வானந்தவாரிபுகு மாத்துமசுகத்தினுக்
கங்கேது வழியுமுண்டோ
வீசுதெண் டிரையுலக மெல்லா மணுக்குல
விகாரரூ பங்களன்றோ

வேறென்ன புதுமையுண் டெனையன்றி யானும்
வெண்சுடர்த் திவலையன்றோ
பாசங்க ளின்னுமின் னும்மடிமையைச்சூழப்
பார்த்திருப் பதுஞாயமோ
பஞ்சபூ தக்கோவை துஞ்சுமுன் னேழைபகி
பக்குவம் பெறுதல்வேண்டும்
காசுகா சென்றியான் கதறும லுங்கள்செங்
கதிர்முகங் கண்டுய்யவே
காதலித் துள்ளவெனை யாதரித்திடவருக
சாதுலி நாயகம்மே. (௪)

ஆண்டெனக் கேழான பருவத்தி லேயுதய
பானுவந் றெனையழைத்தே
யாசிர் வதித்தமொழி மதுரமா ணிக்கமென்
னுகத்தி னிற்கின்றதே
கூண்டெனக் குற்றபல தொல்லையுஞ் சள்ளையுங்
கொண்டெனை விழுங்கிடாமல்
கொஞ்சமே னும்மிஞ்சி நிற்பதெல் லாமக்
கொழுஞ்சுடர்ப் பொருளதன்றோ
தீண்டிய கரங்களுங் கரமதன் றோவந்த
ரகசியஞ் செப்பலாமோ
திங்கள்கதி ரோடுசூழ் முனையிற் றிகழ்ந்திடத்
தீட்சைதந் தாழ்வதென்றோ
காண்டிடற் கரியசுப சோபனத் துங்கள்செங்
கதிர்முகங் கண்டுய்யவே
காதலித் துள்ளவெனை யாதரித் திடவருக
சாதுலி நாயகம்மே. (௫)

நாக்குருசி பார்த்துண வயின்றே கொழுத்தபேய்க்
குணமுநாய்க் குணமுமற்று
நாறுமல சலமற் றுறக்கம் விழிப்புமொரு
நாழிகை யிலாமலற்று

போக்குவர வரவற்று வாய்ப்பேச்சற்று மௌனம்
பொருந்துவது மெக்காலமோ
பொல்லாப் புலக்கரிக ளெல்லா மெனக்கொழுகி
பூசிப்ப தெக்காலமோ

நீக்குபோக் கென்றுநீர் நிர்விசா ரத்தெனை
நிறுத்துவது மெக்காலமோ
நினைவெலா மற்றுமோர் நினைவா யிருந்துநா
னிஷ்டைபெற லெக்காலமோ

காக்குந் திருக்கருணை யுள்ளவா நுங்கள்செங்
கதிர்முகங் கண்டுய்யவே
காதலித் துள்ளவெனை யாதரித் திடவருக
சாதுலி நாயகம்மே. (சு)

வீணாதி வீணனை வெகுபித்த லாட்டனை
வேசிகாந் தனைமடையனை
விஞ்சையில் லாவெறும் பஞ்சைப் பஞுதியை
வீரமில் லாக்கோழையை

பூணார மென்றுபல பொய்யைச் சுமந்திட்ட
புலைஞனைப் படுகொலைஞனை
பொல்லாத வம்பனைக் கல்லாத டம்பனைப்
பொறுமையில் லாவெறியனை

நாணாத மாயனைப் பேணாத வாயனை
நன்மைதெரி யாப்பேயனை

42

நன்றியில் லாதசள சண்டியைத் தொண்டுகொண்
டாள்வதினி யெந்நாளிலோ
காணாத காட்சிதரு வள்ளலே யுங்கள்செங்
கதிர்முகங் கண்டுய்யவே
காதலித் துள்ளவெனை யாதரித் திடவருக
சாதுலி நாயகம்மே. (எ)

பெண்ணாசை மண்ணாசை பொன்னாசை யென்றுநான்
பேதலித் துழலாமலும்
பேரறி விழந்துசிற் றறிவிற் சுழன்றுதிரி
பேய்மதங் கொள்ளாமலுந்
திண்ணமென் றுலகினைக் கொள்ளாம லுங்கொடிய
தீவினைகள் செய்யாமலுஞ்
செத்தசவ மாகியே சேதப் படாமலுந்
திருவினை மறக்காமலு
மெண்ணாத வெண்ணமெல் லாமெண்ணி யெண்ணியா
னேமாந்து போகாமலு
மிகபர மிரண்டிற்கு முபகாரி யாகியெனை
யேற்றடிமை கொள்ளுமையா
கண்ணகன் ஞாலத்தி லப்பனே யுங்கள்செங்
கதிர்முகங் கண்டுய்யவே
காதலித் துள்ளவெனை யாதரித் திடவருக
சாதுலி நாயகம்மே. (அ)

வெளியினிற் பேசவும் வெட்கமா கியபாத
கங்களைச் செய்த வீணன்

மேன்மையைத் தேடாது கீழ்மையைத் தேடியே
விசனித் திருந்தவினன்

தெளிவினைக் கல்லாது மருளினைக் கற்றதுசி
றப்பென் றிருந்த வீணன்
சீற்றம் படைத்துபல மாற்றங்கள் செய்துநற்
செயலற் றிருந்தவீணன்

அளியினுக் காளாவ தெவ்வித முறுங்கொலோ
அஸ்த்தகு பிறல்லாவென
அல்லுபக லாகவமு தானுநுமை யன்றியெனை
யாட்கொள்வதா ரையனே

களியெனக் கருள்செய்யு மாரியே யுங்கள்செங்
கதிர்முகங் கண்டுய்யவே
காதலித் துள்ளவெனை யாதரித் திடவருக
சாதுலி நாயகம்மே. (௬)

நூலாயிரங் கோடி கற்பினுங் கேட்பினும்
நும்மொழிக் கிணையாகுமோ
நுண்ணறி வினுக்கெலா நுண்ணறிவ தல்லவோ
நுங்கள்வாய்த் திருமந்திரம்

நாலா யிரங்கோடி தோத்திர மெலாமுங்க
ணன்றிக்கொ ரணுவாகுமோ
நல்லா ரெலாமுங்க ளடியார்க ளல்லரோ
நானுமடி யேனல்லனோ

மேலான புந்தியென் பாலாகி யானுமேம்
பதவியைப் பெறுவதென்றோ
வித்தை யெலாங்குரு விலாமலே யாடுமோ
வேறென்ன சொல்வதுண்டோ

காலா னடந்தலுத் தோயாம லுங்கள்செங்
கதிர்முகங் கண்டுய்யவே
காதலித் துள்ளவெனை யாதரித் திடவருக
சாதுலி நாயகம்மே. (௰)

---

இது நூலாசிரியராற் சொல்லியது.

நேரிசை வெண்பா.

புங்கமுறா துங்க புகழ்சா துலிபதத்தை
யங்கநிறை கொண்டோர்க் கவலமேன்—பங்கமறா
நும்மகத்தின் பான்மை நொடிப்பொழுதி லேயருளுந்
தம்மகத்தின் சான்றோர் தனை.









# விசேஷ விளம்பரம்.



இப் புத்தகம் வாங்க விரும்புவோர் கொழும்பு நெடுந்தெரு 28-ம் நிம்பர் ஞா. மு. க. கம்பேனியிலும், ஷை இரண்டாங் குறுக்குத்தெரு 15-ம் நிம்பர் கத்தீவு, செய்யிதுலெப்பை காசுக் கடையிலும் சாதுலிநாயக புராணகாவியம் பெற்றுக்கொள்ளலாம்.

விளக்கு: அ. க. முகம்மது

முகியித்தீன் ஹாஜிப்புலவர்.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௰௨ | ௮ | ஹல்லா | ஹல்வா |
| ,, | ௯ | யொழி | யொளி |
| ,, | ௨௫ | மெமரை | னெமரை |
| ,, | ௨௪ | புரந்தாளும் | புரந்தாளுந் |
| ௧௰௪ | ௨௫ | நபினயக | நபிநாயக |
| ௧௰௬ | ௧௪ | கெளுதி | கெழுதி |
| ௧௰௭ | ,, | விருப்பின் | விரிப்பின் |
| ௧௰௮ | ௧ | கழிறு | களிரு |
| ,, | ௨ | கழிறு | களிரு |
| ,, | ௨௭ | நின்பல | நிற்பவ |
| ௧௰௯ | ௭ | நும்தாழ் | நுந்தாள் |
| ,, | ௧௯ | கலைவளா | கலைவழா |
| ௧௧௰ | ௧௭ | வியன் | வியங் |
| ,, | ௧௭ | மற்மெரும்புழி | மற்றெம்புழி |
| ௧௧௧ | ௨ | ழிணை | திணை |
| ,, | ௧௫ | ஜிபுரீயீர் | ஜிபுரியீல் |
| ,, | ௨௫ | அதி | அது |
| ,, | ௨௬ | வழர்த்த | வளர்த்த |
| ௧௧௨ | ௧௬ | அகுது | அஃது |
| ௧௧௪ | ௨௪ | சித்தி | சித்தீ |
| ௧௧௫ | ௧௧ | இகுது | இஃது |
| ௧௧௬ | ௧௰ | னெழிநபி | னெழினபி |
| ,, | ௨௫ | அகுது | அஃது |
| ௧௧௭ | ௬ | ஙிதி | ணிதி |
| ,, | ௧௰ | அரவ | அரவு |
| ௧௧௮ | ௭ | றவுலாவில் | றவுலாவிற் |
| ௧௧௯ | ௫ | வபு | லபு |
| ,, | ௧௧ | அகுது | அஃது |
| ,, | ,, | குதிஎன்ன | குதிர்என்ன |
| ௧௨௰ | ௨௮ | துல் | துவ் |
| ௧௨௧ | ௭ | கொழும் | கொளும் |
| ,, | ௭ | க்க | த்க |
| ௧௨௫ | ௪ | பிளை | பிழை |
| ௧௨௭ | ௧௮ | அத்தாகிய | அத்தாதிய |